# 1
# வடமொழிச் சென்ற தென்சொற்கள்

உலகத்திலுள்ள மொழிகளெல்லாம் Turanian, Semitic, Aryan என முப் பெரும் பிரிவுகளா யடங்குமென்பது முன்னர்க் கூறினாம். அவற்றுள் ஆரியக் கவையில் Teutonic கிளைக்குத் தலைமையானது வடமொழி யென்னும் சமற்கிருதம்; ஏனைய German, Dutch, English முதலியன.

மேனாட்டு மொழியாராய்ச்சிப் புலவர், இலக்கண ஒற்றுமையாலும் இலக்கியச் சொற்களின் ஒற்றுமையாலும் வடமொழியைச் செருமன் மொழிக்கு இனமாகக் கண்டிருக்கின்றனர். ஆகவே, இந்திய ஆரியரும் செரு மானியரும் ஒரு காலத்தில் ஒரே வகுப்பினராய் ஒரேயிடத்தில் (மேலாசியா) வாழ்ந்திருக்க வேண்டும். சரித்திர நூல்களெல்லாம் பெரும்பாலும் கிறித்து வுக்குப் பிற்பட்டனவாதலின், அவர்க்கு முற்பட்ட வரலாறுகளை யெல்லாம் உணர்தற்கு மொழிநூலே சிறந்த கருவியாகின்றது. ஒரு வகுப்பாரை இன்னா ரென்று உணர்தற்கு அவரது பேச்சினும் சிறந்த கருவி பிறிதொன்றில்லை.

> **“நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்**
> **குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.”** (குறள். 959)

ஆகவே, இந்திய ஆரியர் செருமானியர்க்கு இனமென்றும் அவர் பேசிய மொழியும் செருமனுக்கு இனமென்றும் அறியப்படும். அதை அவ்விரு மொழிகட்கும் இன்றியமையாத சில பொதுச் சொற்களாற் காட்டுதும். இங்கிலீஷ் செருமன் மொழியினின்றும் பிறந்ததாதலின், கீழ்வரும் இங்கிலீஷ் சொற்களெல்லாம் செருமனென்றே தெளிக. (Jutes, Saxons, Angles என்ற மூவகைச் செருமானிய வகுப்பினரே கி.மு. 449-ல் செருமனியினின்றும் பிரித்தானியாவுக்குப் போய் இங்கிலீஷ் மொழியை வழங்கினவர்.)

| English | சமற்கிருதம் | English | சமற்கிருதம் |
|---|---|---|---|
| brother | பிராதா | decimal,decem | தசம் |
| book | புஸ்தகம் | dentem | தந்தம் |
| common | சாமானியம் | eight | அஷ்டம் |
| create | சிருஷ்டி | establish | ஸ்தாபி |
| daughter | தௌஹித்ரி (மகளின் மகள்) | father | பிதா |
| | | germ | கிருமி |

| English | சமற்கிருதம் | English | சமற்கிருதம் |
|---|---|---|---|
| generation | ஜெனனம் | str. (an old suffix) | ஸ்திரீ |
| gravity | குருத்துவம் | stand | ஸ்தா (root) |
| house | ஆசயம் | shaving | க்ஷுவரம் |
| heart | ஹிருதயம் | special | விசேஷம் |
| item | இதம் | seven | சப்தம் |
| inter | அந்தர் | six | சஷ்டி |
| idea | ஐதீகம் | sui | சுயம் |
| ignorance | அஜ்ஞானம் | serve | சேவி |
| ignition, ignis | அக்னி | she | சா |
| murther,murder | ம்ருத் | sweat | ஸ்வேத |
| mother | மாதா | terra | தரை |
| mediator | மத்தியஸ்தர் | tree | தரு |
| name | நாமம் | two | த்வா |
| nose | நாசி | three | திரீ |
| nine | நவம் | that | தத்; |
| person | புருஷன் | they- | தே |
| prime | பிரதமம் | voice, vocal | வாக்கு |
| preacher | புரோகிதர் | verto(root) | விருத்தம் |
| science | சாஸ்திரம் | word | வார்த்தை |

இனி இலக்கண ஒற்றுமைகளாவன:

1. மெய் மொழி முதலாதல்
2. ஒருமை இருமை பன்மை என எண் மூன்றாதல்
3. பெயரெச்சங்கள் பால் எண் வேற்றுமைகளைக் காட்டல்
4. இலக்கணப் பால் (grammatical gender)
5. வினைமுற்றுகள் பால் காட்டாமை
6. பயனிலை வினைச்சொல்லாயே யிருத்தல்

இவை போன்றவை இன்னும் எத்துணையோ உள. முக்கியமானவை மட்டும் இங்கு உதாரணமாகக் குறிக்கப்பட்டன.

ஆரியம் என்னும் குறியீடு முதன்முதல் ஆரிய மொழிகள் எல்லா வற்றிற்கும் பொதுவாய் வழங்கிற்று. பின்பு Teutonic வகுப்புக்கு மட்டும் வழங்கத் தலைப்பட்டது. அதன் பின்பு இந்திய ஆரிய மொழியாகிய சமற்கிருதத்திற்கே சிறப்பாய் வழங்கிற்று. இந்திய ஆரியர் நால் வகுப்பாராயினும், அவர்களுக்குள் பிராமணர் மட்டும் இக் குறியீட்டைத் தமக்கும் தம் மொழிக்கும் வரையறுத்துக்கொண்டனர்.

ஆரிய வகுப்பு மொழிகளுள் Latin, Greek என்ற இரண்டும் முற்பட்டவை. Teutonic மொழிகள் அவற்றிற்குப் பிற்பட்டவை. ஐரோப்பிய

அரசுகட்கெல்லாம் முந்திய கிரேக்க சரித்திரம் கி.மு. 3000ஆம் ஆண்டி னின்று தொடங்குகின்றது. ஆகவே, சமற்கிருத ஆரியர் வட இந்தியாவிற் குடியேறினதும் அதே காலமாய்த்தா னிருக்கவேண்டும்.

உலகில் முதன்முதல் உண்டானது தமிழ். தமிழர் (கி.மு. 8000) குமரிநாட்டினின்றும் வடக்கே போய்ச் சின்ன ஆசியாவில் குடியேறினர் என்பது பாபிலோனியக் குகை வெட்டாலும் குழி வெட்டாலும் தெரிய வருகின்றது. அங்கேதான் தமிழ் சேமியக் (Semitic) கிளையாகத் திரிந்தது. எபிரேயம் (Hebrew), அரபி (Arabic) முதலியன சேமியக் கிளை மொழிகள். அவற்றையடுத்து Latin, Greek முதலிய ஆரியக் கிளை மொழிகள் பிறந்தன. ஒரு தாய்மொழியினின்றும் ஒரு கிளைமொழி உண்டாயிருப்பின் அதன் இன்றியமையாத முதற் சொற்களெல்லாம் தாய்மொழியா யிருக்கும். ஏனையவெல்லாம் அதற்குச் சொந்தமான ஆக்கச் சொற்களே. அவற்றுள் ஒரு பகுதி பிறமொழிகளினின்றும் கடன்கொண்ட திசைச்சொற்களா யிருக்கும். ஒரு மொழியின் ஆக்கச்சொற் பெருக்கத்திற்கும் சுருக்கத்திற்கும் காரணம் அம் மொழியை வழங்கும் மக்களறிவே யாகும்.

ஆரியக் கிளைகளில் ஒன்றாகிய Teutonic என்பது Greko-Latin என்ற பெருங்கிளையினின்றும் கிளைத்தபொழுதே (அதாவது சமற்கிருத ஆரியர் இந்தியாவுக்கு வருமுன்னமே) அதில் நூற்றுக்கணக்கான தமிழ்ச்சொற்கள் கலந்திருந்தன. ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்து தமிழ ரோடு (கி.மு. 2500) கலந்தபின் எண்ணிறந்த தென்சொற்கள் வடமொழியிற் கலந்தன. ஆரியர் வருமுன்னும் வந்தபொழுதும் வடஇந்தியாவில் வழங்கிவந்தவை யெல்லாம் கொடுந்தமிழ் மொழிகளே.

ஆரிய வருகைக்கு முன் சமற்கிருதத்தில் அல்லது Teutonic மொழிகளிற் கலந்திருந்த தென்சொற்களிற் சில:

| Tamil | English | Sanskrit |
|---|---|---|
| அரத்தம், இரத்தம் | red | ரக்தம் |
| அரசன் | Rajah | ராஜா |
| அகம் | Gk. eikos, house | ஆசயம் |
| ஆன்மா | animos | ஆத்மா |
| இலக்கம் | lakh | லக்ஷம் |
| உதகம் | water | உதகம் |
| எட்டு | eight | அஷ்டம் |
| கோடி | crore | கோட்டி |
| சக்கரம் | circle | சக்கரம் |
| சக்கரை | saccharine | சர்க்கரை |
| சின்னம் | signum | சின்னம் |
| தரை | terra | தரா |
| தரு | tree | தரு |

| Tamil | English | Sanskrit |
|---|---|---|
| நாகம் | snake | நாகம் |
| நாவாய் | L. navis | நெளகு |
| பாதர் | father | பிதா |
| பாதம் | foot | பாதம் |
| பேசு | speak | பாஷி |
| மன் | man | மநு |
| மத்தி | mid | மத்தி |
| மனம் | mind | மனஸ் |
| மாத்திரை | metre | மாத்ரா |
| மாதர் | mother | மாதா |
| வண்ணம் | varnish | வர்ணம் |
| வடிவம் | body | ப்ரதிமா |
| வரை | marry | வரி |
| வாரணம் | L. marinus | வருணா |
| வேட்டி | L. vestis | வேஷ்டி |
| | vesture | வஸ்த்ரம் |

சமற்கிருதத்திற்கு முதற்காவியம் இராமாயணம். இராமர் இருந்தது இடைச்சங்க காலம். ஆகவே, தொல்காப்பியமும் அகத்தியமும் இராமாயணத்திற்கு முற்பட்டனவாம். வடமொழிக்கு முதல் இலக்கணம் பாணினீயம். பாணினி பாரதத்திற்கும் பிற்பட்டவர். பாரதகாலம் 1000 B.C.; இராமாயண காலமோ 2000 B.C.; ஆகவே, பாணினீயம் தொல்காப்பியத் திற்குக் குறைந்தது ஆயிரம் ஆண்டுகட்குப் பிற்பட்டதாகும். ஆரிய வருகைக்கு முன்னமே தமிழர் முத்தமிழிலும் பல்கலைகளிலும் தேர்ந்திருந் தனர். அகத்தியம் வழிநூலே யன்றி முதனூலாகாது. இதன் விரிவை யெல்லாம் எமது முதற்றாய்மொழியிற் (The Classica Prima) கண்டுகொள்க.

இனி, வடமொழிச் சென்ற தென்சொற்களாவன:

**மதம்**

மதி + அம் = மதம்.

தேய் + உ = தேய்வு - தேவு - தே - தீ.

தேய்வு + அம் - தேய்வம் - தெய்வம் Gk. Theos.

தேய்வம் - தேவம் - தேவன்.

தெய்வம் என்பது முதலாவது நெருப்பையும் பின்பு சிவத்தையுங் குறிக்கும். (திருவாசக விரிவுரை காண்க.)

சிவ + ம் = சிவம் - சிவன் - சிவை.

உரு + திரம் = உருத்திரம் - உருத்திரன் - ருத்ரன் = சினன். உருத்தல் = சினத்தல், திரம் தொழிற்பெயர் விகுதி.

அரி + அம் = அரம் - அரன்.

ஒ - ஓம் - ஓங்காரம் or ஒகாரம்.

ஓவென்பது மூல வொலிக்குறிப்பு. ஒல், ஒலி, ஓலம், ஓசை, ஓதை முதலிய ஓசைபற்றிய சொற்களெல்லாம் ஒகர ஓகார முதன்மொழிகளாதல் காண்க. ரீ என்பது ரீங்காரமானாற் போல ஓ என்பது ஓங்காரமாயிற்று.

உரு + திரம் + ஆக்கம் = உருத்திராக்கம் - ருத்திராக்ஷம் (உருத்திராக்க விளக்கங் காண்க.)

வி + பூதி = விபூதி. புழுதி - பூதி; வி, உபசர்க்கம்.

**ஆணவம்:** ஆள் - ஆண் - ஆண்மை - ஆணவம்.

மாய் + ஐ = மாயை: ஐ. - தொ. பெ.வி.

காமி + அம் = காமியம், காம் + இயம் என்றும் பிரிக்கலாம்.

இயம் ஒரு தொழிற்பெயர் விகுதி.

காம் + அம் = காமம்.

காம் + அர் = காமர்.

குமரன், குமரி - கொம்மை(திரட்சி) என்னும் பண்பினடியாகப் பிறந்தவை. cf. virgin Gk. orago - to swell. சேய் (Zeus), முருகன், வேலன் என்பன குமரற்கு மறுபெயர்கள்.

சண்டிகை - சள் - சள்ளை - சண்டை - சண்டன் - சண்டி -சண்டிகை.

காளி : கள் - கள்ளம் - காளம் - காளி.

- களம் - களங்கம் = கருப்பு.

சினன் : சின + அம் = சினம் - சினன்.

விஷ்ணு : விண் - விண்டு. விண்ணைப்போல் நீலமாயும் எங்கும் நிறைந்துமிருப்பவன்.

மாயோன் : மா - மாய் - மாயோன். மா = கருப்பு.

கிருஷ்ணன்: கள் - கள்ளன் - கண்ணன்.

மாயோன், கண்ணன் முதலிய பெயர்கள் கிருஷ்ணாவதாரத்திற் புதிதாய் உண்டானவையல்ல. அதற்கு முந்தியே வழங்கினவை. "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்று தொல்காப்பியத்திற் கூறப்பட்டிருப்பது காண்க.

அரங்கன்:- அரங்கம் - அரங்கன். அரங்கம் = ஆற்றிடைக்குறை.

இராமன்:- இராமம் - இராமன்.

இராமம் என்பது திருமண்காப்பு. இராமம் = இரேகை வரி. இராமக் கரும்பு என்னும் வழக்கு நோக்குக. வடநாட்டில் இதைத் தவறாக நாமம் என்று வழங்குகின்றனர். இராமர் ஒரு வைணவ பக்தர். இராமருக்கு முன்பே மால் வழிபாடு தமிழ்நாட்டிலிருந்தது.

இரண்டு, அலம்பு, இலக்கு, உலாத்து முதலிய சொற்கள் உயிர்முதல் நீங்கி வழங்குவதுபோல அரங்கன் இராமன் முதலிய சொற்களும் உயிர் முதல் நீங்கி வழங்குகின்றன.

நாராயணன்: நாரம் + அயனன்.

வருணன்: வார் + அணம் - வாரணம் - வாரணன் - வருணன்.

வார் + இ = வாரி. வார் + இதி = வாரிதி.

ஆத்மா: ஆன் + மா = ஆன்மா. ஆன் = பசு. மா பெருமைப் பொருள் விகுதி. மான் என்பது ஈறு குறைந்து நின்றதெனினும் ஒக்கும். Gk. animos. வடமொழியில் ஆத்மா சரீரத்தைக் குறிக்கும்.

நரன்: நரை + அன் = நரன் = நரைப்பவன்.

பதி: பதிக்குத் தலைவன்; இடவாகு பெயர். பதி = நகர், வீடு.

பசு: பாசத்தாற் கட்டப்பட்டது பசு.

பாசம்: பசுமை - பச்சை - பாசி - பாசம். பாசம்போற் பிணிக்குங் கயிறு; கயிறுபோற் பிணிக்கும் மலம்.

பாசம் என்பதற்கு ஆசை யென்று பொருள் கூறினும் பொருந்தும்.

நரகம்: நரகல் - நரகம்.

cf. dungeon, from dung.

காயம் - ஆகாயம். காயம் = கருப்பு. 'காயப் பெயர்வயின்' என்று தொல்காப்பியத்துள் வருதல் காண்க.

பூதம்: பொது - பொதுக்கு - பொந்து - பூதம்.

உலகம்: உல + கு = உலகு. உலகு + அம் = உலகம்.

உலத்தல் = அழிதல்.

நீர் + அம் = நீரம் - நாரம் = நார் + அம்.

சலி + அம் = சலம். சலி + அனம் = சலனம். சலி + அதி = சலதி. சலித்தல் = அசைதல். சலிப்பு என்னும் உலக வழக்கையும் அசைவு என்னும் மெய்ப்பாட்டையும் ஒப்பு நோக்குக.

காலம் - கால் + அம் = காலம். சமை + அம் = சமையம். (விதி முதனிலைத் தொழிலாகுபெயர்.)

**வானநூல்**

**சூரியன்** - சுர் - சுரன் - சூரன் - சூரியன். Gk. sol. சுர் என்பது ஒரு வெம்மைக் குறிப்பு.

சுர் + அம் = சுரம் = காய்ச்சல், பாலைநிலம்.

மதி - காலத்தை மதித்தற் கிடமானது.

மதி + அம் = மாதம் cf. Moon. மானி + அம் = மானம்.

மதியால் உண்டாவது மத்தம். cf. L. lunacy, from luna.

தாரகை - தார் போல்வன.

புதன்: புத்தன் - புதன். புத்தி - உத்தி.

சனி: சல் - சல்லியம் - சனி.

கோள்கள் ஏழேயன்றி ஒன்பதாகா. ஆயின் நாள்களும் ஏழன்றி ஒன்பதாயிருத்தல் வேண்டுமென்றறிக.

இராசி = (race) கூட்டம்.

**மேஷம்**: மேழகம் - மேழம் - மேஷம்.

**ரிஷபம்:** விடை - விடலை - விடபம் - இடபம்.

ஆ + விடை = ஆவிடை. விடைத்திருப்பது விடை.

cf. குண்டாயிருப்பது குண்டை.

கோழிவிடை என்னும் உலகவழக்கைக் காண்க.

**கும்பம்:** கும் - குமி - கும்பு - கும்பம். கும்பல் = குவிதல்.

கும்பு + இடு = கும்பிடு. கும்பு + அல் = கும்பல்.

கும்பு + அம் = கும்பம்.

கும்பு + அனை = கும்பனை (company).

கும்பு - கூம்பு. குமி - குவி. கும்பு - குப்பு. குமி + ழ் = குமிழ்.

குப்பு + ஐ = குப்பை. குப்பு + அல் = குப்பல்.

**மீனம்**: மின் - மீன் - மீனம்.

கன்னி: கன் + இ = கன்னி. கன்னுதல் = பழுத்தல்.

cf. maturity, from mature - to ripen.

**துலாம்:** தால் - தாலம் - துலை - துலாம்.

**சிங்கம்:** சிங்கு + அம் = சிங்கம், அழிப்பது.

சிங்கல் = குறைதல், அழிதல்.

**கற்கடகம்**: -கல் + கடகம் = கற்கடகம், கல்நண்டு.

**வடவை**: வடம் + ஐ = வடவை, வடக்குள்ள நெருப்பு

c.f. Aurora Borealis, the northern light.

aurora - fire; borealis - northern.

வடவை + முகம் = வடவைமுகம். இதைப் பெடயா முகம் எனத் திரித்துப் பெட்டைக் குதிரை என்று பொருளுரைப்பர்.

"வடவைக் கனலைப் பிழிந்தெடுத்து" - வீரராகவர்

"அக்கடலின்மீது வடவனல் நிற்கவிலையோ" - தாயுமானவர்.

**பூகோளம்**

கோளம்: குழு - கோளம் - கோலி.

மண்டலம்: மண் + தலம் = மண்டலம் = வட்டம்.

பூமி வட்டமாயிருப்பது தமிழர்க்குத் தெரிந்திருந்தது.

இடை யென்னும் உறுப்புப்பெயர் அம்சாரியை பெற்று இடமானாற் போல, தலையென்னும் உறுப்புப்பெயர் அம்சாரியை பெற்றுத் தலமாயிற்று. இடப்பெயர்கள் பெரும்பாலும் சினைப்பெயர்களாகவே யிருக்கும்.

> "**கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்**
> **பின்சார் அயல்புடை தேவகை எனாஅ**
> **முன்னிடை கடைதலை வலமிடம் எனாஅ**
> **அன்ன பிறவும் அதன்பால என்மனார்**" (தொல். சொல். வேற். 21)

மண்டலம் - மண்டிலம். மண்டலித்தல் - வட்டமிடுதல்.

திங்கள் மண்டிலம் = திங்கள் வட்டம்.

**கண்டம்**: கண் - கண்டு - கண்டம்.

தீவு: தீர் + உ = தீர்வு - தீவு. தரைப் பாகத்தினின்றும் தீர்ந்திருப்பது. இதைத் த்வீபம் என்று திரித்து இரு பக்கத்தில் நீரால் சூழப்பட்டிருப்பதென்று பொருளுரைப்பர்.

**இலக்கணம்:**

இலக்கு + அணம் = இலக்கணம் - லக்ஷணம்.

இலக்கு + இயம் = இலக்கியம் - லக்ஷியம்.

இலக்கித்தல் = எழுதுதல் (சீவக. 180)

cf. grammar from Gk. gramma, a letter, Gk. grapho, to write, literature from letter.

கரம், காரம், கான், ஏனம் - தமிழ் எழுத்துச் சாரியைகள்.

**ஆய்தம்**: ஆய் + தம் = ஆய்தம். ஆய்தல் = ஆரிதல்.

**மாத்திரை**: மா + திரை = மாத்திரை. மாத்தல் = அளத்தல். மா + திரம் = மாத்திரம்.

மா என்பது ஓர் எண்ணளவுக்கும் ஒரு பரப்பளவுக்கும் பெயர்.

**பகுதி:** பகு + தி = பகுதி - பாதி. பகு - வகு.

பகு + அம் = பக்கம் - பக்ஷம் - பாகம். பக்கம் - பாங்கு -பாங்கன்.

பகு + அல் = பக்கல் - பகல் - பால்.

பகு + ஐ = பகை; பகு - பா; பாத்தீடு - பாதீடு.

பா + தி = பாத்தி. பகுதி - பிரக்ருதி.

**மூலம்**: முள் - முளை - மூலம்.

**விகுதி:** விகு + தி = விகுதி. விகு - வீ. வீதல் = முடிதல்.

விகுதி - விக்ருதி .

**சூத்திரம்**: சூ + திரம் = சூத்திரம், சுருக்கம்.

**வண்ணம்**: பண் - பண்ணம் - வண்ணம் - வண்ணகம்.

**சந்தம்:** - ஒலிக்குறிப்புப் பற்றியது. சந்தடி என்பது வழக்கு.

**பண்ணத்தி**: பண் + அத்தி = பண்ணத்தி.

**உருபு**: உரு + பு = உருபு; உரு + உ = உருவு. உருவு + அம் = உருவம். உருத்தல், தோன்றுதல்.

உரு x அரு. cf. உறு x அறு. உருவம் from ரூபம்.

**காரணம்**: கரு - கருவி - கரணம் - காரணம் - காரியம்.

கரு - கருப்பு - கருப்பம். மேகம் சூல்கொண்ட பின் கருத்திருத்தல் காண்க.

**ஏது**: ஏது என்று வினவுவதற்குக் காரணமாயிருப்பது.

cf. the why; the how.

**அம்போதரங்கம்:** அம்பு + தரங்கம்.

அம் - அம்பு, தரங்கு + அம் = தரங்கம், கரையைக் குத்துவது.

**உவமை** : உவ + மை - உவமை. உவத்தல் = விரும்புதல். உவம வுருபுகள் பெரும்பாலும் விருப்பு வெறுப்புப் பொருள்களிலேயே வரும். உவமை - உபமானம்.

எ-டு : நாட = விரும்ப. புகல - போல. புகலல் - விரும்பல்.

cf. like, similar, to be pleased with.

**உருவகம்**: உரு + அகம் = உருவகம். ஒன்றை மற்றோர் உருவாகச் சொல்லுதல். உருவகம் - ரூபகம்.

### இசை, நாடகம்

சுரம்: சுரை + அம் = சுரம். சுரை = துளை. நாகத்திற்குப் பிரியமானது நாகசுரம்.

**தொனி:** தொள் - தொளை - தொண்டை - தொனி.

**இராகம்**: அராகம் - இராகம். கலிப்பா வுறுப்பு.

**தாண்டவம்**: தாள் - தாண்டு - தாண்டவம்.

**நடம்** - நட - நடி - நடம் - நட்டம்.

நடி + அம் = நடம்.

நடி + அகம் = நாடகம்.

மண்டலம் = mandoline. சுரவீணை - saraphina.

**குடம்** - குடை + அம் = குடம், வளைந்திருப்பது. குடம் - கடம்.

**அரசு**

அரி - அரம் - அரவு - அரசு - அரசன், Gk. archon.

அரைசன் - அரையன் - Roy, Royal.

மரங்கட்குள் அரசுபோன்றிருப்பது அரசமரம்.

**சேரன்**: சாரல் - சேரல் - சேரன் - சேரலன் - கேரளன்.

**சோழன்**: சோளம் - சோழம் - சோழன்.

கள்ளர்வெட்டி(மக்கா)ச் சோளம் சோழநாட்டில்தான் சிறப்பாய் விளைகிறது.

**பாண்டியன்**: பாண்டி + அன் = பாண்டியன், வீரன்.

பாண்டி = வட்டம். பாண்டில் = எருது.

பாண்டியன் காளை போன்றவன்.

பாண்டவர் சம்பந்தப்பட்டவன் என்று Caldwell கூறியிருப்பது தவறு. பாண்டியன் பெயர் பாரதத்திற்கு 1000 ஆண்டுகட்கு முற்பட்ட வால்மீகி இராமாயணத்திற் கூறப்பட்டுள்ளது.

**சாமம்**: சமம் - சாமம்.

**பேதம்**: பேதி + அம் = பேதம்.

**தானம்**: தா + அனம் = தானம்.

**தண்டம்**: தண்டி - தண்டு - தண்டம்.

தண்டி + அனை = தண்டனை. தண்டி - தடி.

தடித்தல் = பருத்தல். தடிதல் = வெட்டுதல்.

முதல் தண்டனை தடியாலடிப்பதா யிருந்தது.

## சினைப்பெயர்கள்

**முகம்**: முகர் - முக + ம் = முகம். முகத்தல். முக - மோ.

முகர் - நுகர். முகம் - நுகம். முகம் - மூக்கு - மூஞ்சி - முகடு. முக + பு = முகப்பு. முக + வை. முகவை.

முகம் முதலாவது மூக்கின் பெயராயிருந்து பின்பு தானியாகு பெயராய் முகத்திற்காயிற்று. வடமொழியில் வாயை மட்டும் குறிக்கும்.

**இரத்தம்**: அரத்தம் - இரத்தம். அரக்கு, அலத்தகம் இரத்தி என்பவை செந்நிறத்தைக் குறிக்கும்.

பித்து + அம் = பித்தம் - பைத்தியம்.

கரு + பு = கருப்பு. கருப்பு + அம் = கருப்பம்.

மொழி - முழம் - முட்டு - முட்டி - முஷ்டி. பதி + அம் = பாதம்.

## வடிவுப் பெயர்கள்

**வடிவம்** = படி - படிவு - படிவம், body, பிரதிமா.

படி - வடி - வடிவு - வடிவம்.

**வட்டம்**: வள் + தம் = வட்டம். வள் + இ = வளி.

வள் + தி = வட்டி - வண்டி. வள் + அம் = வள்ளம்.

வள் + து = வட்டு - வண்டு = வளையல்.

வள் + தை = வட்டை - வடை. வளை + அம் = வளையம்.

வள் + ஐ = வளை. வளை + அல் = வளையல்

வளையம் வடமொழியில் வலயம் என்று வழங்கும்.

வட்டம் விருத்தத்தின் திரிபன்று.

## திசைப் பெயர்கள்

**திக்கு** + ஐ = திகை, திகைத்தற்குக் காரணமாயிருப்பது.

திகை - திசை.

குண்டு - குண்டம் - குணம் - குணக்கு.

**குடம்**: குடை - குடம், கதிரவன் வளையுமிடம் - குடக்கு.

**உத்தரம்**: உ + தரம் = உத்தரம். உ = மேல், உயர்வு.

தெற்கு + அணம் - தெற்கணம் - தெக்கணம் - தக்கணம். தெக்கணம் - Deccan. cf. கொங்கு + அணம் = கொங்கணம்.

## எண்ணுப் பெயர்கள்

இலக்கம் = எண். இப் பொதுப்பெயரே நூறாயிரத்துக்குச் சிறப்புப் பெயராயிற்று. lakh - லக்ஷம்..

எட்டு - அஷ்டம்.

கோடி - கோட்டி. கோடி = கடைசி யெண்.

நானா - நால் - நாலா - நானா.

## பல்வகைச் சொற்கள்

தமிழம் - த்ராவிடம்.

வேட்டி: வெட்டுவது வேட்டி. வேட்டி - வேஷ்டி.

cf. துணிப்பது துணி; அறுப்பது அறுவை.

முட்டி - முட்டியாற் செய்யும் போர். முட்டி - முஷ்டி.

cf. wrestle from wrist.

காகம் - காக்கா - காக்கை - காகம்.

மயில் - மயூரம். கூகை - கூகம்.

கலை - கல் + ஐ. படி + அம் = பாடம்.

சுற்றுரு - சூத்ரம். கலி + யாணம் = கலியாணம்.

கலித்தல் = தழைத்தல், யாணம் = புதுமை, புதுவருவாய்.

பழம் - பலம். பழு + அம் = பழம். அடவி - அடர்ந்திருப்பது.

பரி + அம் = பாரம் - பாரி. தரி + அம் = தாரம்.

தருக்கு + அம் = தருக்கம் - மிகுத்துக் காட்டுதல்.

குடி - குடில் - குடிலம் - குடீரம். சாய் + ஐ = சாயை.

இ - இதம் = இப்படி. பவளம் - ப்ரவாளம். நீல் + அம் = நீலம்.

இனி, அக்கா, அத்தா, ஆணி, அம்மா, அம்பா, அடவி, ஆளி, கடு, காவேரி, குசம், கூச்சம், குடி, கூன், குளம், கோட்டை, கட்டில், சாம், சா, பட்டணம், பொன், பள்ளி, வெள் முதலியன வடமொழியினின்றும் கால்டுவெல் கண்காணியார் எடுத்துக் காட்டிய தென்சொற்களாம். இன்னும் இவை போன்ற ஆயிரக் கணக்கான தென்சொற்கள் வடமொழிவாய்ப் பட்டுள்ளன.

தமிழரசு தலைதாழ்த்தபின் செந்தமிழாராய்ச்சி சில நூற்றாண்டுகளாக இல்லாமையான், வடமொழிப் புலவர் தமிழரை ஒரு பெட்டை மிரட்டு மிரட்டி வந்தனர். இப்போதோ மொழியாராய்ச்சியால் எண்ணிறந்த வடமொழி வாய்ச்சொற்கள் முடவன் குதிரைகளாய்த் திரும்பி வருகின்றன. சில தமிழர் வடமொழி வாய்ப்பட்ட சொற்களை யறிந்திருந்தும் அவற்றை எடுத்துக் கூறத் துணிந்திலர்.

**"மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையாற்**
**பொய்போ லும்மே பொய்போ லும்மே"**

வடநூலார் தமிழ்ச்சொற்களைக் கடன்கொண்டபின் அவற்றைத் தமிழ் வடிவில் வைத்திருப்பதில்லை. உடனே உருத் தெரியாது மாற்றி விடுவர். மறைக்காடு, பழமலை போன்ற இடப்பெயர்களைக்கூட வேதாரண்யம், விருத்தாசலம் என்று மொழிபெயர்ப்பாராயின் வேறு என் சொல்வது? இவ்வாறு எத்தனையோ தென்சொற்கள் வடமொழிச் சென்று வாகுகராய் வழங்குகின்றன. அவை நளராங் காலமும் நண்ணும்.

வடமொழியிலுள்ளதெல்லாம் வடசொற்கள் என்று மொழி நூலுணராதார் சிலர் கொண்டிருக்கின்றனர். மூல முதன்மொழியாகிய தமிழ் தவிர வேறு எந்த மொழியாவது பிறசொற்க ளில்லாததில்லை. ஒரு சொல்லை இன்ன மொழியென்று அறிதற்கு அதன் பகுதிப் பொருளையும் அதனின்றும் திரிந்த பல்வேறு சொற்களையும் பார்க்கவேண்டும். அவை எந்த மொழியிலுள்ளனவோ அந்த மொழிக்கே அது உரியதாம். வினைச் சொல்லாயின் புடைபெயர்ச்சி (Conjugation) வேண்டும். பெயர்ச்

சொல்லாயின் பெயரிலக்கணம்(Declension) வேண்டும். கல் என்னும் வினை கற்றான், கற்றாள், கற்றார், கற்றது, கற்றன, கற்ற, கற்க, கற்பித்தான், கற்கப்பட்டது, கற்றிலன், கலை எனப் பல வடிவுகளிலும் புடைபெயர வேண்டும். வடமொழியிலோ அது கலா (கலை) எனத் தொழிலாகுபெயராய் மட்டும் நிற்கும். இஃதோர் உதாரணம்.

சில வடமொழிப் பற்றுடையார் முனிவர் என்னும் சொல்லுக்கு முனி என்பது பகுதியென் றறியாமல், மவுனம் செய்பவர் முனிவர் என்று வடமொழிவழி யுரைப்பர். ‘ஐயன்’ என்னும் தமிழ் முறைப்பெயரை ஆரியன் என்பதின் சிதைவாகக் கூறுவர். இங்ஙனமே ஏனைச் சொற்களுக்கும் அவர் வடமொழியைக் கற்பிப்பதுண்டு.

ஒரு வகுப்பாராவது பிற வகுப்பாருடன் இயைபின்றித் தாமாய் உலகத்தில் வந்தவரல்லர். அங்ஙனமே தமிழ் தவிர ஒரு மொழியாவது பிறமொழியின் கலப்பின்றித் தானாய் வந்ததன்று என்று தெளிக.

**- “செந்தமிழ்ச் செல்வி” கடகம் 1931**

# 2
# வடமொழித் தென்சொற்கள்

உலகத்திலுள்ள மொழிகளெல்லாம் ஒரு பெருந் தாய்மொழியி னின்றும் உதித்தவை யென்பது வரலாற்று நூல் (History), குலநூல் (Ethnology), மொழிநூல் (Philology) முதலிய பல நூல்களாலும் வலியுறுத்தப்படும். ஆயினும், திசைச்சொல் வகையில் ஒரு வகுப்பார் புதியனவாய் ஆக்கிக் கொண்டனவும்,தாய்மொழியினின்றும் புதியனவாய்த் திரித்துக்கொண்டனவுமான இருவகைச் சொற்கள் ஒவ்வொரு மொழிக்கும் சிறப்பாகும். இவ் விருவகைச் சொற்களும் ஒரு கிளைமொழிக்குரிய அதன் தாய்மொழியைச் சாரும்; ஒரு தாய்மொழிக் குரியவை ஒரு பெருந் தாய் மொழியைச் சாரும். திராவிட மொழிகளை நோக்கத் தமிழ் ஒரு தாய்மொழி யும், ஆரிய மொழிகளை நோக்கத் தமிழ் ஒரு பெருந் தாய்மொழியுமாகும். எண்ணிறந்த தமிழ்ச்சொற்கள் இறந்துபட்டமையாலும், ஆரியச் சொற்களில் பல உருத்தெரியாதவாறு அத்துணைத் திரிந்துள்ளதினாலும், பல வடசொற்கள் வடமொழிச் சிறப்புச் சொற்களாகவே தோன்றாநிற்கும். ஏனைச் சொற்களை இதுபோதுள்ள தென்சொற் றுணைகொண்டே தென்சொல் லெனக் காட்டல் மொழிநூலான் முட்டின்றி முடிவதாகும். இடுகுறிச் சொற்களாயின் இவ் வரம்பிற் குட்படா.

ஒரு சொல்லை ஒரு மொழிக் குரியதென்று அறிதற்கு அதன் பகுதி (stem) அல்லது மூலம் (root) எம்மொழியிலுள்ள தென்று அறிதல் வேண்டும்.

ஒரு சொல்லின் பகுதி அல்லது மூலம் பலமொழியி லிருப்பின், எம்மொழியில், பகுதி இயற்கையானதென்றும், பொருள் சிறந்ததென்றும் அறிதல் வேண்டும்.

பல மொழியிலும், பகுதி வடிவிலும் பொருளிலும் ஒத்திருப்பின், எம்மொழியில் அதன் திரிசொற்களுள வென்றும், அவையும் பல மொழியிலிருப்பின், எதில் அவை கழிபலவென்றும் காண்டல் வேண்டும்.

எத்துணையோ தென்சொற்களை வடசொற்களென்று பன்மொழிப் பேரறிஞருங்கூடப் பகர்ந்து வருகின்றனர். அவற்றுட் சில வருமாறு :

**அகங்காரம்.** அகம் + காரம். அகம் – அவ்வுலகம், வானுலகு, மோக்ஷம். அகரச்சுட்டடியாப் பிறந்தது; சேய்மையிலுள்ள வானுலகத்தைக்

குறிப்பது; அம்பர் என்னும் சொற்போல. அ - அம்பர் - அம்பரம். இகரச் சுட்டடியாப் பிறந்த இகம், இம்பர் என்னும் சொற்கள் அண்மைச் சுட்டாய் இவ்வுலகத்தைக் குறித்தல் காண்க.

விண்ணுலகையும் மண்ணுலகையும் சேய்மை அண்மைபற்றி அவ்வுலகம் இவ்வுலகம் என்பது மரபு.

**"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்**
**கிவ்வுலக மில்லாகி யாங்கு"** (குறள். 247)

என்றார் திருவள்ளுவரும்.

வீடு என்னும் முத்திப் பெயர் இல்லத்தை உணர்த்தினாற்போல, அகம் என்னும் பெயரும் இல்லத்தை உணர்த்தும். வீடு = விடுதலை; விடுவது வீடு. பிறவித் துன்பத்தினின்றும் விடுதலை செய்வது பேரின்ப வீடு. வெயின் மழைத் துன்பத்தினின்றும் விடுதலை செய்வது இவ்வுலக வீடு.

இல் என்னும் வீட்டுப் பெயர் ஏழாம் வேற்றுமை உருபாய் உட்பாகத்தைக் குறித்தாற்போல, அகம் என்னும் வீட்டுப் பெயரும் உட்பாகத்தையும் உள்ளத்தையும் குறிக்கும் 'அகம்என் கிளவி' எனத் தனித்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்துள்ளும் கூறப்பட்டுள்ளது.

**காரம்:** கரி என்னும் வினையடியாப் பிறந்த தொழிற்பெயர். கரி + அம் = காரம்; முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர்.

cf: படி + அம் = பாடம். தவி + அம் = தாவம்.

கரித்தல் மிகுதல். காரம் மிகுதி.

கரி என்பது கடி என்னும் உரிச்சொல்லின் திரிபு.

ட-ர, போலி. ஒ.நோ: படவர் - பரவர். முகடி - முகரி.

உப்புக்கரிக்கும், உப்புக் கடுக்கும் என்பன ஒருபொருள்பற்றிய உலக வழக்கு. கடி என்னும் உரிச்சொற் பொருள்களுள் மிகுதியும் ஒன்று.

காரம் என்னும் சொல் முதலாவது மிகுதியை உணர்த்திப் பின்பு உறைப்பு மிகுதியை உணர்த்தும்.

கரி என்னும் சொல்லே அதி என்னும் உபசர்க்கம் (prefix) பெற்று அதிகரி என நிற்கும். அதிகரிப்பது அதிகாரம்.

அதி என்பது ஒரு மிகுதிப் பொருளுபசர்க்கம் (intensive prefix).

அதிகாரத்தை (ஆணை மிகுதியை or ஆற்றன் மிகுதியை) உடையவன் அதிகாரி.

ஒரு நூலின் பெரும்பாகம் அதிகாரம்.

அகம் கரிப்பது அகங்காரம். அகங்காரம் - ஆங்காரம்.

**அகண்டம்:** அ + கண்டம். அ, எதிர்மறை உபசர்க்கம்; அல் என்பதன் குறுக்கம். அல் என்னும் எதிர்மறைச் சொல்லே un என்று ஆரியமொழிகளில் திரியும். இல் என்பது il, in, im, என்று திரியும்.

**கண்டம்** : கண் - கணு - கண்டு - கண்டம்.

கண்டு - கண்டி. cf. துண்டு - துண்டி. தண்டு - தண்டி - தடி.

கண்போன்று இருப்பது கணு.

கணுக்கணுவாய் நறுக்குவது கண்டு.

கண்டு என்னும் பெயரினின்று கண்டி என்னும் வினையுண்டாகும். கண்டித்தல் கணுக்கணுவாய் அல்லது துண்டுதுண்டாய் வெட்டுதலும், அங்ஙனம் வெட்டுதல்போற் கடுமொழி கூறலும்.

கண்டிப்பது கண்டம். கண்டி + அம் = கண்டம். cf. துண்டி + அம் = துண்டம். தண்டி + அம் = தண்டம்.

கண்டி என்னும் சொல் இடைக் குறைந்து கடி என்றும் நிற்கும். cf. தண்டி - தடி.

கண்டம் என்பதன் நீட்டல் காண்டம். cf. கரணம் - காரணம்.

கண்டம் = துண்டு, பாகம், பிரிவு.

கண்டம் என்பது சதைப்பாகம் நிலப்பாகங்களையும், காண்டம் (canto) என்பது நூற்பாகங்களையும் குறிக்கும்.

Canto என்னும் ஆங்கிலச் சொல்லை cano(to sing) என்னும் இலத்தீன் வினையடிப் பிறப்பாகக் கொள்வது சிறந்ததன்று.

**அகதி:** அ - அல் என்பதன் கடைக்குறை.

கதி - செலவு, கட என்பதன் திரிபு.

கதித்தல் - செல்லுதல். கதி + அம் = கதம்.

இராக்கதம் - இராச் செலவு.

இராக்கதன் - இராச்சென்று உணவு தேர்பவன்.

இராக்கதன் - ராக்ஷஸன் (Transliteration)

நிசாசரன் (Translation)

நிசி = இரவு; சரம் - அசைவு, செலவு.

**அகந்தை:** அகம் - அகந்தை, அகத்தின் மிகுதி.

அகம் = மனம். cf. குடம் - குடந்தை (கும்பகோணம்). உடம் - உடந்தை. cf. உள்ளம் = ஊக்கம், உள்ளத்தின் மிகுதி.

**அகராதி:** அகரம் + ஆதி. அகரம் - கரம் சாரியை.

ஆரியர் இந்தியாவிற்கு வருமுன்னும் வடமொழியில் இலக்கணம் வகுக்கப்படுமுன்னும், தமிழில் இலக்கண நூல்களிருந்தன. அவற்றின் வழிநூல்களே அகத்தியமும் தொல்காப்பியமும். கரம், காரம் முதலிய எழுத்துச் சாரியைகள் மேனாட்டு மொழிகட்கில்லை. ஆதி பொதுச்சொல்.

**அகாரணம்:** அ + காரணம்.

கரணம் - காரணம். கரு + அணம் = கரணம்.

கருத்தல் - மேகம் கருத்தலைக் குறிக்கும்.

கரு - கார். மேகம் சூல் கொள்ளும்போது கருத்திருத்தலின் மக்களின் சூலும் கரு, கருப்பம் எனப்படும்.

மேகம் கருத்து மழைபொழிவது உலக வினைகட்கெல்லாம் காரணமா யிருத்தலின் கரு என்பது காரணத்தையும் குறிக்கும்.

'**வானின் றுலகம் வழங்கி வருதலான்**' (குறள். 11)

என்றார் திருவள்ளுவரும்.

கரணம், கருவி என்பன கரு என்னும் ஒருவினைத் தொழிற் பெயர்கள். திரிகரணம் = முக்கருவி. அந்தக்கரணம் - உட்கருவி. கரணம் அணம் விகுதி. கருவி - வி விகுதி. கரணத்தின் நீட்டம் காரணம். கருவி மேகத்தின் தொகுதியையும் உணர்த்தும்; எ-டு: 'கருவி மாமழை', 'கருவி தொகுதி' - தொல்காப்பியம். கரு - கார். கார் + அணம் = காரணம். கார் + இயம் = காரியம், இயம் தொழிற்பெயர் விகுதி.

**அகாலம்**. அ + காலம்.

காலம்: கால்+அம்=காலம். அம் சாரியை. கால் உடம்பின் காற்பாகமாகிய உறுப்பு.

கால் = 1. leg
2. தூண், கால் போல்வது
3. canal - கால்போல நீண்டோடுவது
4. வம்சம் - கால்போலத் தொடர்வது
5. காற்று - கால்போலச் சென்று வீசுவது
6. time - கால்போல நீண்டு செல்வது

**அங்குட்டம்**. அம் + குட்டம்.

அம் = அழகு. குட்டம் - குட்டையான விரல்.

**அசரம்**. அ + சரம்.

சரி + அம் = சரம். தொழிற்பெயர்.

சரிதல் = அசைதல், சாய்தல்.

சலி - சரி; போலி எனினும் ஒக்கும்.

சரம் அசையும் பொருளைக் குறிக்கும்போது தொழிலாகு பெயர்.

**அசலம்**. அ + சலம் = அசலம் = மலை, அசையாதது.

சலி + அம் = சலம், தொழிற்பெயர்.

சலித்தல் - அசைதல்.

சலம் = நீர், சலிப்பது, தொழிலாகு பெயர்.

சலம் என்பது தென்னாட்டில் நீர்ப்பொருள்களில் ஒன்றாகிய சீழுக்கு வழங்கி வருகின்றது.

சலம் என்னும் தென்சொல்லையே ஜலம் எனத் திரித்தனர் ஆரியரும் தமிழரும்.

'ஜெட்டியார் கடைக்கு ஜென்று ஜேலம் ஜீனி வாங்கி வா' என்று இன்றைக்கும் தமிழ்மக்கள் தென்சொற்களை வடசொற்போலத் திரித்து வழங்குதல் காண்க. சலிப்பு என்பது களைப்பு என்று பொருள்பட்டாற் போல, அதன் பரியாயச் சொல்லாகிய அசைவு என்பதும் களைப்பு என்று பொருள்படும்.

> **"இளிவே இழவே அசைவே வறுமையென**
> **விளிவில் கொள்கை அழுகை நான்கே"** (தொல். 1199)

சலித்தல்-அசைத்து மாத்தெள்ளுதலையுங் குறிக்கும். சலிக்கும் கருவி-சலிப்பான், சல்லடை எனப்படும். சலி+அடை=சல்லடை.

**அஞ்சலி**. அஞ்சல்-அஞ்சலி.

அஞ்சலி = வணக்கம், அஞ்சிச் செய்வது.

**அதிகம்**. அதி-அதை என்னும் சொல்லின் திரிபு.

அதைத்தல் = வீங்குதல், பருத்தல், மிகுதல்.

அதி+இகம் = அதிகம், தொழிற்பெயர்.

அதி என்பது மிகுதிப்பொருள் உபசர்க்கமாய் வரும்.

**அதிமதுரம்**. அதி + மதுரம் = அதிமதுரம், ஒரு சரக்கு.

மதுரம் = கள், தேன், மதர்ப்புச் செய்வது.

மதமத என்பது எரிப்புப்பற்றிய குறிப்புச்சொல்.

மத-மதர்-மதுர்-மதுரம்-மது,

**அதிவேகம்**. அதி + வேகம்.

வேகம் = வேகு + அம். = வேதல், சூடு, எரிதல்.

ஒரு பொருள் வேகும்போது விரைவாய் எரிதலின் விரைவு வேகம் எனப்படும். சுறுசுறுப்பைச் சூட்டிக்கை யென்பர். ஒருவினை மும்முரமாய் நடந்தால் 'நெருப்பெழுந்து வேகிறதே!' என்பர் தென்னாட்டார்.

**அநுசிதம்**. அந் + உசிதம்.

அந்-அல் என்பதன் திரிபு

உசிதம் = உயர்வு, சிறப்பு, உகரச் சுட்டடியாகப் பிறந்தது.

உயர்வுபற்றிய சொற்களெல்லாம் பெரும்பாலும் உகரச் சுட்டடியாகவே பிறக்கும்.

எ-டு: உயர்வு, உம்பர், உன்னதம், உச்சி, உச்சிதம்.

உத் (உபசர்க்கம்), உத்துங்கன்.

**அநுதாபம்**. அநு+தாபம். அநு-உபசர்க்கம்.

அநு, அண்ணு என்பதன் திரிபு.

அண்ணுதல் = கிட்டுதல், கூடுதல்

தவி + அம் = தாவம்-தாபம்

தவித்தல்-நீர்வேட்டல், வருந்தல், விரும்புதல், இரங்குதல்.

அநுதாபம் = இரக்கம், அநு = உடன், கூட, துணையான.

**அநுமதி**. அநு + மதி.

மதி = அறிவு

மதித்தல் = அளத்தல், அளந்தறிதல், நிதானித்தல், பெரிதாய் எண்ணுதல்.

**அநுமானம்**. அநு-மானம்

மானி + அம் = மானம், தொழிற்பெயர்

மானித்தல் = அளத்தல், மதித்தல்

மானம்-அளவு

படியை மானம் என்பது வடார்க்காட்டு வழக்கு

மானம்-Moon, காலத்தை அளப்பது cf. மதி-மாதம்.

அவமானம் = மதிப்பின்மை

உபமானம் = துணை, அளவு, ஒத்த

சன்மானம் = நல்ல மதிப்பு, மதித்தளிக்கும் பரிசு

அபிமானம் = மிக மதித்தல்

பெறுமானம் = பெறும் அளவு, மதிப்பு

வருமானம் = வரும் அளவு, வருவாய்

கட்டுமானம் = கட்டும் அளவு, கட்டடம்+மானம் விகுதி உபமானத்தா லறியப்படுவது உபமேயம்.

மானம் = அளவு, விதம். மானம்-manner

மானம் மானை என்று உலகவழக்கில் திரியும்.

'இந்த மானைக்குப் போட்டேன் என்றால் என்னவாயிருக்கும்?' என்பது ஓர் உலகவழக்கு (தென்னாடு).

மானி = அளப்பது, அளப்பவன், மதிப்பது, மதிப்பவன்

உஷ்ணமானி = வெப்பத்தை அளப்பது

வாயுமானி = காற்றை அளப்பது

அபிமானி = ஒரு பொருளை மதிப்பவன்

மானம்-மாணம்

பரிமாணம்-அளவு

பிரமாணம்-அளவு, அளவை, அளவையாலறியும் உண்மைப் பொருள், உண்மையாகக் கூறும் ஆணை.

பிரமாணத்தா லறியப்படுவது பிரமேயம்.

அநு, அவ, உப, சன், அபி, பரி, பிர என்பன பொருள் உள்ளவும் இல்லவுமான உபசர்க்கங்கள்.

பெறுமானம் முதலிய மூன்று சொற்களில் மானம் தொழிற்பெயர் விகுதியாகவுங் கொள்ளப்படும்.

**அந்தப்புரம்**. அந்தர்+புரம். அந்தர்-inter. இல் (= உள்) என்னும் சொல் ஆரியமொழிகளில் in என்று திரியும். cf. இல் (= வீடு) - inn = சத்திரம். in என்பதின் உறழ்தரம் (Comparative degree) inter என்பது. inter -அந்தர்.

அந்தர்ப்புரம்-அந்தப்புரம்-நிலைமொழி யீறுகெட்டது.

புரம்: புரி + அம் = புரம், தொழிற்பெயர். புரிதல் = வளைதல்.

புரி-spire. புரம்=கோட்டை. வளைந்திருப்பது, தொழிலாகு பெயர்.

cf. கோட்டம் from கோடு = வளை.

கோடு + அம் = கோட்டம்.

கோடு + ஐ = கோட்டை.

கோட்டம்-Caster, (Eng) கோஷ்டகம் (Skt.) பண்டைக் காலத்தில் ஒவ்வொரு நகரும் ஒவ்வொரு கோட்டையாற் சூழப்பட்டிருந்தது. அதனாற் புரம் அல்லது கோட்டையென்று கூறப்பட்டது.

திரிசிரபுரம். பீஜபுரம்-பீஜப்பூர்.

புரி - முதனிலைத் தொழிலாகு பெயர்.

புரம் - borough, berg, burgh - Edin*burgh.*

புரி - bery, pury, bury - Canter*bury.*

கோட்டை - caster. நால்வாசங் கோட்டை, பாளையங்கோட்டை. Lancaster, Doncaster.

புரம்-அரண்மனை, கோட்டையாற் சூழப்பட்டது.

cf. நகர்-a town or a palace.

அந்தப்புரம்-உள் அரண்மனை.

புரி என்னும் தென்சொல் புரீ என வடசொல்லாகுமே யன்றிப் புரீ என்னும் வடசொல் புரி எனத் தென்சொல்லாகாது. இகர வீற்றுத் தென்சொற்கள் வடமொழியில் ஈகாரவீறு பெறும்.

cf. காஞ்சி - காஞ்சீ.

காஞ்சி - ஒரு தமிழ்நாட்டு மரப்பெயர். பின்பு தானியாகு பெயராய் ஒரு நகரைக் குறிக்கும்.

'ஈயீ றிகரமும்' என நன்னூலார் கூறியது மொழிபெயர்க்கப்படாத வடமொழிச் சிறப்புப் பெயர்கட்கேயன்றிப் பிற சொற்கட் கன்றெனத் தெளிக.

**அந்தோ.** அந்தோ! இரக்கக் குறிப்பு. அத்தோ என்பதன் திரிபு. அத்தன் - அத்தோ! அந்தோ!

அத்தோ என்பது அத்தன் என்பதன் விளி. இரக்கக் குறிப்புக ளெல்லாம் பெரும்பாலும் தாய் தந்தை பெயர்களின் விளியாகவே யிருக்கும். துன்பம் வருங்கால் தாய்தந்தையரையே விளிப்பது மக்கள் வழக்கம், அவரினுஞ் சிறந்தார் பிறரின்மையின்.

இரக்கமென்பது தற்பொருட் டிரங்கலும் பிறர்பொருட் டிரங்கலுமென இருவகை. இரக்கம் = அழுகை, வருத்தம்.

எ-டு:

| **தந்தை பெயர்** | **தாய் பெயர்** |
|---|---|
| அப்பன் - அப்பா! | அம்மை - அம்மா! |
| அச்சன் - அச்சோ! | அன்னை - அன்னோ! |
| அத்தன் - அத்தோ! - அந்தோ! | |
| ஐயன் - ஐயோ! | |

அந்தோ என்பது வடசொல்லு மன்று; சிங்களச் சொல்லுமன்று.

**அபங்கம்**: அ + பங்கம்.

அ - அன் என்பதன் குறை.

பங்கம் = பங்கு + அம். பகு - பக்கு - பங்கு.

பகுக்கப்படுவது அல்லது பக்கிருப்பது பக்கு. பக்கு என்பதன் மெலித்தல் பங்கு. cf. போக்கு - போங்கு.

பக்கு என்பது பகுதி யிரட்டித்த தொழிற்பெயர்; பாட்டு, திருட்டு என்பன போல.

பக்கு, பங்கு = பாகம், குறை, பிளவு.

பக்கு + அம் = பக்கம்.

பங்கு + அம் = பங்கம்; அம் சாரியை.

மானபங்கம் = மானக்குறை.

நிலம் ஏரால் அல்லது மண்வெட்டியாற் பகுக்கப்பட்டுச் சேறாவதால், சேறு பங்கமெனப் பட்டது. 'பங்கப் பழனத் துழுமுழவர்' - புகழேந்தி.

பங்கி - பங்கையுடையது.

**அபசாரம்;** அப + சாரம். அப, அவ என்பதன் திரிபு.

அவம் = அழிவு ; அவி பகுதி.

சரி + அம் = சாரம், தொழிற்பெயர்.

சலி – சரி, போலி. ல – ர

cf. பந்தல் – பந்தர். கூதல் – கூதர்.

சரித்தல் = அசைதல், நடத்தல், ஒழுக்கம்.

அபசாரம் செய்பவள் அபிசாரி.

ஆ + சரி = ஆசரி ஆசரி + அம் = ஆசாரம்.

அனு + சரி = அனுசரி அன் + ஆசாரம் = அனாசாரம்.

ஆ, அனு உபசர்க்கங்கள். ஆசாரத்தை யுடையவன் ஆசாரி, ஆசாரியன்.

**அபதூறு:** அப + தூறு.

அவம் = அவி + அம், தொழிற்பெயர்.

அவிதல் = அழிதல். அவ – அப.

தூறுவது – தூறு; முதனிலைத் தொழிற்பெயர்.

தூறு = சிந்து.

மழை தூறுவதுபோலப் பழிமொழியைத் (அவமான சொல்லைத்) தூற்றுவது அவதூறு.

**அபமரணம்:** அப + மரணம். அவ – அப.

மரணம் = மரி + அணம், அணம் தொழிற்பெயர் விகுதி.

மடி – மரி, (போலி) ட – ர.

cf. கடி – கரி, படவர் – பரவர்.

மரியாதவர் அமரர்.

**அபரம்:** அ + பரம். அ, அல் என்பதன் குறை.

பரம் = பர + அம். பரத்தல் = விரிதல், பெருத்தல், மேற்படுதல்.

பரம் என்பது மிகுதிப் பொருளில் மேலிடத்தை யுணர்த்தும். இதன் பரியாயச் சொல்லாகிய மிகல் என்னுஞ் சொல்லும் அங்ஙனமே.

மிகு – மிகல் – மேல். மேலிடம் உயரத்தின் மிகுதியாகும் நட்டுக்குத் தலாய் (vertical) ஒரு பொருள் மிக்கிருக்கும்போது உயரமா யிருத்தல் காண்க.

பரம் = மேல். அபரம் = கீழ்.

பரன் = மேலானவன் – கடவுள்.

பராபரன் = மேலும் கீழுமுள்ள பொருள்களா யிருப்பவன்.

பரன் - சிவன், ஆண்பால்.

பரை - சிவை (பார்வதி), பெண்பால்.

பரம் + அன் = பரமன்,

பரதேசம் = பரம் + தேசம்.

பரம் - Foreign. L. foras.

பரலோகம் = பரம் + லோகம்.

பரதேசம் - பக்கமாகப் (sidewise) பரந்தது.

பரலோகம் - மேனோக்கிப் பரந்தது - ஒரு பொருள் பரக்கும்போது விரிந்து தூரமாகும்.

மேனோக்கிய பரப்பு உயரம்.

பக்கமான பரப்புத் தூரம்.

பரந்த (தூரமான) தேசம் = பரதேசம்.

பரதேசத்தான் - பரதேசி.

பரம் + காலன் = பரகாலன்.

பரம் + கேசரி = பரகேசரி. பரம் = தூரம், அயல், பிறிது.

பரகாலன் - பிறர்க்குக் காலன் போன்றவன்.

**அபரூபம்:** அப + ரூபம்.

அவ - அப.

உருவம் - ரூபம்.

உரு - உருவு - உருவம் - ரூபம். உருவு - உருபம் - ரூபம்.

உருத்தல் = எரிதல், சினத்தல், தோன்றுதல்.

உரும் = (warm) வெப்பம் = (இடி), (நெருப்பானது).

.உருத்தல் - சினத்தல். சினம் - நெருப்புப்போல்வது

cf. கனல் = நெருப்பு. கனலுதல் = சினத்தல்.

அழல் = நெருப்பு. அழலுதல் = சினத்தல்

உருத்தல் = தோன்றுதல். வடிவம் நெருப்பின் தன்மை.

நெருப்பால் ஒளியும் ஒளியால் உருவமும் தோன்றும்.

உருபு = உருவம், வடிவம்.

வேற்றுமையின் வடிவைக் காட்டும் அசை உருபு எனப்பட்டது.

“எழுவா யுருபு திரிபில் பெயரே” என்னும் சூத்திரத்தில், உருபு என்பது வடிவென்றே பொருள்படுதல் காண்க.

உருபம் என்னும் சொல்லே ரண்டு, ரம்ப என்னும் சொற்களைப் போல முதல் கெட்டுப் பின்பு அயல் நீண்டு ரூபம் என்றாகும்.

உரு என்பது முதனிலைத் தொழிலாகு பெயர்.

உரு X அரு. cf. உறு X அறு. உருபம் X அருபம்.

உருபத்தை யுடையவன் உருபி. உருபி – ஊருபி.

அருபமானவன் அருபி . அருபி – அரூபி.

உரு = வடிவம், முதனிலைத் தொழிலாகுபெயர்.

உரு என்னும் சொல் வடிவுப் பொருளில் உலகவழக்கில் மிகுதியும் வழங்கிவருகின்றது.

உரு = வடிவுடைப் பொருள்.

சுற்றுரு = தாலிக்கொடியில் தாலியோடு சேர்ந்த பல வடிவான சிறுநகைகள். கழுத்தைச் சுற்றியுள்ள உருக்கள் என்பது பொருள்.

உருப்படி = ஒரு பொருள்.

உருவாகு = உண்டாகு.

உருப்படு = வளர், தேறு, பெரியவனாகு.

உருக்குலை, உருமாறு = வடிவுமாறு, மெலி.

உருச்சேவி = விக்கிரகத்தை வணங்கு.

உருப்போடு = விக்கிரகத்திற்குரிய மந்திரம் ஜெபி.

உருவேற்று = மந்திரம் ஜெபி, உபதேசி.

உருபி = உருவத்தையுடையது. ருப்பி, Hindi, Skt. and English.

**அமங்கலம்:** அ + மங்கலம்.

நன்கலம் – (நங்கலம்) – மங்கலம்.

நன்கலம் – தாலி, சிறந்த அணி.

நன்கலம் அணியத்தக்க நிலை மங்கலம்.

நன்கலம் – மங்கலம். ந – ம, போலி.

cf. நாம் – மேமு(தெலுங்கு).

மாட்டுப்பெண் – நாட்டுப்பெண்<br>முனி–நுனி. } ம–ந, போலி.

மங்கலத்தை யுடைவள் மங்கலி – மங்கலை.

மங்கலம் – மங்கலியம் – மங்கிலியம் – மாங்கலியம் – மாங்கிலியம்.

மங்கலம் – மங்களம்.

மங்கலம் = மங்கலியம் அணிகின்ற திருமணம், திருமணம் போன்ற நல்வினை.

எ-டு: மண்ணுமங்கலம் = நன்மை.

**அமராபதி:** அமரர் + பதி.

பதி = பதிந்திருக்கும் இடம்.

பதிதல்= தங்கியிருத்தல், பொருந்தியிருத்தல், நிலையாயிருத்தல், வசித்தல்.

பதி - வதி. ப - வ, போலி. cf. பகு-வகு.

பதி - ஊர் , நகர் (முதனிலைத் தொழிலாகுபெயர்).

அமராபதி - அமராவதி.

பதி + அம் = பதம்.

அமரர் + பதம் = அமராபதம்.

பதி-bad- (Hindi) -பாத்து.

ஐதராபதி - Hyderabad-ஹைதராபாத்து.

**அமாத்தியர்:** அண்மை + ச் + அர் = அண்மைச்சர் - அமைச்சர்.

cf. அரண்மனை - அரமனை (உலகவழக்கு).

அமைச்சர் அரசனுக்கு அண்மையி லிருப்பவர்.

அமைச்சர் - அமாத்தியர்.

**அமுது** : அவிழ்-அவிழ்து-அமுது.

அவிழ்தல் - விரிதல்.

அவிழ் = சோற்றுப்பருக்கை, வெந்து விரிந்த அரிசி.

அவிழ்து = சோறு.

அவிழ்து - அமுது. வ-ம, போலி.

அவிழ்து + அம் = அவிழ்தம் - அமுதம்.

அமுது படைத்தல் = சோறிடுதல்.

**அம்பிகை:** அம்மை-அம்மாள் -அம்மா - அம்பா- அம்பிகா - அம்பிகை.

**அம்பு :** கம் - ஓர் ஒலிக்குறிப்பு.

கம் = நீர், ஒலிப்பது.

கம்-அம். cf. கனல் - அனல், தழல் - அழல்.

அம் - அம்பு (கடைவிரி-Epenthesis).

cf. உடல் - (உடம்)-உடம்பு.

அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா, செந்தமிழ்ச் செய்யுள்களுள் ஒன்றாகும்.

அம்பு (arrow) போலப் பெய்யும் மழைநீர் அம்பு எனினும் ஒக்கும்.

**அரணியம்**: அரண் + இயம். இயம் ஒரு விகுதி(suffix).

அரணியம் = காடு, அரணாயிருப்பது.

நால்வகை அரண்களிற் காட்டரண் ஒன்று.

அரணியம் - ஆரணியம்.

**அரன்:** அர் - ஓர் ஒலிக்குறிப்பு.

அர் + அம் = அரம், ஒரு கருவி, அர் என்று ஒலிப்பது.

அரம் - அரம்போல் தேய்த்தல், அழித்தல்.

அரம் - துன்பம், அழிவு செய்வது.

அரம் (harm) - அரந்தை (மரூஉ).

அரம் = அச்சம், துன்பத்தினாலாவது.

அரள் = அஞ்சு. அரள் - horror.

அரற்று = அஞ்சிக் கதறு.

அரன் = தேவன், அஞ்சத் தக்கவன், வருத்துபவன். மலையிலும் காட்டிலுமுள்ள தெய்வங்கள் தமியரை வருத்துமென்பது தமிழ்நாட்டுக் கொள்கை. குறிஞ்சித்திணைச் செய்யுள்களில் சூரர மகளிர் என்பது பெருவழக்காய் வருவதைச் சங்க நூல்களிற் காணலாம். சூர் = அச்சம்.

அரமகளிர் = தெய்வப் பெண்டிர்.

அரன் = சிவன், மலைத்தெய்வம்.

மலைநாட்டிலேயே சைவம் முதன்முதல் தோன்றிற்று. குறிஞ்சித் தெய்வமாகிய முருகன் சிவபிரானது மகன். அகத்தியர் முதலிய பண்டை முனிவரும் மலையிலேயே வதிந்தனர்.

அரன் = உருத்திரன்; ஊழியிறுதியில் உலகையழிப்பவன்.

அரன் - ஹரன். cf. ஆலி - hail.

அர் + இ = அரி - அழிப்பது.

அரித்தல் - பூச்சிகள் பொருள்களை அழித்தல்.

அரி = சிங்கம், விலங்குகளை அழிப்பது.

சுரஅரி- (ஜ்வரஹரி) -காய்ச்சலை அழிக்கும் மருந்து.

அரி = விஷ்ணு, சிங்கவடிவு கொண்டவன். சிவனுக்கு மனைவியா யிருந்தவன் எனினும் ஒக்கும்.

அரன் ஆண்பால். அரி பெண்பால். அரி - ஹரி.

**அராகம்:** அர் - ஓர் ஒலிக்குறிப்பு.

அராகம் = பண், சந்தம், ஓசை.

அராகம் = இராகம். cf. அறு - இறு.

இராகம் = பண், விருப்பம்.

பண் இனிமையா யிருத்தலின் எவருக்கும் விருப்பாம். cf. Music- that which amuses. அனுராகம் = காதல். அராகம் முடுகிய ஓசையுள்ள ஒரு கவியுறுப்பு, செந்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்துட் கூறப் பட்டுள்ளது.

அராகம் எனினும் வண்ணகம் எனினும் ஒக்கும்.

வண்ணகம் = பண், ஓசை.

அராகம் என்பது இயற்றமிழ்க்கன்றி இசைத்தமிழ்க்கும் இன்றியமை யாததோர் சொல்லாம். இசைத்தமிழும் பொருளிலக்கணமும் ஆரிய வருகைக்கு முன்பே தமிழர்க்கிருந்தவை.

**அலட்சியம்:** அ + லட்சியம்.

இலக்கியம் - லக்ஷியம்.

இலக்கியம் - குறி, உதாரணம் , (Literature) இலக்கு பகுதி.

**அவமதி:** அவம் + மதி

மதித்தல் = அளவிடுதல், உயர்வா யெண்ணுதல்.

மதி = அறிவு, பொருள்களை அளந்தறிவது.

மதி = அளந்தறியும் சரக்கு. ஏற்றுமதி, இறக்குமதி.

மதித்தல் = நிதானித்தல், மனத்தாலளத்தல்.

மதி = சந்திரன், ஒருமாத காலத்தை அளவிடுவது

மதி + அம் = மாதம்.

மதி + உ = மாது<br>மதி + அர் = மாதர் } உணவை அளவாய்ப் பகிர்பவள். பெண், தாய்.

மாது - மாதா . Skt.

மதி = அறிவு, knowledge.

சம்மதி = இசைவு, அறிந்து இசைவது.

அனுமதி = உத்தரவு, அறிந்து விடுப்பது.

மதி = மதித்தளிக்கும் பரிசு, வெகுமதி.

மதி + அம் = மதம், கடவுளை அல்லது வீட்டைப்பற்றிய மதிப்பு அல்லது கொள்கை.

**அவலட்சணம்:** அவம் + லக்ஷணம்.

இலக்கணம் = லக்ஷணம். இலக்கு - பகுதி

இலக்கணம் = இலக்கியத்தின் ஒழுங்கு அல்லது அழகு.

**அவி:** அவி = உணவு, நெய் (அவிக்கப்படுவது).

**அவிநயசாலை:** அபி + நயம் + சாலை.

அபி மிகுதிப் பொருளுணர்த்தும் ஒரு வடமொழி உபசர்க்கம்.

நயம் = நேர்த்தி. (தென்சொல்) நயம் - nicety: ய-ச, போலி.

அபிநயம் = மிக நேர்த்தியான ஆட்டம் அல்லது ஆட்டத்தின் உறுப்பு.

அபிநயம் ஓர் இருமொழித் தொடர் (Hybrid).

நை + அம் = (நையம்) - நயம், தொழிற்பெயர்.

cf. வை + உ = வயவு.

நைதல் = நுட்பமாக நொறுக்கப்படுதல்.

நயம் = நுட்பம். அபிநயம் = நுட்பமான ஆட்டம்.

**சாலை:** சால் + ஐ = சாலை.

சாலுதல் = நிறைதல். பருத்தல், விசாலித்தல்.

சால (நிகழ்கால வினையெச்சம்) மிகுதிப் பொருளுணர்த்தும் உரிச்சொல்.

சாலை = அகன்ற பாதை, அகன்ற கூடம்.

பாடசாலை = பாடம் படிப்பிக்கப்படும் கூடம்.

சாலை - saloon, hall.

சால் + பு = சால்பு = நிறைவு, பெருந்தன்மை.

சால் + வை = சால்வை (shawl), உடம்பு நிறையப் போர்ப்பது.

சான்றோர் = அறிவு நிறைந்தோர், வீரம் நிறைந்தோர்.

சாலு = நிறையும், போதும் (தெலுங்கு).

**அவிவேகம்:** அ + வி + வேகம்.

அ - எதிர்மறை உபசர்க்கம். வி - மிகுதிப்பொருள் உபசர்க்கம்.

வேகு + அம் = வேகம் = நெருப்பு, எரிதல்.

வேகம் = அறிவு, நெருப்பின் தன்மையுள்ளது.

நெருப்பு எங்ஙனம் ஒரு பொருளை விரைந்து பற்றுமோ அங்ஙனமே அறிவும் ஒரு பொருளை விரைந்து பற்றும். அறிவும் விரைவுமுள்ளவனைச் சூட்டிக்கையுள்ளவன் என்பது உலக வழக்கம்.

**ஆகாயம்:** ஆ + காயம். ஆ, முதல்விரி (prothesis).

``காயப் பெயர்வயின்" என்றார் தொல்காப்பியர்.

கயம் = பள்ளம், குளம், கறுப்பு. ஆழமான நீர் கறுப்பதியல்பு.

கயம் - காயம் (நீட்டல்). கயம் - கசம், போலி. இருண்ட இருட்டை இருட்டுக் கசமென்பர் தென்னாட்டார். காயா - கருநிறமான பூ.

காயம் = வானம் (கரியது).

ஆ + காயம் = ஆகாயம் - ஆகாசம். ய - ச, போலி.

**ஆசயம்:** அகம் (Tamil) - eikos (Gk.)- ஆசயம் (Skt.)-house(E.).

அகம் = வீடு. ஆசயம் = இருப்பிடம்: எ-டு: இரத்தாசயம்.

**ஆஞ்ஞை:** ஆள்-ஆண்-ஆணை-ஆஜ்ஞா.

'ஆவீறையும்' என்று பவணந்தியார் தமிழுக்குக் கூறிய முறையே ஐயீறாகவும் என்று வடமொழிக்கு மாற்றிக் கூறுக.

**ஆத்துமம்:** ஆன் + மா = ஆன்மா.

ஆ = பசு, ன் - சாரியை.

ஆன்மா-ஆமா = பசு, காட்டுப்பசு.

மா என்பது விலங்குப் பொதுப்பெயர்.

ஆமா ஒரு சொல்.

உயிர்களைப் பசுக்கள் என்பது சைவசித்தாந்த வழக்கு.

ஆன்மா = உயிர், animos (L.) = life. animal = பிராணி.

ஆத்மா - Skt. ஆத்மி (Hindi).

ஆதாம் = முதல் மனிதன் (Hebrew). உயிர் என்பது தமிழில் ஒரு பிராணியைக் குறித்தாற்போல ஆத்மா என்பது வடமொழி, உருது முதலிய மொழிகளில் ஒரு மனிதனைக் குறிக்கும்.

ஆத்மா - ஆத்துமம்.

**ஆலாபனம்:** ஆலாபி + அனம் = ஆலாபனம்.

ஆல் - ஆலாபி.

ஆலுதல் = வட்டமாக ஆடுதல். 'மயிலால'- கலித்தொகை.

ஆலாபித்தல் = ஓர் இராகத்தை வட்டமாகச் சுற்றிச்சுற்றிப் பாடுதல்.

ஆலாபி + அனை = ஆலாபனை.

ஆலத்தி - ஆளத்தி = விளக்கை அல்லது இராகத்தை வட்டமாகச் சுற்றுவித்தல்.

**ரிஷபம் - இடபம்.**

விடை- விடபம்-இடபம். விடை- விடலை.

விலங்குகளிலும், சிறப்பாய்ப் பறவைகளிலும் இளமையாய்ப் பருத்திருப்பவற்றை விடை என்பது வழக்கு. விடை - விடைத்திருப்பது, முதனிலைத் தொழிலாகுபெயர்.

விடைத்தல்-பருத்தல்.

விடை என்பது விடபம் என்று திரியும். பம் ஒரு விகுதி.

cf. வாலம்-வாலிபம்.

விடபம் என்பது முதன்மெய் நீங்கி இடபம் என்று நிற்கும்.

cf. சமை-அமை. வளை-அளை.

விடை என்பது விடலை என்றும் திரியும். விடை என்னும் பெயரும் அதன் திரிபுகளும் பல விலங்கிற்கும் பொதுவேனும், சிறப்பாக மாட்டிற் காளங்கன்றையே குறிப்பது நூன்மரபு. தோடுடையசெவியன் விடையேறி. காளை என்னும் பெயர் உவமையாகு பெயராய் ஓர் இளைஞனை அல்லது வீரனை உணர்த்தினாற்போல, அதன் பரியாயப் பெயராகிய விடை என்பதும் அதன் திரிபுகளும் இளைஞரை அல்லது வீரரை உணர்த்தும்.

பாலைமக்களான மறவரின் தலைவன் விடலை எனப்படுவது காண்க.

ஓர் இளைஞனை விடலைப்பையன் என்பதும், இளங்கோழிகளைச் சேவல்விடை கோழிவிடை என்பதும் இன்றும் தென்னாட்டு வழக்கு.

விடலை என்னும் கன்றுப்பெயர் இலத்தீன் மொழியில் vitula என்று திரியும்.

**இதி, இத்தியாதி:** இகரச்சுட்டு பகுதி. வடமொழிக்குச் சுட்டுச் சொல்லேயன்றிச் சுட்டெழுத்தில்லை.

**இரத்தம்:** அரத்தம் = சிவப்பு.

அரத்தம்-அரத்தகம்-அலத்தகம் = செம்பஞ்சுக்குழம்பு.

அரத்தம் என்னும் சொல்லுக்குப் பகுதி வழக்கற்றது.

இதற்கும் இதற்கினமான பிற சொற்கட்கும் அர் அல்லது அரம் என்பது மூலமா யிருக்கின்றது.

அரக்கு = சிவந்திருப்பது.

அரத்தம் - இரத்தம்.

அ - இ, போலி.

இரத்தி = இலந்தை, சிவந்த கனியை யுடைய செடி. அலத்தகம், இலந்தை என்னும் சொற்களில் லகரம் போலி.

இரத்தி - இலத்தி - இலந்தை. அரத்தம் - ரத்தம், Skt. red, E.

**இரம்பம்:** அர் ஓர் ஒலிக்குறிப்பு.

அர் அர் என்னும் ஒலிபடத் தேய்த்தல். அராவுதல். அராவுவது அரம்.

அரம்போல் அறுக்கும் ஆயுதம் அரம்பம்.

அரங்குதல் = தேய்தல், அழிதல் (தன்வினை).

அரக்குதல் = தேய்த்தல், அழித்தல் (பிறவினை).

அரந்தை = துன்பம், அறுப்பதுபோல் துன்பம் செய்வது.

அரித்தல் = தேய்த்தல், அறுத்தல், அழித்தல்.

அரம்பம் - இரம்பம். அ - இ, போலி.

**இராக்கதன்:** இரா + கதம் + அன் = இராக்கதன்.

இரா = இரவு. கதம் = செலவு, கதி - பகுதி. கதித்தல் = செல்லுதல். அன்- விகுதி. இரவில் சென்று உணவு தேடுபவன் இராக்கதன். இராக்கதன்- ராக்ஷஸன். Skt. க்க-க்ஷ.

இராக்கதன் என்பதன் மொழிபெயர்ப்பே நிசாசரன் என்னும் வடசொற்பெயர். நிசி = இரவு, சரன் = செல்பவன்.

இராக்கதன் என்பது முறையே இராக்கன், அரக்கன் என்று திரியும்.

அரக்கன் என்பதற்கு அழிப்பவன் என்று பொருள் கூறினும் அமையும்.

இராக்கன், இராக்கி என்னும் பெயர்கள் முறையே ஆண்பாற்கும் பெண்பாற்கும், இன்னும் தென்னாட்டில் சில வகுப்பார்க்குள் இடப்படுகின்றன.

இராக்கதர் பண்டைக்காலத்திலேயே தமிழ்நாட்டி லிருந்ததால், அவரைக் குறிக்கும் பெயரும் தமிழிலிருத்தல் வேண்டும்.

**இராசன்** : அரசு-அரசன்-ராஜன்.

அரம் = அழித்தல். See அரன், அரம்-அரசு.

அரன் = தெய்வம், சிவன்,

அரசு + அன் = அரசன் = தேவன் போன்றவன்.

அரசு = தலைமை. மரங்கட்குள் தலைமையானது அரசமரம்.

தேக்கு, கருங்காலி முதலியவை உறுதியாயிருப்பினும் அரசுபோல் ஓங்கி வளர்வதில்லை.

"ஆல்போற் படர்ந்து அரசுபோ லோங்கி" என்னும் உலகியல் திருமண வாழ்த்தை நோக்குக.

ஆலமரம் அதிகமாய்ப் படரினும், விழுதூன்றியபின் அடி தளர்ந்துபோம். அரசு ஓங்கிவளர்ந்து நெடுநாளிருக்கும். அதனால் பிள்ளையார் கோயில், மணவறை, பட்டஞ்சூட்டு விழாவகம் முதலியவற்றில் அரசங் கன்றையே நடுவர்.

அரசு, பூவரசு என்பன ஓரின மரங்கள். மேனாட்டார் இலை வடிவொப்புமை பற்றிச் சில மரங்களை ஓரினமாக்கினாற் போலப் பண்டைத்

தமிழரும் இலைவடி வொப்புமைபற்றி அரசையும் பூவரசையும் ஓரின மாக்கினர். பூவையுடைய அரசு பூவரசு, அரசமரத்திற்குப் பூவின்மை யறிக.

அரசன் என்னும் தென்சொல்லே ராஜன் என்று வடமொழியில் திரியும். அரசன் என்பதை ராஜன் என்னும் வடசொற்றிரிபாகத் தடுமாறக் கூறுவர் மொழிநூல் அறியாதார் சிலர். அரசு, பூவரசு என்னும் மரப்பெயர்கள் ஆரிய வருகைக்கு முன்பே தமிழ்நாட்டில் வழங்கிய பழந் தமிழ்ப்பெயர்கள் என்பதையேனும் அவர் அறிவாராக.

அரசன் - ராஜன், Skt, ராஜ் (இந்துஸ்தானி)

ராஜன் - இராஜன் - இராசன் (தற்பவம்)

ராஜ்யம் - ராச்சியம் - இராச்சியம்.

ராஜன் என்னும் சொல்லினின்று rego, regent, region, regicide, regular முதலிய ஆங்கிலச் சொற்கள் பிறக்கும்.

அரசன்-அரைசன், அ-ஐ போலி.

அரைசன்-அரையன், ச-ய போலி.

அரயன்-ராயன் Skt. roy; E. Vice-Roy.

ராயர் என்பது அரசரையும் ஒரு பார்ப்பனக் குடியையும் உணர்த்தும்.

இராசகாரியம், இராச சின்னம், இராஜஶ்ரீ, இராசநீதி, இராசராசன், இராசவசீகரம், இராசவீதி, இராசாக்கினை, இராசாதிகாரம், இராசாதிபதி, இராசாத்தி, இராசாளி முதலிய தொடர்மொழிகளெல்லாம் அரசகாரியம், அரச சின்னம் முதலிய செந்தமிழ்த் தொடர்களின் திரிபுகளே யென்றறிந்து கொள்க.

**இராத்திரி, இராத்திரம்.**

இரா + திரி = இராத்திரி. இரா+திரம்=இராத்திரம். திரம் என்பது ஒரு விகுதிச் (suffix) சொல்.

cf. சாயுந்திரம் - சாய்ந்திரம்.

திரம் - திரி

இரா - இருண்டிருப்பது. இருமை = கருமை, இரண்டு, இரவு என்னும் பெயர்கள் ரண்டு, ராவு என்று திரிந்தாற்போல, இராத்திரி, இராத்திரம் என்னும் பெயர்களும் ராத்ரி, ராத்ரம் என்று திரியும்.

**உசிதம் :** உசிதம் = உயர்வு, உகரச்சுட்டடியாய்ப் பிறந்தது.

**லட்சணம்:** லக்ஷணம், லக்ஷயம் என்னும் வடசொற்கள் இலக்கணம், இலக்கியம் என்னும் தென்சொற்களின் திரிபென்பதை 'இலக்கியம் இலக்கணம்' என்ற கட்டுரையில் விரிவாகக் கூறியுள்ளேன். ஆண்டுக் காண்க.

**லட்சம்**. இலக்கம்-லக்ஷம்.

தமிழிலுள்ள எண்ணுப்பெயர்களெல்லாம் உகரவீற்றன என்று கொண்டு, தமிழர்க்கு ஆதியில் 100 வரையில்தான் எண்ணத் தெரிந்த தென்றும், 999 வரையில்தான் தமிழிலக்கமென்றும், ஆயிரம், இலக்கம், கோடி என்னும் பெயர்கள் வடசொற்களென்றும் சிலர் கூறுகின்றனர். வான நூல் கணித நூல் முதலிய கலைகளில் எத்துணையோ வல்லுநரும் சிற்றிலக்கம், பொன்னிலக்கம் முதலிய அளவைகளையும் ஆய்தக்குறுக்கம் மகரக் குறுக்கம் முதலிய மாத்திரை நுணுக்கங்களையும் அறிவதில் நுண்மாண் நுழைபுலத்தினரும், வெள்ளம், ஆம்பல் முதலிய பேரெண்களைக் குறியிட்டாண்டவருமான முன்னைத் தமிழர்க்கு மூன்று தானங்கட்குமேல் எண்ணத் தெரியாது என்பது எங்ஙன் பொருந்தும்?

''ஆயிரக் கிளவி வரூஉங் காலை'' எனத் தொல்காப்பியத்துட் கூறியிருப்பதால், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே ஆயிரம் என்னும் எண்ணும் அதன் பெயரும் தமிழ்நாட்டில் வழங்கியிருந்தமை அறியப்படும்.

இலக்கமென்பது ஒரு பெரிய இலக்கம் (எண்).

கோடி என்பது கோடி (கடைசி) யெண்.

இலக்கம் தமிழ். lakh E. லக்ஷம் Skt.

கோடி தமிழ். கோட்டி, Skt. குடோடு Arabic, crore, E.

**லௌகீகம்**. உலகம்-லோகம்-லௌகீகம்.

உலகு + அம் = உலகம்.

உலகு = உலப்பது: உலத்தல் = அழிதல்.

'கால முலகம்' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால், உலகம் என்னும் சொல் தொல்காப்பியருக்கு முன்பே தமிழ்நாட்டில் வழங்கிய தென்றும், செந்தமிழ்ச்சொல் என்றும் அறியப்படும்.

உலகம் என்பதன் திரிபாகிய லோகம் என்னும் சொல் வடமொழியில் லௌகீகம் எனத் தத்திதாந்தமாகும்.

**சாமம்**. சமம்-சாமம்.

இரவு மூன்று சமபாகமாகப் பகுக்கப்பட்டதினால், ஒவ்வொரு பாகமும் சாமமெனப்பட்டது.

ஒரு சாமம் பத்து நாழிகை.

சாமம்-யாமம், ச-ய போலி.

மூன்று சாமங்களும் முதற்சாமம், நடுச்சாமம், கடைச்சாமம் என உலகவழக்கிலும், மாலையாமம், நள்ளியாமம், வைகறையாமம் எனச் செய்யுள் வழக்கிலும் கூறப்படும்.

யாமம் என்பது சிறப்பாக நடுச் சாமத்தைக் குறிக்கும்.

**சின்னம்**. சின்னம்=அடையாளம்.

'சின்னம் அல்லாக் காலை யான'

'எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்'

எனச் சின்னம் என்பது கலிப்பாவின் ஒருறுப்புப் பெயராகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டிருப்பதால் தமிழ்ச் சொல்லாத லறியப்படும்.

குடை, கொடி முதலியவை அரச அடையாளங்களாதலின் சின்ன மெனப்படும்.

அரச சின்னங்களைப் பற்றிக் கூறும் செய்யுள் சின்னப்பூ. சின்னம்-sign (Eng.) ஒருவரின் அடையாளமாகிய கையெழுத்து. sign-signal.

**தானம்**. தா + அனம் = தானம் - தாநம்.(வ)

தா பகுதி, அனம் விகுதி.

தா என்னும் தமிழ்ப்பகுதியே இலத்தீனில் do என்றும். இந்துத்தானி யில் தேவ் என்றும் திரியும். தானம்-donum, Lat, donation, E.

**தேவதை**. தேய்-(தேய்வு)-தேவன்.

தேய்வு-(தேய்வம்)-தெய்வம். தேவு-தே.

தேய்த்தல் = உரசுதல், கடைதல்.

மூங்கில்கள் ஒன்றோடொன்று உரசுவதாலும், மக்கள் தீக்கடை கோலாற் கடைவதாலும் நெருப்புண்டாகும்.

பொருள்கள் தேய்வதால் உண்டாவது தேயு.

தேய் + உ = தேயு; தேயு-தே-தீ.

தேய்-தே. தே + உ = தேவு தேவு + அன்=தேவன். தீப்போல்வது தெய்வம்.

தேவு-Theos. Gk.; Deus. L. Deity; E.

தேவு-தேவம்-தேவதம்-தேவதை. தெய்வம்-தெய்வதம்.

**பரிபாகம்**. பரு-பரி, மிகுதிப் பொருளுணர்த்தும் உபசர்க்கம்.

பகு+அம்=பாகம், முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர்.

பகு+தி=பகுதி-பாதி.

பகு+அல்=பகல்-பால்.

பகு+ஐ=பகை.

பகு+அம்=பக்கம்<br>பகு+அல்=பக்கல் } பகுதியிரட்டித்து விகுதி பெற்ற தொழிற்பெயர்.

பகு+பு=பகுப்பு.

பகு-வகு. வகு + ஐ =வகை-அகை.

பகு-பகிர். வகு-வகிர். வகு + பு=வகுப்பு.

பகு-பா. பா + தி = பாத்தி.

பாத்து + இடு = பாத்திடு, இடு துணைவினை.

பாத்திடு-பாத்தீடு-பாதீடு, முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

**பாதம்**. பதி + அம் = பாதம், முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற் பெயர்.

நிலத்திற் பதிவது பாதம்.

**முகம்**. மூசு மூசு என்பது மூச்சுப்பற்றிய ஒலிக்குறிப்பு.

மூசு மூசு என்று உயிர்ப்பது மூச்சு.

மூச்சுவிடும் உறுப்பு (மூச்சி)-மூஞ்சி.

மூச்சு-மூக்கு= 1. மூச்சுவிடும் உறுப்பு. 2. மூக்கிலுள்ள மலம்.

மூக்கு-peak, Eng. மூக்குப்போன்ற சிகரம்.
மூக்கு-(மூக்கம்)-(முக்கம்)-முகம்.

முகத்தல்=மூக்கினால் மணமறிதல்.

முக-முகர், முகர்தல்-மணமறிதல்.

முக-மோ 'மோப்பக் குழையும் அனிச்சம்' (குறள். 90)

முகர்-நுகர்; நுகர்தல்=1. மணமறிதல். 2. இன்பந் துய்த்தல்.

முகத்தல்=விரும்புதல் 'மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்' (உபலக்ஷணம்)

முக-மோ. மோ + கம் = மோகம். மோகம்-மோகி; மோகித்தல் = காதலித்தல்.

மோகி + அனம் = மோகனம். மோகனம் செய்யும் பேய் மகள், மோகனி-மோகினி

முகம்-முகடு = 1. கூரை, மேனோக்கிய மூக்குப் போல்வது 2. உச்சி.

அண்ட முகடு = வானத்தின் உச்சி.

முகடு + இ = முகடி= 1. முகட்டுத்தரத்திலுள்ள பேய், 2. மூதேவி.

முகடி-முகரி. முகடி-மோடி = 1. பேய். 2. காளி. முகடு + பூச்சி = முகட்டுப் பூச்சி - மோட்டுப் பூச்சி. -மூட்டைப்பூச்சி.-மூட்டை, bug.

மூட்டை + பாய்ச்சால் = மூட்டைப்பாய்ச்சால் - மூட்டையைத்தின்பது.

முகடு-மோடு-மேடு, மோடு=1. உயரமான தரை. 2. பெருமை.

மூக்கு = 1. பறவையின் அலகு, மூக்குப்போல நீண்டிருப்பது. beak, E.

2. கெண்டிமூக்கு, மூக்குப்போல்வது.

3. பயற்றின் முனைப்பக்கம், மூக்குப்போல்வது.

4. துருத்தியின் குழல், மூக்குப்போல்வது.

மூக்கு-முக்கு=1. மூலை, nook, E. 2. சிறு தெரு, மூக்குப்போல் ஒடுங்கியது.

முகம் = face. மூக்கையுடையது. (தானியாகு பெயர்) அல்லது மூக்கு போல முன்பக்கமுள்ள உறுப்பு. (உவமையாகு பெயர்.)

முகம் = 1. பக்கம்-வடக்கு முகம்.

= 2. எதிர்-காற்று முகம்.

= 3. முன் பக்கம்.

துறைமுகம் = நெய்தல் நகர்க்கு முகம்போல்வது.

நூன்முகம் = நூலுக்கு முகம் போல்வது.

திருமுகம் = முகம்போலப் பேசும் கடிதம்.

ஒருமுகம் = ஒருநோக்கு. நேர்முகம்-நேர்ச்சி.

போர்முகம் = போர்க்களத்தின் முன்பக்கம்.

முகதலை = சேலையின் முன்பக்கம்.

முகம் = மேற்பக்கம். இலைமுகப் பைம்பூணிறை.

முகமன் = முகஸ்துதி.

முகத்தல் = தன் பக்கத்திற் கொள்ளுதல்.

முகவை = முகத்தலளவு.

முகில் = மேகம், நீரை முகப்பது.

முகப்பு = 1. ஓர் கொடியின் முன்பக்கம்.

2. ஒரு கட்டடத்தின் முன்பக்கம்.

முகம்-முகி-முகிழ். முகிதல்-கூடுதல்.

முகிழ்-அரும்பு, மூக்குப்போலக் குவிந்தது.

முகிழ்-மொக்குள்-மொக்கு.

முகிழ்-முகை, முகிழ்த்தல் = தோன்றுதல்.

முகிழ்-மூழ். மூழ்த்தல் = அரும்புதல் போல வாய் மூடுதல்.

மூழ்-மூடு-மூ - மூதல் = மூடுதல்.

முகம்-முகர் = 1. முகம். 2. முகத்தையுடைய முத்திரை.

முகர்-முகரை = முகம். (தென்னாட்டு வழக்கு.)

முகர்-முகரா-மொகரா - அரசன் முகத்தை யுடைய ஒரு நாணயம்.

முகம்+திரம் = (முகத்திரம்) மோதிரம், முகத்தை யுடையது.

முகம்+திரை = முகத்திரை-முத்திரை, முகத்தை யுடையது. திரம்-திரை.

முகம்-நுகம் = yoke, வண்டியின் முகத்திலிருப்பது,

முகக்கோல் - மோக்கோல்-மோக்கால்.

முகம்-முகன். முகனை-மோனை - சீர்முகத்திலுள்ள எழுத்துகள் ஒன்றி வருதல்.

முகன்-முன், இடைக்குறை. முன்றானை-முந்தாணி.

முன்-முன்னே, முன்னை-முன் + ஐ = முனை, போர்முனை.

முன்-முன்பு-முன் + இ = முனி-நுனி, நுதி. முனை-நுனை.

முன்-முந்து-முன்று-முந்தல்-முதல், இடைக்குறை.

முதல் + இ = முதலி; முதலி + ஆர் = முதலியார்.

முதல் + ஆளி = முதலாளி. முதன்மை-முதுமை.

முதியோர், முதுகுடி.
மூதூர், மூதுரை.

இங்ஙனம், முகம் என்னும் சொல், பகுதி யுடையதாயும் முதலாவது மூக்கையும் பின்பு முகத்தையும் குறிப்பதாயும், நூற்றுக்கடுத்த திரிசொற்களை (Derivation)யுடையதாயும் தமிழிலுள்ளது; வடமொழியிலோ பகுதியற்றதாய் வாய் என்னும் ஒரே பொருள் யுணர்த்துவதாயுள்ளது. ஆதலால், முகம் என்பது தென்சொல்லாதல் தெற்றென விளங்கும். வடமொழிக்கும் தென்மொழிக்குமுள்ள பொதுச் சொற்களை வடசொல் அல்லது தென்சொல் என்று கண்டறிதற்குக் கால்டுவெல் கண்காணியர் (Bishop Caldwell) கூறிய விதியறிந்து கடைப்பிடிக்க.

மூஞ்சு + எலி = மூஞ்செலி-மூஞ்சுரு. தூங்கு மூஞ்சி-ஓர் மரம். அழுமூஞ்சி, அடுமூஞ்சி.

முகம்=முன், முகாமை-முதன்மை, தலைமை.

முகவரி= under முகவெட்டி.

**வருணம்**

வரி+அணம்=வரணம் + cf. மரி+அணம்=மரணம்.

வரணம்-வர்ணம்-வண்ணம்-வருணம்.

வண்ணம்-பண்ணம்-பண்ணத்தி. cf.வண்டி-பண்டி.

பண்ணம்-பண். வண்ணம்-வண்ணகம்.

வரித்தல் = வரைதல், எழுதுதல், பாடுதல்.

வரி என்பது இசைப்பாடல்களில் ஒன்று, அது ஆற்றுவரி கானல்வரி முதலிய பலவகைப்படும்.

வர்ணம் = நிறம், varnish, E.
= குலம், நிறத்தினா லறியப்படுவது.
= செய்யுள் அல்லது இசைப்பாடல், வரைவது போல வருணித்துப் பாடுவது.

வர்ணம்-வரணி; வர்ணி = வண்ணி -வருணி.

வர்ணித்தல் = 1. வரைதல்.

2. வரைதல்போலச் சிறப்பித்துக் கூறுதல்.

செய்யுளும் சித்திரமும் ஒரு பொருளின் வடிவைக் காட்டுவதில் ஒன்றுக்கொன் றினமாகும். முன்னது அகக்கண்ணுக்கும் பின்னது புறக்கண்ணுக்கும் புலனாம்.

இதுகாறும் கூறியவாற்றால், எத்தனையோ தென்சொற்கள் வட மொழிச் சென்றுள்ளன வென்றும், அவை விழிப்பத் தோன்றாவிடினும் ஆராயத் தோன்றும் எனவும், அறிந்துகொள்க.

**- "செந்தமிழ்ச் செல்வி" சுறவம் 1935**

## 3

# வடசொல்லென மயங்குந் தொல்காப்பியத் தென்சொற்கள்

உலகத்திலுள்ள மக்களெல்லாம் ஒருதாய் வயிற்றினரென்று சரித்திர ஆராய்ச்சியால் தெளிவாகின்றது. தமிழர், தெலுங்கர், கருநடர், மலையாளர், துளுவர் முதலிய திராவிட வகுப்பினரெல்லாரும் எங்ஙனம் ஒரு காலத்தில் ஒரு வகுப்பினரா யிருந்தனரோ, அங்ஙனமே துரேனியர், சேமியர், ஆரியர் என்னும் முப்பெருங் கிளையினரும் ஒரு காலத்தில் ஒரே வகுப்பினரா யிருந்திருக்கின்றனர். மக்கள் வகுப்புத் திரியத் திரிய அவர்கள் மொழியுந் திரிந்துகொண்டே வந்திருக்கின்றது. படைப்புக் காலந்தொட்டு ஒரு வகுப்பார் பிற வகுப்பாருடன் கலவாது பிரிந்திருந்தாலொழிய அவர்கள் மொழி தனிமொழியா யிருத்தல் எட்டுணையும் கூடாததாகும். பெற்றோர் மொழிகளையே பிள்ளைகளும் பேசுகின்றனர். உறவினரெல்லாரும் ஒரு மொழியே பேசுதல் இயல்பு. ஆகவே, இயைபுடைய வகுப்பின ரெல்லாம் இயைபுடைய மொழிகளையே பேசல் வேண்டும். சமற்கிருத ஆரியர் மூவகை மொழிகளும் கலக்கின்ற மேலையாசியாவின் வடபுறத்தில் ஆதியிற் குடியிருந்தனர். அங்கிருந்து அவர்கள் வடஇந்தியாவிற்கு வருமுன்னரே அவர்கள் மொழியில் பிறமொழிச் சொற்கள் எண்ணிறந்தன கலந்துவிட்டன. ஆரிய வருகைப்போது இந்து தேய முழுதும் வழங்கி வந்தவை திருந்தினவும் திருந்தாதனவுமான திராவிட மொழிகளே. ஆரியர்கள் வட இந்தியாவி லிருக்கும்போது பல திராவிடச் சொற்களும் தென்னாட்டிற் குடியேறியபின் வேறு பல திராவிடச் சொற்களும் சமற்கிருதத்திற் கலந்துவிட்டன. தமிழ்க்கல்வி தலைதாழ்த்துச் சரித்திர அறிவும் மொழிநூலாராய்ச்சியும் இல்லாத இடைக்காலத்து, சமற்கிருதமே இந்திய மொழிகட் கெல்லாம் தாய் என்னுமோர் படிற்றுரை தமிழ்ப் பகைஞரால் தமிழ்நாட்டிலும் பரப்பப்பட்டது. சமற்கிருத அகராதியிலுள்ள சொற்களெல்லாம் சமற்கிருதமே யென்னுங் குருட்டு நம்பிக்கை தமிழருள்ளத்திலும் குடிகொண்டது. மேனாட்டுக் கலைச்சுடர் மேம்பட்டுத் திகழும் இக்காலத்துங்கூடப் பல தூய தென்சொற்களை வடசொல்லென மயங்குகின்றனர் பேரறிஞராயினாரும். தமிழ், உலகத் தாய்மொழியின் இயற்கை வடிவும் சமற்கிருதம் அதன் செயற்கை வடிவுமாதலின், அவ் விரு

மொழிக்கும் பொதுவான சொற்களுள், தமிழில் மூலப்பொருள் தருவன வெல்லாம் தமிழென்றே பெரும்பாலுங் கொள்ளற்பாலன. சமற்கிருதம் என்னும் பெயரே 'நன்றாய்ச் செய்யப்பட்டது' என்று பொருள்படுதலின் சமற்கிருதத்தின் செயற்கையை யுணர்த்தும்.

தமிழிற் பிற்காலத்து வடசொற்கள் பெரிதுங் கலந்திருப்பினும் பண்டைத் தமிழ்நூல்கள் அத்துணைக் கலப்பினவல்ல. காலத்திற் பின்னோக்கிச் செல்லச் செல்லத் தமிழ் நூல்களில் வடசொல் வழக்கு அருகிக் கொண்டே செல்லும். இற்றை முழுத்தமிழ் நூல்களுள் முன்னையது தொல்காப்பியமாதலின் அதில் வந்துள்ள வடசொற்கள் ஆசை, வைசியர் போன்ற ஐந்தாறே யாகும். வடசொல்லென மயங்கும் அதன் பிற சொற்க ளெல்லாம் தூய தென்சொல்லே யாதல் வெள்ளிடைமலை. ஆயினும் ஆராய்ச்சி யில்லார்க்கு அறிவிப்பான் வேண்டி அவற்றை முறையே ஒவ்வொன்றா யெடுத்து மொழிநூற்படி விளக்குவாம்.

**படிமை**

**"பல்புகழ் நிறுத்த படிமை யோனே"** (தொல். பாயிரம்)

**"மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய"** (தொல். அகத். 30)

படிமை என்னுஞ் சொல் படி என்னும் வினையடியாகப் பிறந்தது. படி என்பது படு என்பதன் மறுவடிவம். இவ் விரண்டும் பட் என்னும் ஒலிக் குறிப்பினின்றும் தோன்றியவை.

படுதல் = படிதல் = i. வீழ்தல். ii. ஒலித்தல்.

வீழ்தற்பொருளின் அடிப்படையாகப் படி என்பதனின்றும் பல கருத்துகளும் சொற்களும் பிறக்கும்.

படிதல் = 1. விழுதல்: கீழ்த்தங்கல், நிலைபெறுதல், பழகுதல்,

பேசி முடிவாதல். (எ-டு.) விலை படிந்தது.

2. விழுதல். -ஒருவரின் அடிவணங்கல், அடிப்படுதல், கீழ்ப்படிதல், தாழ்மையாயிருத்தல்.

3. விழுதல்: சாய்ந்து அல்லது மடங்கி விழுதல், நிலத்தில் அல்லது உடம்பிற் படுதல்.

(எ-டு.) பயிர் நிலத்திற் படிந்திருக்கிறது.

சடைநாயின் உரோமம் நிலத்திற் படிகிறது.

மயிர் தலையிற் படிந்திருக்கிறது.

பன்றியின் வயிறு நிலத்திற் படிகிறது.

4. விழுதல்: ஒன்றில் ஒன்று விழுந்து அதன் உருவம் அமைதல்.

படி (பெயர் ) = ஒன்றிலொன்று விழுந்ததனாலான உருவம், அதன் வடிவம், அளவு, மாதிரி, வகை.

படி = 1. a copy (எ-டு.) படியோலை opposed to மூலவோலை.

**"மூட்சியிற் கிழித்த வோலை படியோலை மூல வோலை"**

(தடுத்தாட்கொண்ட புராணம்)

an article, உருப்படி.

2. அளவு (பொது) grade, படிப்படியாய், வாயிற்படி, படிக்கட்டு, படி, படிக்காசு.

நிறை - படிக்கல்

முகத்தல்-ஒரு படி, படியளக்கிறவன் = காக்கிறவன்.

படி = bata, allowance.

3. விதம் அல்லது வகை.

அப்படி, இப்படி, எப்படி, அதன்படி, சொன்னபடி, மேற்படி.

**"எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு"** (ஔவையார்)

சொன்னபடி கேளாதவன்.

எனக்கொரு படியாய் வருகிறது. படியாய் - வடியாய் (போலித்திரிபு).

4. Form. படி + வு = படிவு + அம் = படிவம் (ப-வ, போலி) E. body; A.S. bodig; Hind. பதன்.

படி - (n.) copy, duplicate, anything of equal value, exchange, answer, return, substitution.

படி - படில். cf. குடி- குடில், விட்டி- விட்டில்.

படில் - பதில் - வதில் (corruption).

பதில் = return, answer, substitution.

பதிலாள் = substitute. பதிலாளி = representative.

படி என்னும் சொல்லே வடமொழியில் ப்ரதி என்றாகும். வடசொற்களின் மெய்ம்முதல்களை ரகரம் சேர்த்தெழுதுவது பெருவழக்கு.

(எ-டு) பவளம் - ப்ரவாளம்; தமிழம் - த்ரவிடம்

ட-த cf. படாகை - பதாகை. படி - ப்ரதி.

ப்ரதி என்னும் சொல்லுக்கு வடமொழியில் மூலமில்லை. ப்ரதி என்னும் உபசர்க்கம் பெற்று, ப்ரதிநிதி என்னும் பெயருண்டாகும்.

படி. (v.imp.) = விழு.

படி-வடி. to fall down, to filter, to select-வடிகட்டுதல். to cast, as moulten metal-வடித்துச் செய்தல். to abate, as water-நீர்வடிதல். to hang low, as the lobe of the ear - காது வடிதல்.

படி-பதி (v.imp.) - to fall, to make impression on the mind, to be comprehended, to be memorised - மனத்திற் படியவில்லை, மனத்திற் பதியவில்லை.

பதி = to fall down, to settle down, to dwell.

பதிதல்-வதிதல் = தங்குதல், வசித்தல்.

பதி. (n.)an abode, a town.

"பதிபெயர் வினாதல்" (அகப்பொருள்), காசியம்பதி.

E. abide (v.) a + bide; bide = to wait.

A.S. abidan = a + bidan, bidan = to wait.

பதி-bide. cf. மதுரை-Madura.

abode (n.) from abide.

Hind. Ahamad*abad*, Allah*abad.*

இவற்றில் abad (ஆபாத்) என்று பிரித்து நிர்மாணிக்கப்பட்ட என்று பொருள் கூறுவது சிறப்பாய்த் தோன்றவில்லை. "இலாஹாபாத் = இலாஹி யால் நிர்மாணிக்கப்பட்ட, ஹைதராபாத் = ஹைதரால் நிர்மாணிக்கப்பட்ட" - ஹிந்தி தமிழ் ஸ்வபோதினி.

பதி = to register; பதிவு = impression, registration, to make impression.

பதிப்பு = printing, edition. அச்சிற் பதித்தல், பதிப்பித்தல்.

பதிபோடு - to crouch, to transplant.

பதியம் போடுதல் அல்லது வைத்தல் - to transplant a cluster of saplings, to graft, to heap up cowdung in a regular shape.

பதி - to sink in, to print ; பதி + அம் = பதம் (1) கால். (2) நிலை.

பதி + அம் = பாதம், foot (முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற் பெயர், ஆகுபெயர்).

cf. படி + அம் = பாடம்.

தவி + அம் = தாவம், தாகம்.

கொள் + தல் = கோடல்.

செல் + தல் = சேறல்.

E. foot; A.S. fot; L. pedis; Gk. podos; Skt. பாத்.

L. pedis-pedal, pedestrian, pedestal; Gk. podos - tripodstand.

பாதம் -பாதை; Telugu பாட்ட; E. path.

Skt. பாட-பாதப, the root of a tree, a tree.

E. Botany, lit. the science of trees.

படி - பாடி, a cluster of low-roofed huts, a military encampment.

படி = form, image, likeness.

படி + மை = படிமை. மை an abstract noun suffix.

cf. அடி + மை = அடிமை; குடி + மை = குடிமை.

படிமை- 1. form, image.
2. appearance.
3. robe of an ascetic.
4. religious conduct of an ascetic.

படிமை - (பதிமை) -பதுமை.

இகரம் உகரமாய்த் திரிவது பெரும்பான்மை.

(எ-டு.) இழிந்தோர் வழக்கு: பிள்ளை-புள்ளை
பிட்டு - புட்டு
பிண்ணாக்கு - புண்ணாக்கு
பிடு - புடு

இழிவழக்கேனும் உயர்வழக்கேனும் சொற்றிரிபு விதி ஒன்றே. உயர் வழக்காயின் கொள்ளப்படும்; இழிவழக்காயின் தள்ளப்படும். இதுவே இவை தம்முள் வேற்றுமை.

| (எ-டு) | **கொள்ளப்படுவன** | **தள்ளப்படுவன** |
|---|---|---|
| அ-எ | பரு - பெரு | (கத்தரிக்காய்) - கெத்தரிக்காய் |
| ப-வ | பதி - வதி | (பதில்) - வதில் |

படிமை என்னும் சொல்லே வடமொழியில் ப்ரதிமா என்றாகும். வடமொழியில் ப்ரதி என்ற சொற்கு மூலமில்லை. மா என்பது பண்புப்பெயர் விகுதியன்று. ப்ரதிமா, அணிமா, மகிமா முதலிய மாவீற்றுப் பெயர்களை யெல்லாம் பகாப்பதங்களென்றே கொள்ளுவர் வடநூலார்.

வடவெழுத்துத் திரிபைக் கூறுஞ் சூத்திரத்து ‘ஆவீறையும்’ என்றார் பவணந்தியார். வடமொழி யாகாரம் தமிழில் ஐகாரமாவது போன்றே, தமிழ் ஐகாரமும் வடமொழியில் ஆகாரமாகும். ஆங்கிலப் பவுன் இந்திய ரூபாவாக மாறினால் இந்திய ரூபாக்களும் ஆங்கிலப் பவுனாக மாறுமன்றோ? அது போன்றே.

| எ-டு: | **தமிழ்** | **வடமொழி** |
|---|---|---|
| | (சாய்-பகுதி) சாயை | சாயா |
| | (மால்-பகுதி) மாலை | மாலா |

பலர் 'ஆவீறையும்' என்பதன் மறுதலையை யுணராது ஐகாரவீற்றுத் தமிழ்ச்சொற்களை யெல்லாம் 'குர்ரம்' வாய்பாட்டில் ஆகாரவீற்று வடசொற் றிரிபாகக் கொள்ளுவர்.

தென்சொற்களை வடசொற்களாக்கும் முறைகள் பலவுள. அவற்றுள் ப்ரதிமா என்னுஞ் சொல்லிற் கொண்டன மூன்று.

அவையாவன:

1. ப - ப்ர

2. டி - தி (ட - த)

3. மை - மா

மொழிமுதன் மெய்யொடு ரகரம் சேர்த்த வளவானே தூய தென் சொற்களையும் வடசொல்லென மயங்குகின்றனர் தமிழறிஞர். இனி வேறுபல மாறுதல் கூடின் அவர் மயங்குதலைச் சொல்லவும் வேண்டுமோ?

"பிறக்கு-பிருதக்கென்னும் வடமொழிச் சிதைவென்க" என்றார் அடியார்க்குநல்லார் (சிலப். ப. 162)

பின் - பின்பு, பின்று, பின் - பிறந்து, பிற, பிறகு, பிறக்கு.

இத்துணைத் தெளிவாகப் பிறக்கு என்பதன் மூலமும் பிறவடிவும் தமிழிலிருந்தும் அடியார்க்குநல்லார் அதனை வடசொல்லெனப் பிறழ வுணர்ந்தமைக்கு ஊழ்வினை யல்லது வேறொரு காரணங் கண்டிலம். 'பிறக்கொழிய' என்பதற்குப் 'பின்னிட்டொழிய' என்று அரும்பதவுரைகள் உரைத்ததையும் அவர் உற்றுநோக்கிலர்.

இனி, படி என்னும் சொல் ஒலித்தற் பொருளில் படித்தலையும் வாசித்தலையும் குறிக்கும்.

படி - to read, to learn, to sing, to memorise.

Skt. பட். படி + அம் = பாடம்.

இதுகாறுங் கூறியவற்றால் படிமை என்பது தென்சொல்லே யென்றும், ப்ரதிமா என்பது அதன் திரிபே என்றும், இருமொழிக்கும் பொதுச்சொற்களை வடிவுபற்றி மயங்காது பகுதிப் பொருளறிந்து இன்ன மொழியெனத் துணிதல் வேண்டுமென்றும் அறிந்து கடைப்பிடிக்க.

**- "செந்தமிழ்ச் செல்வி" துலை 1936**

## ④

# ‘இலக்கியம்’, ‘இலக்கணம்’

வடமொழியும் தென்மொழியும் எனது உனது என்று, எங்குந் தொடர்ந் தெதிர்வழக்காடற் கிடமான எண்ணிறந்த சொற்களுள், ‘இலக்கியம்’, ‘இலக்கணம்’ என்பன இரண்டாம்.

உலகில் அடுத்தடுத்து வாழும் மக்கள் தம்முட் கொண்டுங் கொடுத்தும் பொருள்களை மாற்றிக் கொள்வது போலும், அடுத்தடுத்து வாழும் வகுப்பார் அல்லது நாட்டார் தம்முட் பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்வது போலும், அடுத்தடுத்து வழங்கும் மொழிகளும் தம்முட் கொண்டுங் கொடுத்தும் சொற்களை மாற்றிக்கொள்கின்றன.

இனி, உலகமொழிகளெல்லாம் ஒருதாய் வயிற்றினவென்று மொழி நூல் வல்லார் கண்ட முடிவிற்கேற்ப, அடுத்து வழங்காது நெட்டிடையிட்டு வழங்கும் மொழிகட்கும் ஆயிரக்கணக்கான சொற்கள் பொதுவாயிருத்தலை ஆராய்ச்சியாற் காணலாம். ஆங்கிலம் ஏறத்தாழ 6,000 மைல்கட்கப்பால் வழங்கினும் ஆயிரக்கணக்கான தென்சொற்களைத் தன்னகத்துக் கொண்டுள்ளது. இவற்றின் விரிவையெல்லாம் எனது மொழிநூலுட் (Evolution of Language: Vol.1. The Primitive Language and the PreAryan Tamils) கண்டுகொள்க. உதாரணமாகச் சில சொற்களை ஈண்டுக் காட்டுதும்.

Abba - அப்பன். { Abbot, the father of an abbey.
Abbey, a monastery under an abbot.

All - எல்லாம்.

Alum - அளம் = உப்பு.

Alone = All - one, ஒன்று.

Along = A + long, ஒழுங்கு = நீளம்

Angel, அஞ்சல் a divine messenger.

தபாற்காரனை அஞ்சற்காரன் என்பதும், தபால் ஆபீசை அஞ்சல் ஆபீசு என்பதும் நெல்லை வழக்கு.

Amiable, amicable, amo - அமர்.

Amour அமர். L. Amor, love.

"ஆத்திசூடி அமர்ந்த தேவனை" - ஔவை

"அமர்தல் மேவல்" - தொல்காப்பியம்.

Axle - அச்சில்

Bar - பார், a rod, a hindrance, the railing that encloses a space in a court of law.

கட்டப்பார், கட்டப்பார்க்கம்பி, கட்டப்பாரை

"பாவீற் றிருந்தகலை பாரறச் சென்ற கேள்வி" - சீவகசிந்தாமணி.

பாரற - தடையற

Bark - படகு r-d.cf. Coorg - குடகு

Battalian - பட்டாளம்

Battery - பட்டறை

Beak - மூக்கு b-m போலி: ப-ம.

Bear - பொறு

Betel - வெற்றிலை

Body - படிவு, படிவம் from the root - படி

Burrough - புரம் from the root - புரி

Bottle - புட்டில், புட்டி

Bull - புல்லம் "ஏறொடு மூரி புல்லம்" (சூடாமணி நிகண்டு)

Bun - பணி or பண்ணி, பண்ணியம், பணியாரம், பண்ணிகாரம்.

Cash - காசு

Chaff - சாவி

Clan - குலன், a family or tribe.

Clay - களி

Crack - கிறுக்கு, கிறுக்கன்

Crook - கொடுக்கு d-r.

Cry - கரை

Cumulate - கும்மலிடு

Cumulus - கும்மல்

Curl - சுருள் c-s சுருட்டை முடி

Curry - கறி

இங்ஙனம் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட இன்றியமையாத சொற்களை அகராதி முறையினும், கலைமுறையினும், எனது மொழிநூலுள் எடுத்துக் கூறியிருக்கின்றாம். ஆண்டுக் காண்க.

இச் சொற்கள் எல்லாம் ஆங்கிலத்தினின்றும் தமிழுக்கு வந்தவை யல்ல. ஆங்கிலம் வருமுன்னரே இவை தமிழில் உள்ளன. ஆறாயிரம் கல்லிடையிட்ட ஆங்கிலத்திற்கும் தமிழுக்கும் இத்துணைப் பொதுச் சொற்களிருக்குமாயின், ஏறத்தாழ 5,000 ஆண்டுகளாக அடுத்தடுத்து வழங்கும் வடமொழிக்கும் தென்மொழிக்கும் எத்துணைப் பொதுச் சொற்களிருத்தல் வேண்டும்? இப் பொதுச்சொற்களெல்லாம் மொழி நூன் முறையில் கூர்ந்து நோக்குவார்க்குத் தூய தென்சொற்களென்றே தோன்றா நிற்கும், வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொதுவாயுள்ள சொற்களை, வடசொல்லென்பாரும் தென் சொல்லென்பாருமாம் இருசாரார் மொழி நூலறிஞர். வடமொழியைப் போன்றே தென்மொழியும் சிறந்ததொரு தாய்மொழியாதலின், வடமொழியினின்றும் தென்மொழிக்கு வந்துள்ள சொற்களைப் போலவே தென்மொழியினின்றும் வடமொழிக்குச் சென்றுள்ள சொற்களும் பன்னூற்றுக்கணக்கின. அவற்றுள் இரண்டு ‘இலக்கியம்’, ‘இலக்கனம்’ என்பன.

1. ஆரியர் வடஇந்தியாவிற்கு வருமுன்னரே (B.C. 3000) தமிழில் இலக்கணமிருந்தமைக்கு,

> **“களவினுங் கற்பினுங் கலக்க மில்லாத்**
> **தலைவனுந் தலைவியும் பிரிந்த காலைக்**
> ..... ...... ...... ........
> **உள்ளுறுத் திறினே யுயர்கழி யானந்தப்**
> **பையு ளென்று பழித்தனர் புலவர்”** (யாப்பருங்கலவிருத்தி மேற்கோள்)

என்று அகத்தியம் வழிநூன் முறைமையில் ஆசிரிய வசனங் கூறுவதே சான்றாம். மேலும், எழுத்திலக்கணம், சொல்லிலணக்கம், யாப்பிலக்கண மென்ற மூன்றுமே இலக்கியங் கண்டதற் கிலக்கிய மியம்பலாகத் தமிழ் போலுமொரு செய்யுள் மொழிக்கு முதனூலாசிரியன் தன் நுண்ணறிவால் வகுத்திருத்தல் கூடும். அங்ஙனமின்றி ஏனைமொழிகட் கெல்லாமில்லாத பொருளிலக்கணமும், இசைத் தமிழ் நாடகத் தமிழிலக்கணங்களும், ஆசிரியராகத் தமிழராக ஒருவரே ஒருங்கேயியற்றினர் என்பது எங்ஙன் பொருந்தும்? அகத்தியம் முத்தமிழிலக்கணமன்றே? ஆதலான் முத்தமி ழிலக்கணம் ஒருவரானன்றிப் பலரான் முறையே நெட்டிடை யிட்டிட்டே தோன்றியிருத்தல் வேண்டும்.

அகத்தியர் பொதியஞ் சென்றதும், முருகன்பாற் சுவடி பெற்றதுமான புராணக் கதைகளும் தமிழ்நூலின் தொன்முது பழைமையை உணர்த்துவன வாகும்.

அகத்தியரும் தொல்காப்பியரும் முதனூலாசிரியரைக் குறிக்கு மிடத்து, யாண்டும் பலர்பாலாகவே குறித்துள்ளனர். ஆரியர் வரவிற்கு முன் தமிழிலக்கண மிருந்திருப்பின் அதன் குறியீடுகளும் தமிழிலிருந்திருத்தல் வேண்டும்.

2. தமிழில் இயல் என்னும் சொல் இலக்கணத்தைக் குறிப்பினும், அது அதையே வரையறுத்துச் சுட்டாமையானும், குணம், இயற்கை எனப் பலபொருள் படுதலானும், இயற்சொல், இயற்பெயர், இயன்மொழி, இயற்பட மொழிதல் முதலிய குறியீடுகளில் இலக்கணத்திலும் வேறாக வெவ்வேறு பொருள் தருதலானும், முத்தமிழில் ஒவ்வொன்றும் இலக்கணம் இலக்கிய மென இருவகைப்படுதலின், அவற்றைக் குறிக்க வேறு சொல்லின்மை யாலும், இயல் என்பது முத்தமிழில் ஒன்றன் இலக்கணமு மிலக்கியமுமாத லானும் 'இலக்கணம்', 'இலக்கியம்' என்னுங் குறியீடுகள் தமிழுக்கின்றி யமையாது வேண்டப்படுவனவாம்.

**"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து**
**பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை**
**மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்**
**எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"**

என்று தமிழ்ப் புலவர் தருக்குமாறு 'அத்துணை நிரம்பிய விலக்கணத்தை யுடைய தமிழ்மொழியில், இலக்கண விலக்கியங்களைக் குறிக்கச் சொல்லில்லையெனின் அது எட்டுணையும் நம்பற்கிடனாகாது.

வடமொழியில் இலக்கணத்தைக் குறிக்க வியாகரணமென்றோர் தனிச் சொல்லுளது. தென்மொழியில் இலக்கணத்தைத் தவிர வேறொன்றுமிலது. ஏனை மொழிகட்கெல்லா மில்லாத ஐந்திலக்கணம் நிரம்பிய தனித் தாய் மொழிக்கு இலக்கண விலக்கியங்களைச் சுட்டச் சொல்லில்லா திருக்குமோ?

3. 'இலக்கணம்', 'இலக்கியம்' என்னும் தென்சொற்களும், 'லக்ஷணம், 'லக்ஷ்யம்' என்னும் வட சொற்களும் முறையே வடிவிலும் பொருளிலும் ஒத்திருக்கின்றன.

| | தமிழ் | | சமஸ்கிருதம் |
|---|---|---|---|
| இலக்கணம் = | 1. Grammar | லக்ஷணம் = | 1. Grammar |
| | 2. அழகு | | 2. அழகு |
| | 3. Definition | | 3. Definition |
| | 4. குணம் | | 4. குணம் |
| | 5. ஒழுங்கு | | 5. ஒழுங்கு |
| இலக்கியம் = | 1. Literature | லக்ஷ்யம் = | 1. Literature |
| | 2. திருஷ்டாந்தம் | | 2. திருஷ்டாந்தம் |
| | 3. பொருள் | | 3. பொருள் |

லக்ஷ்யம்பண்ணவில்லை - பொருட்படுத்தவில்லை.

ஆகவே, இச் சொல்லிணைகள் ஒன்றினின்றொன்றே தோன்றி யிருத்தல் வேண்டும். எச்சொல்லினின்றும் எச்சொல்லென்பதே கூடா.

இதுகாறும் இலக்கண நூல்களிலெல்லாம், 'இலக்கணம்', 'இலக்கியம்' என்னுமிரண்டும் லக்ஷணம், லக்ஷ்யம் என்பவற்றின் திரிபென்றே கூறப் பட்டு வந்துள்ளன. நூலாசிரியரும் உரையாசிரியருமான பிற்றை யிலக்கணி களுட் பெரும்பாலார் வடநூல் வழியராதலானும், அக்காலத்து மொழி யாராய்ச்சியின்மையானும், அவர் வடநூல்வழி கூறியதெல்லாம் மறுப்பின்றி வழிவழி வழுவப்பட்டு வந்துள்ளன. வடமொழியினின்றும் ஏனை மொழிகளெல்லாம் ஏராளமாகவும் தாராளமாகவும் கடன் கொள்ளு மென்றும், அங்ஙனங் கொள்ளாக்கால் வழக்கிற்கும் மொழிபெயர்ப்பிற்கும் போதிய சொன்னிரம்பாவென்றும், வடமொழியொன்றே பிறமொழியினின்று ஒரு சொல்லும் கடன் கொள்ளாது தனித்தியங்கும் ஆற்றலுடையதென்றும் ஒரு தவறான கொள்கை, இன்றும் சில வடமொழியாளர்க் கிருந்து வருகின்றது. தமிழ் வடமொழித்துணை சிறிதுமின்றித் தனித்தியங்கும் ஆற்றலுடைய தென்று மேனாட்டறிஞர் கூறியிருப்பவும், அதற்கு மாறாக வடமொழித் துணையின்றித் தனித்து வழங்கல் தமிழ்க்குச் சாலாதென்று வடமொழியாளரன்றிச் தமிழ்ப்புலவர் சிலருங்கூடத் தலைவிரித்தாடு கின்றனர். (வடமொழிவாணர் தம்மைப் புகழக் கருதியோ, அல்லது வடமொழிவாணராகத் தம்மைக் காட்டக் கருதியோ தெரிகிலம்.) தமிழர் மொழிநூலேயறியா ரென்றும் சுயமான தென்சொற்கும் வடசொன் மூலங்க கற்பிப்பதே அவர்களுக்குப் பெருமையென்றும் கால்டுவெல் கண்காணியார் (Bishop Caldwell) கூறியிருப்பது இன்றும் மெய்யாயிருப்பது பெரிதும் இரங்கத்தக்க தொன்றாம். தமிழாளர் சிலர் தென்சொற்க ளின்னின்னவென்று ஐயந்திரிபற வுணர்ந்திருந்தும் அவற்றை வெளிப்படுத்தும் உறுதியின்றி, வடமொழியர் வாய்மருட்டுக் கஞ்சி, ''விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டன்ன'' விலவிலக்கின்றமையின் அவர் காட்சி ஊமையன் கண்ட கனாப்போல ஒருசிறிதும் பயன்படாது ஒழிகின்றது.

'இலக்கணம்', 'இலக்கியம்' என்ற சொற்கட்குத் தென்சொல் வடிவமே இயற்கையாகவும் வடசொல் வடிவம் செயற்கையாகவும் இருக்கின்றன. ஒரு சொல் ஒரு மொழியினின்றும் மற்றோர் மொழிக்குச் சென்றதென்பதற்கு அதன் பகுதிப்பொருள் அல்லது மூலப்பொருளே ஆதாரம். உதாரணமாக வெந்ந என்ற தெலுங்குச் சொற்கு மூலப் பொருளின்மையின் அது வெள்ளை நெய்யெனப் பொருள்படும் வெண்ணெய் என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபெனத் துணியப்படும். எம்மொழியில் அது பெருவழக்கோ, எம்மொழியில் அதன் திரிசொற்கள் (Derivatives) பெருந்தொகையனவோ, அம்மொழிக்கே அஃது உரித்தெனத் துணியப்படும்.

இலக்கணம், இலக்கியம் என்னுஞ் சொற்கட்கு வடமொழியிற் பகுதிப் பொருளிலது; தென்மொழியிலோ தெளிவாயுளது. யாதோவெனிற் கூறுதும்.

1. இலக்கு என்னுஞ் சொல் முதன்முதல் இலையை உணர்த்தும். ஓரிலக்கு விட்டிருக்கிறது. ஈரிலக்கு விட்டிருக்கிறது என்பது நெல்லை வழக்கு.

2. இரண்டாவது குறியை உணர்த்தும், பண்டைக்காலத்தில், வில்வீரர் ஒரு மரத்திலுள்ள ஓரிலையைத் தேடி இலக்காக வைத்து எய்து பயின் றிருக்கின்றனர். பாஞ்சாலி மணத்தினும் இலக்கணை மணத்தினும், இலக்காக இடப்பட்ட மச்சம் இலைவடிவாயிருத்தல் காண்க. இக்காலத்தும் கல்லெறிவல்லார் ஓர் மரத்தினுள்ள காய்களையே குறிக்கொள்கின்றனர். அக்காலத்தில் வில்வீரர் இலைகளைக் குறிக் கொண்டமை இதனாலும் அநுமிக்கப்படும். இலையே காயினும் சிறிதாயும் நிலையானதாயு மிருத்தல் காண்க.

3. மூன்றாவது குறிக்கப்பட்ட ஓர் இடத்தை உணர்த்தும். அதுகாலை லெக்கு என்று திரியும், இரண்டு, ரெண்டு என்றாற் போல, L. locus, a place, local, locality, location முதலிய சொற்கள் இதனின்றும் பிறக்கும். லெக்கு என்னுஞ் சொல் தென்னாட்டிற் பெருவழக்காய் வழங்குகின்றது.

4. நான்காவது குறிக்கப்பட்ட உதாரணத்தை உணர்த்தும்

5. ஐந்தாவது சித்திரத்தை உணர்த்தும். மக்கள் எழுத்தறியுமுன்னரே ஓவியம் அறிந்திருந்தனர். அழகு அனைவர் கண்களையும் கவர்தலின், ஆடை, சுவர் முதலியவற்றில், இலை கொடி முதலிய பல வடிவுகளை யெழுதிவந்தனர்.

"மாடக்குச் சித்திரம்" என்றார் பவணந்தியார். எத்துணையோ அறிவு வளர்ச்சி பெற்ற இக்காலத்தும் மரநுண்வினை (Wood Carving), உலோக நுண்வினை (Engraving), ஓவியம் (Drawing), கண்ணுள்வினை (Painting) முதலிய சித்திர வேலைகளெல்லாம் மரஞ்செடி, கொடி, இலை, பூ, காய், கனியாகவே யிருத்தல் காண்க. ஆடைகளின் கரைகளெல்லாம் பெரும்பாலும் தாவர வடிவினவே. இதனாற் சித்திரம் இலைத்தொழிலென்றும் கூறப்படும். இலையென்பது ஏனை யுறுப்புகட்கும் இனவிலக்கணம் (உபலக்ஷணம்). "இலைமுகப் பைம்பூண்" என்றார் குமரகுருபரர். உலகப் பொருள்களில் தாவரம் போல் கண்கவர் கவின்பெறு காட்சியன வேறெவையுமில்லை. இதனாலேயே கொடி, கொடியிடை, குலக்கொடி, கொம்பு, கோதை, குலாமாலை, மலர்முகம் என மாதர் புகழப்படுவதும், திருவிழாக்களில் தோரணம் பந்தர் முதலியவை தாவரப் பொருள்களால் புனையப்படுவது மென்க.

இலங்கும் என்னும் வினை, சித்திரத்தை யுணர்த்தும் இலக்கு என்னும் பெயரினின்றும் திரிந்ததே.

இலங்குதல் விளங்குதல், இலக்கம் விளக்கம்.

6. ஆறாவது சித்திரவெழுத்தை (Hieroglyph or Picture Writing) யுணர்த்தும். இதுபோதுள்ள வரியெழுத்தேற்படுமுன் எல்லா நாடுகளிலும் சித்திர வெழுத்தின் மூலமாயே மக்கள் தத்தம் கருத்தை வெளியிட்டு வந்தனர். ஒரு சித்திரம் ஒரு வாக்கியத்தையாவது ஒரு செய்தியையாவது குறிப்பா லுணர்த்துவதாயிருந்தது.

7. ஏழாவது வரியெழுத்தை யுணர்த்தும். சித்திரவெழுத்துத் தோன்றிச் சின்னூற்றாண்டின் பின் வரியெழுத்துத் தோன்றிற்று. அவ் வரியெழுத்தும் கூர்ந்து நோக்கின் தாவர வடிவே தாங்கி நிற்கும். சப்பானியம், சீனம் முதலிய மொழியெழுத்துகள் இக்காலத்தும் சித்திர வடிவே பெற்றுள்ளன.

எழுதுதல் என்னும் வினை படம் வரைதலையும் எழுத்தெழுது தலையும் பொதுவாயுணர்த்தும்.

எழுத்து இலக்கு (இலை) வடிவாயிருத்தலின் எழுதுதல் இலக்கித்த லெனப்பட்டது.

**"இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே விருந்திலக்கித்**
**தவ்வுருவு நினைப்பென்னுந் துகிலிகையால் வருத்தித்து"** (சீவக. 180)

என்னுஞ் செய்யுளில் இலக்கித்து என்பது எழுதி என்னும் பொருளில் வந்துள்ளது. இவ் வினையினின்றே லேககன், லேகினி, லிகிதம் முதலிய வடசொற்கள் பிறக்கும்.

இலக்கு, இலக்கி என்பன எழுது எனப் பொருள்படும் வினைப் பகுதிகள் அல்லது ஏவல் வினைகளாம்.

இலக்கு என்பது முதனிலைத் தொழிற்பெயராகவுமிருக்கும்; அது ஆகுபெயராய் எழுத்தை யுணர்த்தும்.

Gk. logos = a word
a discourse
a treatise
a science

e.g: Theology, Physiology

இலக்கியம் என்பது விகுதி பெற்ற தொழிற்பெயர். இலக்கு பகுதி; இயம் விகுதி.

cf. கண் + இயம் = கண்ணியம்.

கண்ணுதல் = கருதுதல், மதித்தல்

இலக்கியம் என்பது தொழிலாகு பெயராய் எழுத்தையும், கருவியாகு பெயராய் நூல்களையும் உணர்த்தும், நூலுணர்த்துழி இருமடியாகு பெயர்.

cf. Literature from letter.

இலக்கியத்தில் இயம் என்னும் விகுதியைத் தனிச்சொல்லாக்கிச் சாத்திரமெனப் பொருள் கூறல் ஈண்டுப் பொருந்தாது.

இனி, இலக்கணம் என்னும் சொல்லும் ஓர் விகுதி பெற்ற தொழிற்பெயரேயாம். இலக்கு பகுதி. அணம் விகுதி.

cf. கட்டு + அணம் = கட்டணம்

இலக்கணம், இலக்கியம் என்பன இரண்டும் முதன்முதல், எழுதும் தொழிலை யுணர்த்திப் பின்பு ஆகுபெயராய் எழுத்தை யுணர்த்தும். இலக்கியம் என்பது எழுத்தாலாய நூற்றொகுதியை யுணர்த்தினாற்போல, இலக்கணமென்பது எழுத்தாலாய மொழியின் ஒழுங்கை யுணர்த்தும்.

cf. Grammar from gramnos, (Gk.) a letters.

இனி, இலக்கணமென்பது மற்றோர் விகுதித் தொழிற் பெயர். இலக்கு பகுதி; அம் விகுதி. எண் இலக்க வடிவாய் அதாவது எழுத்து வடிவா யிருத்தலின் இலக்கமெனப்பட்டது.

எ-டு :

| தமிழ் | | Latin | |
|---|---|---|---|
| க | - 1 | I | - 1 |
| உ | - 2 | V | - 5 |
| | - 5 | X | - 10 |
| எ | - 7 | L | - 50 |
| அ | - 8 | C | - 100 |
| | - 10 | D | - 500 |
| | - 100 | | |
| | - 1000 | M | - 1000 |

இனி எண் என்னுஞ் சொல் தருக்கத்தை யுணர்த்துவது போல, அதன் பரியாயப் பெயராகிய இலக்கமென்பதும் தர்க்கத்தை யுணர்த்தும்.

Logic from Logos (Gk)

"ஏரணங்காண் என்பர் எண்ணர் எழுத்தென்பரின் புலவோர்" என்னுமடியில், எண் தருக்கத்தையும் எழுத்து இலக்கியத்தையும் (Literature) உணர்த்துதல் காண்க.

இதுகாறுங் கூறியவற்றால் இலக்கியம், இலக்கணம் என்னும் இருசொற்களும் இலக்கு என்னும் பகுதியடித் தொழிற்பெயர்களௌன்றும், அவை ஆகுபெயர் முறையான் முறையே நூற்றொகுதியையும் மொழி யொழுங்கையு முணர்த்துமென்றும், இலக்கு என்னுஞ் சொற்கு முதற்பொருள் இலையும் வழிப்பொருள் எழுத்து முதலியனவுமென்றும், இவையெல்லாந் தமிழேயென்றும், ஆரியத் தமிழ்க் கலப்பின் பின் தமிழினின்றும் ஆரியஞ் சென்ற எண்ணிறந்த சொற்களுள் இலக்கியம் இலக்கணம் என்பன இரண்டென்றும், இவை லக்ஷ்யம் லக்ஷணமென ஆண்டுத் திரியுமென்றும், இன்னும் இன்னோரன்ன பிறவும் வெள்ளிடைமலை போற் றெள்ளிதிற் கண்டுகொள்க.

குதிரை திருடினான் ஒருவன், நீதிபதி முன் குதிரை முகத்தை மூடி இதற்கு எக்கண் குருடென்ற உடையாற்கு, இடக்கண் குருடென்று அகப்பட்டாற் போல, எண்ணிறந்த தென்சொற்களைக் கவர்ந்துகொண்ட வடமொழியாளர், இச் சொற்கு மூலமென்னை யென்றோர் தமிழன் கடாவ, இதற்கு மூலமில்லை, இஃதோ ரிடுகுறியென் றகப்பட்டுக் கொள்கின்றனர்.

இடுகுறிப்பெயரே தமிழ்க்கில்லை.

**"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"**

**"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"**

என்பவை தொல்காப்பியம்.

இடுகுறிப் பெயர் வடமொழியில் ஏராளம். பகுதியறியப்படாத தென்சொற்களையெல்லாம் கண்ணை மூடிக்கொண்டு இடுகுறியெனப் பகர்ந்துவிடுவர்.

குதிரை திருடினான் குதிரையிடம் சென்றபோது, அது உடை யானைக் கண்டாற்போன் மகிழாமைபோல், வடநூலார் சில தென்சொற்குப் பகுதிப்பொருள் கற்பிக்கினும் அது சிறிதும் பொருந்தா தாகின்றது.

ஆகவே, மொழிநூலாராய்ச்சி வடசொல்லும் தென்சொல்லும் பகுத்துணர்தற்குச் சிறந்ததொரு கருவியாம். இதனையறிந்து கடைப்பிடிக்க.

**- "தமிழ்ப்பொழில்" விடை 1934**

## 5

# ‘இலக்கணம்’, ‘இலக்கியம்’ எம்மொழிச் சொற்கள்?

தமிழின் தாய்மையை வடவர் நெடுங்காலமாய் மறைத்துள்ளமை காரணமாக, ஒவ்வொரு தமிழ்ச்சொல்லையும் தமிழ்ச்சொல் லென்று காட்டுதற்கு அரும்பாடு படவேண்டியுள்ளது. அங்ஙனம் அரும்பாடுபட் டாய்ந்து தக்க சான்றும் ஏதுவுங் கொண்டு நாட்டியும், அதை நம்பாத பெருமை தமிழ்நாட்டிற்கே உள்ளது.

‘இலக்கணம்’, ‘இலக்கியம்’ என்ற இரு சொல்லும் தென்சொல்லே யென்று பல்லாண்டிற்கு முன்னரே பொழிலில் தக்க சான்றுகாட்டி நிறுவியிருக்கின்றேன். ஆயினும், அறிவாற்றலின்மையாலோ, அழுக்காற் றொடுகூடிய செருக்கினாலோ, பலர் அதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஆதலால், அதனை மீண்டும் மிக விளக்கமாகத் தெரிவிக்கத் துணிந்தேன்.

சிலர், சிறந்த தமிழறிஞராகவும் தமிழன்பராகவு மிருந்தும், தாம் வடமொழி பயின்றுள்ளமை காரணமாகத் தகையறத் தருக்கி, யான் கண்ட மொழிநூன் முடிவுகளை நம்பாததோடு தாக்கியும் வருகின்றனர். மொழியறிவு வேறு, மொழிநூலறிவு வேறு என்பதை இனிமேலாயினும் அவர் உணர் வாராக.

‘இலக்கணம்’, ‘இலக்கியம்’ என்ற இரு சொற்களும் தென்சொல்லா என்று ஆராயுமுன், அவற்றால் குறிக்கப்பெறும் இரண்டும் தென்மொழியி லுண்டா என்று காணல்வேண்டும். இலக்கணமும் இலக்கியமும் தொன்று தொட்டுத் தமிழுக்கு இருந்துவருவது மட்டுமன்றி, முதன் முதலாகவும் அவை நாவலந்தேயத்தில் எழுந்த மொழி தென்மொழியே என்பது மிகையன்று. இலக்கணமும் இலக்கியமும் தொன்றுதொட்டுத் தமிழுக்கு இருந்திருப்பின், அவற்றைக் குறிக்கச் சொல்லும் தமிழில் இருந்திருத்தல் வேண்டும். இதற்கு ‘இலக்கணம்’, ‘இலக்கியம்’ என்ற இருசொல் தவிர வேறு தென்சொல்லுண்டா வெனின், எதுவு மில்லை.

சிலர், இலக்கியத்திற்குச் ‘செய்யுள்’ என்பதும், இலக்கணத்திற்கு ‘நூல்’ என்பதும் தமிழ்ப்பெயர் என்பர். செய்யுள் என்பது யாப்பு வடிவிற்குப் பெயர் என்பதைத் தொல்காப்பியர் யாப்பிலக்கணவியலுக்குச் செய்யுளியல் என்று

பெயரிட்டதையும், அவ் வியலின் முதல் நூற்பாவே மாத்திரை முதலிய 26 உறுப்புகளையும், அம்மை முதலிய எட்டொடு கூட்டி,

**"நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென**
**வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே"**

என்று கூறுவதையும், 127ஆம், 128ஆம் நூற்பாக்கள் செவியுறையும் அங்கதமும் பற்றிவரும் செய்யுள்களை முறையே செவியுறைச் செய்யுள் என்றும், அங்கதச் செய்யுள் என்றும் கூறுவதையும்,

**"எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்"** (162)

**"செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்"** (234)

**"செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி"** (241)

என்ற பிறவிடத்தெல்லாம் 'செய்யுள்' என்னும் சொல் யாப்பு வடிவத்தையே குறிப்பதையும்,

**"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே**
**அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்**
**யாப்பின் வழியது என்மனார் புலவர்"** (78)

என யாப்பு என்று முன்னர்க் கூறியதையே,

**"எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்"**

எனச் செய்யுள் என்று பின்னர் ஆசிரியர் பெயர் மாற்றிக் கூறியதையும், நூலுக்குரை செய்யுள் உரைநடை ஆகிய இரு வடிவிலும் பண்டைக் காலத் திருந்ததினால் அவற்றுள் ஒன்றான செய்யுள் வடிவுரையே எழுநிலத்துள் ஒன்றாகக் கூறப்பட்டுள்ள தென்பதையும், செய்யுள் உரைநடை ஆகிய இரண்டையும் தழுவியதே இலக்கியம் என்பதையும் நோக்கிக் காண்பாராக. காவியம் (Epic) தமிழில் தொடர்நிலைச் செய்யுள் எனப்பட்டதையும் காண்க.

செய்யுளைக் குறித்தற்கு யாப்பு, பா, பாட்டு முதலிய பிற பெயர்களு முண்டேயெனின், அவையெல்லாம் பருப்பொருளில் ஒருபொருட் சொல்லாயினும் நுண்பொருளில் வேறுபட்டவை என்பதை அறிதல் வேண்டும். அவ் வேறுபாடாவன:

யாப்பு = metrical composition

செய்யுள் = poem, poetry

பா = variety of metre.

பாட்டு = ode

தூக்கு = metrical rhythm.

செய்யுள் என்பது தனிப்பட்ட செய்யுளையும் (Poem), செய்யுட் டொகுதியையும் (Poetry), செய்யுள் நடையையும் குறிக்கும்.

செய்யுள் என்பது செய்யப்படுவது என்னும் பொருளையுடையது. செய், பகுதி; உள், விகுதி.

**"வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"**

என்றார் பவணந்தியார்.

poem அல்லது poetry என்னும் ஆங்கிலச்சொல்லும் இதே பொருளைக் கொண்டிருப்பது வியக்கத்தக்கது.

E. *poem*, (from) F. *poeme*, (from) L. *poema*, (from).

Gk. *poema - poiema - poieo* = make.

Gk. *poiesis - poesis* = making, poetry, E. *poesy.*

Gk. *poietes - poetes* = maker, poet, E. *poet.*

இனி, நூல் என்னுஞ் சொல்லை ஆராய்வாம். நூல் என்பது, ஒரு மொழியின் அல்லது கலையின் அல்லது வேறேதேனுமொரு பொருளின் ஒழுங்கை அல்லது இயல்பை எடுத்துக் கூறும் புத்தகத்தையும், அதன் பின்பு ஆகுபெயர்ப் பொருளில் அதுபற்றிய கலையையுங் குறிக்குமே யன்றி, அவ் வொழுங்கை அல்லது இயல்பையே குறிக்காது. எடுத்துக்காட்டாக, ஒரு மொழியின் ஒழுங்கைப்பற்றி வினவினால், அதன் இலக்கணமென்ன என்று கேட்பது முறையாகுமேயன்றி, அதன் நூல் என்ன என்று கேட்பது முறையாகாது. அது வழக்கு மன்று. இலக்கணம் என்பது grammar அல்லது definition என்றும், நூல் என்பது treatise என்றும் பொருள்படும். இவற்றுள், முன்னது இலக்கண நூலையும், பின்னது ஒரு நூலால் அல்லது நூற்றொகுதியால் உணர்த்தப்பெறும் அறிவுக் கலையையும் (Science) குறிக்கும்போது ஆகுபெயராம். logos என்னும் கிரேக்கச்சொல், முதலாவது சொல்லையே குறித்துப் பின்னர் ஆங்கிலத்தில் உரையாட்டையும் நூலையும் கலையையும் குறித்தமை காண்க. ஆயின், இப் பிற்பொருள்களில் அது logue என்றும் logg என்றும் திரிவதுடன், தொகைச்சொற்களின் ஈறாகவும் (suffix) மாறிவிடும். இலக்கணம் என்னும் சொல் நூலைக் குறிக்கும்போது மொழியிலக்கண முட்பட்ட எல்லாக் கலையிலக்கணங்களையும் கூறும் புத்தகங்கட்கெல்லாம் பொதுப்பெயர் என்றும் வேறுபாடு உணர்தல் வேண்டும்.

இனி, ஒருசிலர் புலம், இயல் என்ற சொற்கள் தமிழில் இலக்கணத்தைக் குறிக்கும் என்பர்.

புலம் என்னும் சொல்லின் இயற்பொருள் அறிவு என்பதே. இச்சொல்லின் அடிப் பிறந்த புலமை புலவர் என்ற சொற்களும்,

அறிவுடைமை அறிஞர் என்றே பொருள்படும். இத்தகைய பொதுச்சொல் மொழியிலக்கணத்தைச் சிறப்பாகச் சுட்டுதற்குப் பொருந்தாது.

**"புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"**

என்று பனம்பாரனார் கூறியிருப்பினும், அது பிறரால் ஏற்றுக்கொள்ளப் பட்டதும் பெருவழக்காக வழங்கியதும் இல்லை. அறிவுநூல்களெல்லா வற்றையும் பொதுவாகப் புலம் என்பது செய்யுள் வழக்கம். "புலம்புரி யந்தணர்" என்னும் பரிபாடற்றொடரில் (6 : 45) மறைநூல் புலம் எனப்பட்டது. இஃது ஓர் ஆகுபெயர். வேதம் என்னும் வடசொல்லுக்கும் அறிவு என்பதே இயற்பொருளாகும். [வித்(=அறி.) - வேதம்]. பனம்பாரனார் கூற்றில் உள்ள புலம் என்னுஞ் சொல், பொதுவாக அறிவு அல்லது அறிவுநூல் எல்லாவற்றையும் குறிப்பதாயினும், இடம் நோக்கிச் சிறப்பாக இலக்கணத்தை அல்லது இலக்கண நூலைக் குறிப்பதாகக் கொள்ளப்படும். ஆனால், இது ஆட்சிபற்றியதேயன்றி இயல்புபற்றியதன்று. இதனால் புலம் என்பது இலக்கணப் பெயராகாது.

இனி, இயல் என்ற சொல்லோவெனின், அது எல்லாப் பொருளுக்கும் உரிய தன்மையை அல்லது இயல்பைப் பொதுப்படையாகச் சுட்டுவதன்றி வேறொன்றும் குறியாமையின், இலக்கணப் பெயராதற்கு எள்ளளவும் ஏற்றதன்றாம். இயல் = தன்மை. இயன்மொழி வாழ்த்து = ஒருவனுடைய சிறந்த தன்மைகளை எடுத்துக் கூறிப் புகழ்வது. இயல் = இயல்பு, இயற்கை.

பிற மொழிகளில் இலக்கணம் தோன்று முன்பும், ஆரியர் வருமுன்பும் தொன்றுதொட்டும், தமிழில் இலக்கண, இலக்கியம் இருந்துவருவதுடன், இன்றும், தமிழில்தான், பிற மொழிகளுக்கெல்லா மில்லாத பொருளிலக்கணமும் இருந்துவருகின்றது. இதனாலேயே,

**"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து**
**பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ் ஏனை**
**மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்**
**எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"**

என்று பரிந்துரைத்தார் பரஞ்சோதி முனிவர்,

இனி, இலக்கணம் இலக்கியம் என்னுஞ் சொற்களின் வடமொழி வடிவான லக்ஷணம், லக்ஷ்யம் என்பவற்றிற்கு வடமொழியில், grammar, literature என்னும் பொருளுண்டா வெனின், அதுவுமில்லை. வடமொழியில் அவற்றின் பொருளாவன:

லக்ஷண = குறி, அடையாளம், இயல்பு, தன்மை, குணம், அழகு, (முதலியன).

லக்ஷ்யம் = குறிக்கப்பட்டது, வரையறுக்கப்பட்டது, வரணிக்கப் பட்டது, குறிக்கோள், நோக்கு, குறிக்கோளுடையது (முதலியன).

இவ் விரு சொற்களின் அடிப்படைக் கருத்தும் குறி என்பதேயாகும். ஆனால், இவற்றின் மூலம், ரஞ்ச்(ranj) என்பதன் திரிவான ரக்த (rakta) என்றும், லக் (lag) என்றும், இருவேறு வகையாகச் சொல்லப்படுகின்றது.

ரஞ்ச் = வரணம் பூசப்பெறு, நிறங்கொள், விளங்கு, ஒளிர்.

இச் சொல் ரங் (rang) என்பதன் திரிபாகும்.

லக் = இசை, இணை, கட்டு, ஒட்டு.

இச் சொல், lego என்னும் கிரேக்கச் சொல்லுக்கும், ligne என்னும் இலத்தீன் சொல்லுக்கும் இனச் சொல்லாகும்.

லக்ஷண, லக்ஷ்ய என்னும் சொற்களுடன், லக்ஷம் (நூறாயிரம்), லக்ஷ்மன் அல்லது லக்ஷ்மணன், லக்ஷ்மீ முதலிய சொற்களும், வடமொழியில் தொடர்புறுத்தப்பட்டுள்ளன. லக்ஷ்மன், லக்ஷ்மணன்=சிறந்த குறிகளை அல்லது நல்லிலக்கணங்களை யுடையவன். லக்ஷ்மீ = நற்குறியை அல்லது அதிர்ஷ்டத்தை யுடையவள்; அதிர்ஷ்டசாலி அல்லது தெய்வம்.

லக்ஷ்மீ என்னும் சொல்லுக்குச் சிலர் லக் (lag) என்பதையும், சிலர் லஞ்ச் (lanj) என்பதையும், மூலமாகக் காட்டுகின்றனர். லஞ்ச் = ஒளிர், விளங்கு, திகழ்.

லக்ஷணம், லக்ஷ்யம் என்னும் இருசொற்களும், வடமொழியில் இலக்கணம் இலக்கியம் என்று பொருள்படாததோடு, இலக்கணம், இலக்கியம் என்னும் தமிழ்ச்சொற்களைப்போல, குறிப்பொருளையே அடிப்படையாகவும், விளங்குதற் பொருள் தரும் இலங்கு என்னும் சொல்லையே மூலமாகவும் கொண்டுள்ளன. இது மிகக் கவனிக்கத்தக்கது.

வடமொழியில் இலக்கணத்தைக் குறிக்க வ்யாகரணம் என்னும் சொல்லும், இலக்கியத்தைக் குறிக்கச் சாகித்யம் என்னும் சொல்லும் உள்ளன. தமிழிலோ இலக்கணம், இலக்கியம் என்னும் சொற்களைத் தவிர வேறெதுவுமில்லை. அஃதோடு, அவ் விரு சொற்களுக்கும் வேர் தமிழில்தான் உள்ளது. அஃதெங்ஙன மெனின், காட்டுவல்:

எழுச்சிப் பொருளை யுணர்த்தும் எகர வெழுத்தை அடியாகக் கொண்ட எல் என்னுஞ் சொல், எழுகின்ற அல்லது உதிக்கின்ற கதிரவனை யும் அதன் ஒளியையும் குறிக்கும்.

"எல்லே யிலக்கம்" என்பது தொல்காப்பியம் (இடை 21)

எல் = கதிரவன், வெயில், ஒளி, பகல்.

எல் - என்று = கதிரவன்.

என்று - என்றவன் = கதிரவன்

என்று - என்றூழ் = கதிரவன் முதிர்ச்சி, கோடை.

எகரம் அல்லது ஏகாரம் எழுச்சிப்பொரு ளுணர்த்துவதை, எழு, எம்பு, எவ்வு, எக்கு, எடு, ஏண், ஏணி, ஏணை, ஏத்து, (ஏற்றிச்சொல்), ஏந்து, ஏல், ஏறு,

erect, edify, eructate முதலிய சொற்களிற் காண்க. உயர்ச்சிப்பொருளும் எழுச்சிப் பொருளோ டொக்கும்.

எல் - எல்கு - எலகு - இலகு = விளங்கு.

சொற்களின் மோனைத்திரிபில் இகரம் எகரமாகவும் எகரம் இகரமாகவும் திரிவது இயல்பே.

இலகு - இலங்கு = விளங்கு.

இலங்கு = ஏரி, குளம்.

தெளிந்த நீர் பளிங்குபோல் விளங்குதலால், ஏரி இலங்கு எனப்பட்டது போலும்!

"மீன்க ணற்றே அதன்சுனை" என்று கபிலர் பறம்புமலைச் சுனையை நிலாவிற்கு ஒப்பிட்டுக் கூறியது கவனிக்கத்தக்கது.

இலங்கு - இலஞ்சு - இலஞ்சி = ஏரி, குளம்.

லஞ்சு (lanj), ரங்கு (rang) என்னும் வடசொற்கட்கு இலங்கு என்னும் தென்சொல்லே மூலமாகும்.

இலங்கு - லங்கு - ரங்கு (வ.)

லங்கு - லஞ்சு - ரஞ்சு - ரக்த (வ.)

இலங்கு - இலங்கை = ஆற்றிடைக்குறை, தீவு, இராவணன் ஆண்ட நகரம் அல்லது தீவு.

பெருநீரிடைப்பட்ட சிறுநிலம் தனித்து விளங்குவதால் இலங்கை எனப்பட்டது போலும்!

இலங்கு-இலக்கு = விளக்கு, விளக்கம்.

இலக்குதல் = சொலிப்பித்தல், விளங்கவைத்தல், வரைதல், எழுதுதல், குறித்தல். "இரீரகை யிலக்குக" (சைவச. பொது. 274).

வரணந்தீட்டிப் படம் வரைவதும் எழுத்தெழுதுவதும் விளங்கவைத்த லாகும். முதற்காலத்தில் படவெழுத்தே (Linoglyph) வழக்கிலிருந்தது. இன்றும், எழுதுதல் என்னுஞ் சொல், வரணப்படம் வரைதலையும் எழுத் தெழுதுதலையுங் குறித்தல் காண்க. கண்ணுக்கு மறைந்துள்ள பொருள்களை விளக்கு விளக்குதல்போல, எழுத்தும் கண்ணுக்கு மறைந்துள்ள கருத்துகளை விளக்குவதாகும். எழுதுதலும் குறித்தலும் ஒன்றே.

இலக்கு - இலக்கி = எழுது.

**"இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கித்து"** (சீவக. 180)

இலக்கு அல்லது இலக்கி என்னுந் தென்சொல்லே வடமொழியில் லிக் எனத் திரியும். இது மிகமிகக் கவனிக்கத்தக்கது.

லிக்=எழுது, லிகித=எழுதப்பட்டது, லிபி=எழுத்து, லேகக்= எழுத்தாளன், லேக=எழுதப்பட்டது, லேகனீ=எழுதுகோல்-இவ்வாறு இலக்கு என்னுஞ் சொல் வடமொழியில் பலவாறாகத் திரிசொற்களை உண்டு பண்ணியுள்ளது.

இலக்கு=குறிப்பொருள், அம்பெய்யுங் குறி, அடையாளம், குறித்த இடம், குறித்த சமையம், குறித்த அல்லது நாடிய பொருள், பொரக்குறித்த எதிரி, குறித்த அளவு.

இலக்கு வைத்தல் = குறிவைத்தல், இலக்குப்பார்த்தல் = குறிபார்த்தல், சமையம் பார்த்தல் - இவை இன்றும் தமிழ் வழக்காம்.

**"இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்**
**கையாறாக் கொள்ளாதாம் மேல்"** (குறள். 627)

என்றார் திருவள்ளுவர்.

ஒரு குறித்த இடத்தை இன்றும் இலக்கு என்பர் நெல்லை நாட்டார். இலக்கு என்னும் சொல்லே, இலத்தீனில் locus என்று திரிந்து, ஆங்கிலத்தில், local, locate, locative முதலிய சொற்களைப் பிறப்பிக்கும். குறித்த இடம் என்னும் சிறப்புப் பொருளைத் தரும் தமிழ்ச்சொல், இலத்தீனில் தன் சிறப்புப்பொருளை யிழந்து, இடம் என்னும் பொதுப்பொருளையே தருதல் காண்க. இங்ஙனமே, ஒப்போன் கேட்டலைக் குறிக்கும் தா என்னும் தமிழ்ச்சொல், இலத்தீனில் கேட்டலை மட்டும் குறிக்கும் do என்னும் திசைச்சொல்லாகத் திரிந்துள்ளது.

எய்வதற்குக் கொண்ட குறியன்றி, எடுத்துக்காட்டுவதற்குக் கொண்ட குறியும், இலக்கு என்றே சொல்லப்படும்.

"உடன்பிறப் பன்பிற்கு இலக்கானவர் இளங்கோவடிகள்" என்னும் சொற்றொடரில், இலக்கானவர் என்பது எடுத்துக்காட்டானவர் என்று பொருள்படும். இப் பொருளில் இலக்கு என்னும் சொல் இலக்கியம் என்னும் வடிவம் எய்தும். ஒரு கருத்தை அல்லது கூற்றை இலங்க (விளங்க) வைக்கும் பொருள் இலக்கு எனப்பட்டது. ஆங்கிலத்திலுள்ள illustrate என்னும் சொல்லும் இப் பொருளதே. L. illustro = to light up, to illuminate, il = in, lustro = to make light.

இலக்கு - இலக்கம் = ஒளி, குறிப்பொருள், எண்குறி, எண்ணிடம், எண், பேரெண்ணாகிய நூறாயிரம்.

இலக்கமிடுதல் = கணக்கிடுதல்.

முதலாவது நூறாயிரத்திற்கும் நூறு நூறாயிரத்திற்கும் தமிழில் தனிச்சொல் இல்லை. பின்னர், பேரிலக்கமாகிய நூறாயிரம் இலக்க மென்றும், கடைசி யிலக்கமாகிய நூறு நூறாயிரம் கோடி யென்றும் சொல்லப்பட்டன.

இலக்கம் - லக்ஷ (வ.) - லாக் (உ.)- lac (E.)

கோடி - கோட்டி (வ.) - குடோடு (உ.) -- crore (E.)

இலக்கு - இலக்கர், இலக்காரம் = ஆடை.

ஆடை ஆள்களை விளங்கச்செய்வதால் இலக்கர் எனப்பட்டது.

"ஆடை யில்லாதவன் அரைமனிதன்"

இலக்கு - இலக்கை = ஆடை, சம்பளம்.

சம்பளம் ஒரு குறியெதிர்ப்பாதலால் இலக்கை யெனப் பெயர் பெற்றது.

இலங்கு - இலஞ்சு - இலஞ்சினை - இலாஞ்சினை = குறி, அடையாளம், முத்திரை. இலஞ்சினை - இலச்சினை = குறி, முத்திரை.

இலாஞ்சினை - லாஞ்சன (வ.).

எழுத்தைக் குறிக்கும் இலக்கு என்னும் சொல், ஆகுபெயராய்ச் சொல்லையும் மொழியையும் உணர்த்தி, 'அணம்' விகுதி பெற்று மொழியின் நூற்றொகுதியையுங் குறிக்கும்.

Logos என்னும் கிரேக்கச்சொல் சொல்லையும், கட்டுரையையும் நூலையுங் குறித்தல் காண்க. அச் சொல்லும் இலக்கம் என்னும் தென் சொல்லுக்கு இனமானதே.

Gk. gramma = a letter; gramma - grammar (E.)

L. litera = a letter; litera - literature (E.)

இங்ஙனம், ஆங்கிலத்திலுள்ள இலக்கண விலக்கியப் பெயர்களும், எழுத்தைக் குறிக்குஞ் சொல்லினின்றே பிறந்துள்ளமை கவனிக்கத்தக்கது.

இலக்கணம் என்னும் தென்சொல்லினின்றே, லக்ஷணா என்னும் வடசொல்லும் திரிக்கப்பட்டு, பின்பு தமிழில் இலக்கணை என வழங்குகின்றது.

லக்ஷணா = குறிப்புப்பொருள்.

விட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டும் விடாத விலக்கணை ஆகிய மூன்றும் குறிப்பாய்ப் பொருளுணர்த்துவனவே. இலக்கணைக் கினமான ஆகுபெயர் குறிப்பாய்ப் பொருளுணர்த்து வனவற்றோடு (பவணந்தியாரால்) சேர்க்கப் பெற்றிருத்தல் காண்க.

தமிழில், இலக்கணம் இலக்கியம் என்னும் சொற்கள், வேர்ப் பொருளைத் தாங்கி நின்று, எழுத்தையுங் குறித்து, Grammar, literature என்னும் பொருளைத் தருகின்றன. வடமொழியிலோ, அவற்றுக்கு நேரான லக்ஷணம் லக்ஷ்யம் என்னும் சொற்கள் வேர்ச்சொல் அற்று, எழுத்தைக் குறிக்கும்போது லிக் என வேறொரு வடிவம் பூண்டு, இலக்கண விலக்கியத்தைக் குறிக்காது குணங்குறிப் பொருளையே தாங்கி நிற்கின்றன. இவ் வேறுபாட்டைக் கண்டுகொள்க.

இதுகாறும் கூறியவற்றால், இலக்கணம், இலக்கியம் என்னும் சொல் லிரண்டும் தென்சொல்லே யென்று தெற்றெனத் தெளிக. குலப் பிரிவினை யால் தமிழனுக்கு வந்த தாழ்வு, விடுதலை யடைந்த பின்பும் தமிழைத் தாக்காதிருக்க.

இலக்கணம், இலக்கியம் என்னும் இரண்டையுங் குறிக்கத் தமிழில் 'அணங்கம் அணங்கியம்' என வேறிரு சொற்களும் உள. அஞ்சணங்கம் - ஐந்திலக்கணம், அஞ்சணங்கியம் - ஐந்திலக்கியம் (யாழ்ப்பாண அகராதி). அணங்கம் - இலக்கணம் (பொதிகை நிகண்டு). அணங்குதல்-ஒலித்தல். "புகையணங்க" (புறப்பொருள் வெண்பாமாலை 10, 18). இவை சென்னைப் பல்கலைக் கழக அகராதியின் இணைப்பு மடலத்திலும் குறிக்கப்பட்டுள்ளன.

அணங்கு = ஒலி, எழுத்து, அணங்கு - அணங்கம் = இலக்கணம்.

அணங்கு - அணங்கியம் = இலக்கியம்.

அணங்கு என்னும் வினைச்சொல் தூய தனித்தமிழ்ச் சொல்லாதலில், அணங்கம், அணங்கியம் என்னும் பெயர்களை வடசொல்லெனத் தலைசிறந்த தமிழ்ப் பகைவரும் வாய்திறவார் என்பது தெளிதருதேற்றம்.

**- "செந்தமிழ்ச் செல்வி" ஏப்பிரல் 1948**

## 6

# திருவென்னும் சொல் தென்சொல்லே

மருவ லர்கொள மன்பொரு ளற்றபன்
மரபி னாருளர் மைந்திலர் வாயிரு
திருவி ழந்தபின் றிருவெனுஞ் சொல்லையு
மொருவ நின்றவன் தமிழ னொருவனே!

மிகமிகச் சிறுபான்மையரான வடமொழியாளர் பன்னூற்றுக்கணக் கான தென்மொழிச் சொற்களை வடமொழியில் திரித்துக்கொண்டது மன்றி, சொல்லாராய்ச்சியும் கலைமுறை யறிவும் மிக்க இவ் விருபதாம் நூற்றாண் டிலும் அவற்றை வடசொற்களே யென்று வலிப்பதும், வடசொல் வடிவங் களையே தமிழ்நாட்டில் வழங்க நெஞ்சமுழுத்தங் கொள்வதும் விந்தையினும் விந்தையே!

திருவென்னுஞ் சொல் ஆரியரான வடமொழியாளர் நாவலந் தேயத்திற்கு வருமுன்னரே தமிழகத்தில் வழங்கிவந்த தமிழ்ச்சொல் லென்பதற்கு, தொன்முது சார்பு நூலான தொல்காப்பியத்திலேயே அது ஆட்சி பெற்றிருப்பதும் மேலை யாரியமொழிகளுள் ஒன்றிலேனும் அது எவ் வடிவினும் காணப்படாமையும், அதன் வேர்ப்பொருள் வடமொழி யிலில்லாது தமிழிலேயே யிருப்பதும் போதிய சான்றுகளாம்.

திருவென்னுஞ் சொல் தமிழில், 1. செல்வம், 2. திருமகள், 3. சிறப்பு, 4. அழகு, 5. காந்தி, 6. பொலிவு, 7. பேறு(பாக்கியம்), 8. தூய்மை அல்லது தெய்வத்தன்மை, 9 நல்வினை, 10, கணியன்(சோதிடங் கூறுவோன்), 11. மாங்கலியம், 12. பழைய தலையணி வகை, 13. மகளிர் கொங்கைமேல் தோன்றும் வீற்றுத்தெய்வம், 14. தூய்மை அல்லது பெருமை குறிக்கும் அடைமொழி முதலிய பல பொருள்களில் தொன்றுதொட்டு வழங்கி வருகின்றது; அழகு என்னும் பொருளில் 'திருமை' எனப் பண்புப் பெயர் விகுதி பெற்றும், செல்வம் பெருமை தூய்மை முதலிய பொருள்களில் 'திருவம்' என அம்மீறு பெற்றும், அக் குணங்களைக் குறித்துத் திருவன், திருவாளன், திருவாட்டி, திருவத்தவர், திருவினாள் என உயர்திணைப் பெயராகியும் வழங்கியிருக்கின்றது. 'ஸ்ரீ' என்னும் அதன் வடசொல் வடிவமோ கடைக்கழகத்திற்குப் பிற்காலத்ததாய், அதுவும் உரைநூல்களில், 1. செல்வம், 2. திருமகள், 3. பேறு, 4. அழகு, 5. தூய்மை யடைமொழி என்னும்

ஐம்பொருள்களிலே வடமொழியாளர் தொடங்கிவிட, அவராலும் மொழி நூலறிவும் தாய்மொழிப் பற்றும் அற்ற தமிழராலும் வழங்கப்பட்டு வந்திருக்கின்றது. 'ஶ்ரீ' என்பதிலுள்ள சகரம் தமிழ்ச் சகரத்தை யொத்த ஒலியினதா யிருப்பது கவனிக்கத்தக்கது.

திருவென்னுஞ் சொல்லுக்கு மேற்கூறப்பட்டுள்ள பொருள்களுள் செல்வம், அழகு, தூய்மை யென்னு மூன்றே முக்கியமும் பிறவற்றுக்கு அடிப்படையுமாகும். அம் மூன்றனுள்ளும், செல்வம் என்பதே முதலதாகும்.

செல்வத்தினால் ஒருவர் சிறக்கவுண்டு இன்பமாய் வாழ்வதால் உடல் மொழுமொழுவென அழகு பெறுகின்றது; வறுமையினால் வயிறு காய்ந்து மனங்கவன்று வெயிலில் வாடி மேனி கெடுகின்றது. இதனாலேயே, செல்வமுள்ள இனத்தாரை வெள்ளொக்க லென்றும் வறுமையுற்ற இனத் தாரைக் காரொக்க லென்றுங் கூறினர் நம் முன்னோர். செல்வ மிகுதியினால் ஒருவர்க்குப் பெருமையும் தெய்வத்தன்மையும் உண்டாகின்றது; உலகிற் செல்வமிக்க அரசன் தெய்வத் தன்மையுடையவனாகக் கருதப்படுகின்றான். கடவுள் உலகெலாமுடைய செல்வர். அளவிறந்த மதிப்பே தெய்வ வணக்கமாகும். மதிப்புச் செல்வத்தால் வருவது. அறிவும் ஒருவகைச் செல்வமே. தெய்வத்தன்மையுள்ள விடமெல்லாம் தூய்மை கருதப்படும்.

ஆழ்ந்து நோக்கின், திருவென்னுஞ் சொல்லுக்குரிய பொருள் களெல்லாம் மேற்கூறிய மூன்றனுள் அடங்கும்; நோக்கிக் காண்க.

திருவென்னுஞ் சொல் இப்போதுள்ளபடி முதன்முதலாகத் தொல் காப்பியத்தில்,

> **"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோ**
> **டுருவு நிறுத்த காம வாயில்**
> **நிறையே அருளே உணர்வொடு *திரு*வென**
> **முறையறக் கிளந்த ஒப்பினது வகையே"** (தொல். மெய்ப். 25)

என்னும் நூற்பாவில், செல்வம் என்னும் பொருளிலேயே வழங்கப் பட்டுள்ளது. பின்னர்த் திருக்குறளில்,

> **"அழுக்கா றெனவொரு பாவி *திரு*ச்செற்றுத்**
> **தீயுழி யுய்த்து விடும்",** (குறள். 168)

> **"அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்**
> **திறனறிந் தாங்கே *திரு*",** (குறள். 179)

> **"ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்**
> **பேரறி வாளன் *திரு*" ,** (குறள். 215)

> **"இருவே றுலகத் தியற்கை *திரு*வேறு**
> **தெள்ளிய ராதலும் வேறு",** (குறள். 374)

**"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே**
**கல்லார்கட் பட்ட *திரு*",** (குறள். 408)

**"வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக**
**நினைப்பானை நீங்குந் *திரு*",** (குறள். 519)

**"இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்**
**சீறிற் சிறுகுந் *திரு*",** (குறள். 568)

**"முயற்சி *திரு*வினை யாக்கு முயற்றின்மை**
**யின்மை புகுத்தி விடும்",** (குறள். 616)

**"இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்**
***திரு*நீக்கப் பட்டார் தொடர்பு",** (குறள். 920)

**"கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்**
***திரு*நுதற் கில்லை யிடம்"** (குறள். 1123)

எனச் **செல்வம்**, (செல்வத்திற்குத் தலைவியான) **திருமகள், அழகு** என்னும் முப்பொருள்களில் வழங்கியுள்ளது; பிற பொருள்களில் பிற நூல்களில் வழங்கியுள்ளது.

இனி, இருவகை வழக்கிலும், தேவியல் மகவியல் என்னும் இரு வகைச் சார்பில், திரு என்னும் சொல் **தூய்மை, செல்வம், அழகு, மங்கலம், கண்ணியம்** என்னும் பொருள்களுள் ஒன்றில் அடை மொழியாகத் தொன்றுதொட்டு வழங்கி வருவதைப் பின்வருங் காட்டுகளா லறிக.

## 1. தேவியல்

**(1) தெய்வம்:** திருமகன், திருமகள், திருமால், திருமடந்தை.

**நூல்:** திருக்கடைக்காப்பு, திருக்குறள், திருக்குறுந்தாண்டகம், திருக்கோவை, திருநெடுந்தாண்டகம், திருப்பதிகம், திருப்பல்லாண்டு, திருப்பாட்டு, திருப்பாவை, திருப்புகழ், திருமந்திரம், திருமுறை, திருமொழி, திருவகுப்பு, திருவாசகம், திருவாய்மொழி, திருவெழுத்து.

**ஊண்:** திருக்கன்னலமுது, திருப்படிமாற்று, திருமதுரம், திருமாலை வடை, திருவமுது.

**அணி:** திருச்சுண்ணம், திருநீறு, திருப்பட்டம், திருப்பாவாடை, திருமண், திருவாத்தி.

**பொருள்:** திருச்சின்னம், திருமரம், திருமலர், திருமுட்டு, திருமுளைப்பாலிகை, திருவலகு, திருவாசிகை, திருவாடுதண்டு, திருவிளக்கு.

**இடம்:** திருச்செந்தூர், திருநகர், திருநாடு, திருநெல்வேலி, திருப்பதி, திருமலை. திருவரங்கம், திருவிதாங்கூர், திருவேங்கடம், திருக்கண், திருக்களிற்றுப்படி, திருக்கற்றளி, திருச்சுற்று,

திருப்பாற்கடல், திருமடம், திருமாளிகை, திருமுற்றம், திருமுன், திருவுண்ணாழிகை, திருவோலக்கம்.

**காலம்:** திருநாள், திருவாதிரை, திருவோணம்.

**சினை:** திருக்கண்(சாத்துதல்), திருச்செவி, திருமுடி, திருமேனி, திருவடி, திருவாய்(மலர்தல்), திருவுள்ளம்.

**குணம்:** திருக்குறிப்பு, திருவருள், திருக்கோலம்.

**தொழில்:** திருக்கலியாணம், திருக்கார்த்திகை, திருவிழா, திருவூறல், திருக்காப்பு, திருக்கூத்து, திருத்தொண்டு, திருப்பணி, திருப்பள்ளி, திருமுழுக்கு, திருவிளையாடல்.

**(2) அடியார்:** திருக்கூட்டம், திருச்சுற்று, திருத்தக்கதேவர், திருத்தொண்டர், திருமூலர், திருவடிமார், திருவள்ளுவர், திருவோடு.

## உ. மகவியல்

**(1) வேத்தியல்:** திருமறு, திருமுகம், திருமுத்து, திருமூப்பு, திருமந்திரம், திருவாணை, திருவாய்க்கேள்வி, திருவோலை.

**(2) பொதுவியல்:** திருநிலைக்கால், திருநிலைமகளிர், திருப்பூட்டு, திருமகன், திருமகள், திருமங்கலியம், திருமணம், திருவாங்குதல், திருவில், திருவினை, திருவுழுத்து(அணி).

இவற்றுள், திருநெல்வேலி, திருவரங்கம் முதலிய இடப்பெயர்கள் தொன்றுதொட்டு உலகவழக்கில் திருவென்னும் அடைபெற்றே வழங்கு வதையும், ஸ்ரீரங்கம் என்னும் வடிவம் இருவகை வழக்கிலும் பிற்காலத்த தாதலையும் நோக்குக. இதனால், திருவில்லிபுத்தூர் என்பதே ஸ்ரீ வில்லிபுத்தூர் என்பதன் பண்டை வடிவமும் என அறிக.

திருமகன் என்னும் பெயர் திருமான் என மருவிச் செல்வம் அல்லது பெருமை குறிக்கும் அடைமொழியாகும். பெருமகன் என்னும் பெயர் பெருமான் என மருவுதல் காண்க. திரு என்பதை ஸ்ரீ என்று திரித்ததனால், திருமான் என்னும் அடையை ஸ்ரீமான் என்று திரிப்பர் வடமொழியாளர். அதனுள், மான் என்னும் ஈற்றை 'மத்' என மற்றும் திரித்து, 'ஸ்ரீமத்', 'ஸ்ரீமதி' என்பவற்றை முறையே ஆண்பால் பெண்பா லடைமொழிகளாக முழு வடவடிவில் வழங்குவர். திருமகன், திருமான் என்னும் ஆண்பாற் சொற்கட்குத் திருமகள், திருமாட்டி என்பவை தமிழில் முறையே பெண் பாலாகும். பெருமான் என்னும் ஆண்பாற் சொற்குப் பெருமாட்டி என்பது பெண்பாலாதல் காண்க. ஸ்ரீ என்னும் வடசொல் வடிவைத் தமிழில் சீ எனச் சிதைத்துத் திருமான் திருமாட்டி என்பவற்றைச் சீமான் சீமாட்டியென எழுதுவது, கோழிக்கோடு என்பதை Calicut என்னும் ஆங்கிலவடிவு வாயிலாய்க் கள்ளிக்கோட்டை யென்றெழுதுவதும், காளிக்கோட்டம்

என்பதை Calcutta என்னும் ஆங்கில வடிவு வாயிலாய்க் கல்கத்தா என்றெழுதுவதும் போன்ற அறியாமையேயாகும். இதனால், சீகாளத்தி என்னும் வடிவினும் திருக்காளத்தி என்னும் வடிவே தக்கதாகும் என அறிக.

இனி, திருவென்னுஞ் சொல்லையன்றிச் சிறுவென்னுஞ் சொல்லையும் ஸ்ரீ எனத் திரித்துள்ளனர் வடமொழியாளர். பெண்டிர்க்குச் சொந்தமாகவுள்ள சிறுசெல்வத்திற்கு அல்லது செல்வத்திற்குச் 'சிறுபாடு' என்றும் 'சிறுதனம்' என்றும் பெயர்.

**"சிறுதனந் தேடுவள்"** (தண்டலை. 95)

வீட்டுச் செலவில் மீத்துவைக்கும் சிறு தொகைக்குச் 'சில்வானம்' என்று பெயர். 'சிறுதனம்' என்பது பிற்காலத்தில் தனி வேற்று (private) நிதி எனப் பொதுப்படவும் பொருள் பெற்றது.

"உடையார்ஸ்ரீ ராஜராஜ தேவர் சிறுதனத்துக்

கொடுத்த" (S. I. I. ii, 3)

சிறுதனம் என்பது ஸ்ரீதனம், சீதனம் எனத் தவறாய் வழங்குகின்றது.

ஸ்ரீ என்பதைத் திருவென்றும், ஸ்ரீலஸ்ரீ என்பதைத் திருப்பெருந்திரு அல்லது திருமிகுதிரு என்றும், மகாராஜராஜஸ்ரீ என்பதை மகவரச வரசத்திரு அல்லது மாவரச வரசத்திரு என்றும், ராஜஸ்ரீ என்பதை அரசத்திரு என்றும் தமிழில் வழங்கல் வேண்டும். ம. (ரா). (ரா). ஸ்ரீ என்னும் முகவரியடையில், ஸ்ரீ என்பது தவிர மற்ற மூவெழுத்துகளும் தமிழ்ச் சொற்களின் முதலெழுத்துகளாயே யிருத்தலைக் காண்க. இதனால், ஸ்ரீ என்பது பின்னை வடிவ மென்பதை யோர்க.

சீர்காழி என்பதன் முதல் வடிவம் சீகாழி என்பர். சீர் என்னுஞ் சொல் செந்தமிழாயிருத்தலின், சீர்காழி யென்றே வழங்குவது நல்லது. இதற் கிசையாதார் திருக்காழி யென்றே வழங்குதல் வேண்டும்.

இனி, திருவென்னுந் தமிழ்ச்சொற்கு வேர்ப்பொருள் என்னையோ வெனிற் கூறுவேன்:

திருவென்பது தில் என்னும் வேரடியாய்ப் பிறந்து திரட்டப்படுவது அல்லது ஈட்டப்படுவது என்னும் பொருளது.

ஒ.நோ: தேட்டு (தேடப்படுவது) = செல்வம்.

தில் > திர் > திரள் > திரளை > திரணை.

தில் > திர் > திரு.

தில் > திர் > திரம் > திறம் > திறன் > திறல்.

தில் > திள் > திட்டு > திட்டை > திறம் > திறமை.

திள் > திண் > திண்ணை > திணை.

திண் > திண்ணம்.

திண் > திண்டு.

திட்டு > திட்டம் > திடம்.
திட்டு > திட்டல் > திடல்.
தில்லுமுல்லு > திண்டுமுண்டு.

தில் என்னும் வேர் முறையே திரட்சி, கட்டி, மேடு என்னும் பொருள்களையும் திரட்சிப் பொருளினின்று உறுதி, குழு, குளிர், வலிமை, அணை(மெத்தை) முதலிய பொருள்களையும் தருதலை மேற்காட்டிய திரிசொற்களாற் (Derivatives) காண்க. இனி, தில் என்னும் வேர்க்கும் மூலவேர் ஒன்றுள்ளது. அதை இங்கு விரிப்பிற் பெருகும்; சுருக்கின் விளங்காது. அதன் விளக்கத்தை எனது மொழிநூலின் முதன் மடல இரண்டாம் பாகத்திற் கண்டுகொள்க.

இதுகாறும் கூறியவற்றால், திரு என்பது தென்சொல்லே யென்றும், அதுவே வடமொழியில் ஸ்ரீ எனத் திரிக்கப்பட்டுள்ள தென்றும் தெள்ளத் தெளிய அறிக. ஸ்ரீ என்பதே செவிக் கினிய தென்று வடமொழியாளரின் அடியார் சிலர் கூறுவாராயின்,

> **“..................................................................– நேர்நின்று**
> **காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை**
> **சால்புடைத் தென்பாரு முண்டு”**

எனக் கூறி விடுக்க.

**– “செந்தமிழ்ச் செல்வி” விடை 1943**

## 7

# ‘காலம்’ என்னுஞ் சொல் எம்மொழிக்குரியது?

வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொதுவாகவோ, அவ் விரண்டனுள் ஒன்றற்கே சிறப்பாகவோ உரிய பல சொற்கள்பற்றி அவ் விரு மொழியாளர்க்கும் தொன்றுதொட்டு நிகழ்ந்துவரும் போர் கற்றார் அனைவர்க்கும் தெரிந்ததே. அச் சொற்களுள் ‘காலம்’ என்பதும் ஒன்றாகும்.

ஒரு சொல்லை ஒரு மொழிக்குரியது என்று கூறுதற்கு ஒப்பியன் மொழிநூல்(Comparative Philology) அறிவு இன்றியமையாது வேண்டப்படும். இந்தியாவில், சிறப்பாய்த் தமிழ்நாட்டில், மொழிநூல் என்னும் பெயரையே கேட்டறியாதாருங்கூட, வடமொழிப்பற்றொன்றே காரணமாகப் பல தென்சொற்களை வடசொற்களாகக் கூறி வருகின்றனர். அவருள்ளும் ஆங்கிலக் கல்விப்பட்டம் பெற்றவரோ வென்றால், தம்மை எல்லா மொழிகளிலும் வல்லுநரென்றே எண்ணிக்கொள்கின்றனர். மொழிநூல் என்பது பொதுக் கல்வியினின்றும், அல்லது இலக்கிய விலக்கணக் கல்வியினின்றும் வேறான ஒரு தனிக்கலை என்பதை அவர் சற்றும் உணர்ந்திலர்.

பொதுவாக, வடமொழிப் பற்றினரெல்லாம் வடமொழி நூல்களிலும் அகராதிகளிலும் உள்ள சொற்களெல்லாம் வடமொழிச் சொற்களே என்று எண்ணிக்கொள்கின்றனர். உலகத்திலுள்ள பல்வேறு மொழிகளும் தம்முள் எவ்வளவோ வேறுபாடுடையவேனும், ஒரு மரத்தின் பல்வேறு கிளைகள் ஓர் அடிமரத்தினின்றே கிளைத்துள்ளது போல, ஒரு மூலமொழியினின்றே கிளைத்துள்ளனவாகும். சில சொற்களிலும், இலக்கண நெறிமுறைகளிலும் உலக மொழிகளெல்லாம் ஒத்திருப்பதே இதற்குப் போதிய சான்றாம். உலகத்திலுள்ள பல்வேறு மக்கட்குலங்களும் ஒருதாய் வயிற்றின என்பது இற்றை மொழியாராய்ச்சியால் தெரியவருதலின், அவற்றால் பேசப்படும் பல்வேறு மொழிகளும் ஒரு மூலத்தின என்றே கொள்ளத்தகும்.

ஐயாயிரம் மைலுக்கப்பாற்பட்ட இலத்தீன், கிரேக்க மொழிகட்கும் தமிழுக்கும் பொதுவான சில சொற்களுள.

எ-டு: navis(L.) = நாவாய். palios(Gk.) = பழைய.

இரு குலத்தார் அல்லது நாட்டார் கலந்து அல்லது அடுத்தடுத்து வாழின், சில பொருள்களைத் தமக்குட் கொண்டுங் கொடுத்தும் மாற்றிக்கொள்வதுபோலச் சில சொற்களையுங் மாற்றிக்கொள்வர்.

உதாரணமாக, ஆங்கிலருக்கும் தமிழருக்கும் தொடர்புண்டானபின் Father(பாதிரி), Battalion(பட்டாளம்) முதலிய ஆங்கிலச் சொற்கள் தமிழிலும், பண்டி(bandy), தோப்பு(tope) முதலிய தமிழ்ச்சொற்கள் ஆங்கிலத்திலுமாகக் கலந்துள்ளன.

வடமொழியும் தென்மொழியும் ஐயாயிரம் ஆண்டுகளாக அடுத்தடுத்து வழங்கினமையின், ஏற்கெனவே இவ் விரண்டிற்குமுள்ள பொதுச் சொற்கள் நீங்கலாகப் புதிதாக ஒன்றினின்றொன்று கடன் கொண்டுள்ள சொற்கள் எத்துணையோ பலவாம். வடமொழியிலும் தமிழ்ச் சொற்கள் அல்லது திராவிடச் சொற்கள் உண்டென்பதைக் காலஞ்சென்ற கால்டுவெல், குண்டர்ட் என்னும் இருபெரு மொழிநூலாராய்ச்சியாளர் எடுத்துக்காட்டியுள்ளனர். இவருள் முன்னையவர் வடசொற்களையும் தென்சொற்களையும் பிரித்தறிவதற்கும் விதிகள் வகுத்திருக்கின்றனர். அவற்றுள் முக்கியமானவை இரண்டு. அவையாவன:

1. ஒரு சொல் எந்த மொழியில் பல்வேறு வடிவங்களுடனும் இனச்சொற்களுடனும் மூலப்பொருளைத் தாங்கிக்கொண்டு பெருவழக்காய் வழங்குகின்றதோ, அந்த மொழிக்கே அஃது உரியது என்பது.

2. வடமொழியிலும் தென்மொழியிலும் வழங்கும் ஒரு சொல் வடமொழியின் இனமான மேனாட்டு மொழிகள் ஒன்றிலுங் காணப்படாமல், தமிழின் இனமான மற்றெல்லாத் திராவிட மொழிகளிலுங் காணப்படுமாயின் அது தமிழுக்கே உரிய சொல்லாம் என்பது.

வடமொழி தேவமொழியென்றும், பிற மொழிகளெல்லாம் தன்னிடத்திற் கடன்கொள்ளத் தான்மட்டும் ஒரு சொல்லும் பிற மொழி யினின்று கடன் கொள்ளாது தனித்தியங்கும் தூய்மை வாய்ந்த தென்றும் சில வடமொழிவாணர் பொய்யும் புலையும் மலிந்த புராணக் காலத்தன்றி, ஆராய்ச்சிமிக்க இக்காலத்தும் பிதற்றுவது, மிகவும் எள்ளிநகையாடத் தக்கதன்றி வேறு என் செயற்பாலது?

வடமொழி இக்காலத் தமிழிற் பெரிதுங் கலந்திருப்பதால் ஏற்கெனவே இவ் விரண்டிற்குமுள்ள பொதுச் சொற்களோடு, புதிதாய் வடமொழிக்குச் சென்ற தமிழ் அல்லது திராவிடச் சொற்களையும் வடசொற்களே யென்று நடுநிலை ஆராய்ச்சியில்லா வடமொழிப் பற்றினரெல்லாம் நாக்கடிப்பாக வாய்ப்பறை யறைகின்றனர். ஆங்கிலச் சொற்கள் நூற்றுக்கு முப்பது வீதம் இற்றைத் தமிழில் தெருப்பேச்சிற் கலந்திருப்பினும், நூல்வழக்கிற் கலந்திலது. அங்ஙனம் ஒருகால் நூல்வழக்கிலும் கலக்குமாயின், பின்னர் ஆராய்ச்சியில்லாதார் all, beetle, crack, derive, ear, fear, galley. bail, in, jury, kill, locality, mess, near, one, put, quoth, roll, shrink, through, un, vain. want, yean, zenith என்ற ஆங்கிலச் சொற்களே முறையே எல்லாம், விட்டில், கிறுக்கு, திரி, ஏர், வெரு, கலம், ஆலி, இல், சூள், கொல், இலக்கு, மிசை, நெருங்கு, ஒன்று, போடு, கூறு, உருள், சுருங்கு, துருவ, அல், வீண்,

வேண்டு, ஈன், சென்னி என்னுஞ் சொற்களாகத் திரிந்துள்ளன என்று கூறுவரன்றோ? இங்ஙனமே வடசொற்களின் திரிபாகப் பல தூய தென்சொற்களைக் கூறுகின்றனரென்க.

இங்ஙனம் கூறுவோர் தமிழின் சொல்வளத்தையும் ஒருசிறிதும் நோக்குகின்றிலர். உண்மை என்னும் குணம் நினைவு, சொல், செயல் என்ற மூன்றையும் தழுவியது என்பதை உணர்த்தற்குத் தமிழில் உண்மை (உள் = மனம்), வாய்மை(வாய்), மெய்ம்மை (மெய் = உடம்பு) என மூவேறு சொற்கள் உள. மரத்தின் உறுப்புகளில் ஒவ்வொன்றிற்கும் அதனதன் வேறுபாட்டிற்கேற்ப வெவ்வேறு பெயர் உளது. இலையென்னும் ஒரே யுறுப்பிற்கு இலை, தாள், தோகை, ஓலை என நான்கு சொற்கள் உள்ளன. ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு தன்மையைக் குறிக்கும். பூவின் வெவ்வேறு நிலைகளைக் குறித்தற்கு வெவ்வேறு சொற்கள் உள்ளன. முதலாவது தோன்றும்போது அரும்பு; பேரரும்பாயின் போது; மலர்ந்தபின் மலர்; விழுந்தபின் வீ ; வாடியபின் செம்மல். உள்ளத்தின் வெவ்வேறு தொழிற்கும் வெவ்வேறு சொல் உள. எ-டு: உள்(ளு), to will; உணர் to feel, to comprehend; நினை, to think, to remember; நினைவுகூர், to remember, to commemorate; உன்(னு), to imagine, (உன்னம் = imagination); எண்(ணு), to deliberate, to consider; கருது, to conceive (கருத்து = concept, idea); அறி, to know, கொள், to opine, (கோள் = opinion, கொள்கை = doctrine); மதி, to estimate, to regard; முன்(னு), to propose; முன்னிடு, to propose, to set before, (முன்னிட்டு = having proposed, having set before, for the purpose of); தீர்மானி, to determine, to resolve; நய, to appreciate; தெருள், to perceive clearly. இங்ஙனம் தமிழிற் பல பொருளும் பற்றிப் பல சொற்களிருப்பவும் இவற்றைக் கவனியாதும், இவற்றின் நுட்பவேறுபாடுகளை ஆராயாதும், இவற்றுட் சிலவற்றை வடசொல்லென மயங்கியும், தமிழிற் பொருளுணர்த்தப் போதிய சொல்லில்லை யென்று பழித்துத் திரிவர்.

இவற்றுள், மதி யென்னுஞ் சொல் எல்லா மொழிகட்கும் பொதுவான மூலமொழிச் சொல்லாகும். அம் மூலமொழிக்குப் பிற மொழிகளினும் தமிழ் மிக நெருங்கியதென்பது மொழிநூல் ஆராய்ச்சியால் விளங்கும். இதுபற்றிக் கால்டுவெல் ஐயரும் பின்வருமாறு கூறுகின்றார். (எவரும் எங்ஙனமும் ஐயுறாமைப் பொருட்டு அவர் கூற்றின் மூலத்தையே மொழிபெயர்க்காது) இங்குத் தருகின்றேன்.

"Nevertheless, I regard the comparison of words, when carefully and cautiously conducted, as an important help to the determination of lingual affinities, and it will be found, I think, that the following vocabularies bear independent testimony, in their own degree, to the same result at which we arrived by grammatical comparison viz. that

the Dravidian idioms exhibit traces of an ancient, deep-seated connection with pre-Sanskrit—the assumed archaic mother-tongue of the Indo-European family, whilst at the same time the traces they exhibit of relationship to the languages of the Scythian group, especially to the Ugrian tongues, are on the whole, closer, more distinctive, and more essential."

- (Comparative Grammar of the Dravidian Languages, p. 452).

மேற்கூறியவாறே காலத்தைக் குறிப்பதற்கும் தமிழிற் பல சொற்களுள. அவை கால், பொழுது, வேளை, கொன், செவ்வி, அற்றம், ஏல்வை, சமையம், நேரம், ஞான்று, பதம் முதலியனவாம்.

இவற்றுள் கால் என்பது காலை, காலம் எனத் திரிந்து நெடுங் காலத்தையும் குறுங்காலத்தையும் குறிக்கும். ஏனையவெல்லாம் குறுங் காலத்தையே குறிக்கும். பொழுது என்பது போழ்து, போது எனத் திரியும். பெரும்பொழுது என்பது இரு மாதங்கொண்ட பருவத்தையும்(Season) சிறுபொழுது என்பது நான்மணி நேரங்கொண்ட நாட்பகுதியையுங் குறிக்கும். வேளை என்பது நாட்பகுதியைக் குறிக்கும்; செய்யுளில் வேலை என்றும் திரியும். கொன் என்பது உரிய தீய காலத்தையும், செவ்வி என்பது தகுந்த நற்சமையத்தையும், அற்றம் என்பது தகுந்த தீச்சமையத்தையும் குறிக்கும். ஏல்வை என்பது எல்வையென்றுங் குறுகும். சமையம் என்பது அமையமென்றும் திரிந்து, தகுந்த வேளையை அல்லது பருவமான நிலையைக் குறிக்கும். நேரம் என்பது ஒரு குறித்த நேரத்தையும் ஒரு வினை நிகழ்ச்சிக்குரிய காலத்தையும்(duration) குறிக்கும். பதம் என்பது ஒரு பொருளின் செவ்வையான நிலையைக் குறிக்கும். ஞான்று என்பது போது என்பதைப் போன்றது.

கால், காலை, பொழுது, வேளை, ஏல்வை, சமையம், நேரம், ஞான்று, பதம் என்னும் சொற்கள். வந்தகால், வந்தகாலை, வந்த பொழுது, வந்தவேளை என ஒரு குறித்த நேரத்தையுங் குறிக்கும்.

ஒரு நாளின் ஒளி இருள் வேளைகளைக் குறிப்பதற்குப் பகல் இரவு என்னுஞ் சொற்களும், ஒரு நாளிற் காலை 6 மணி முதல் நன்னான்கு மணி நேரமாகவுள்ள அறுவகைச் சிறுபொழுதுகளையுங் குறிப்பதற்குக் காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை என்னுஞ் சொற்களும் உள்ளன. வேலைக் காலத்தைக் கணிப்பதற்கு 24 நிமிட நேரங்கொண்ட நாழிகை என்னும் அளவுள்ளது.

ஒரு வாரத்தின் ஏழு நாள்களும் ஞாயிறு, திங்கள், செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி எனப்படும். இவற்றுள் அறிவன், காரி என்னும் இரண்டிற்கும் பதிலாகப் புதன், சனி என்னும் வடசொற்கள் வழங்கி வருகின்றன. வாரம், கிழமை என்பன உரிமை என்னும் ஒருபொருட்

சொற்கள். (காரி = கரியது. 'கரியவன்' என்று சிலப்பதிகாரத்துள்ளும்(10 : 102), 'மைம்மீன்' என்று புறநானூற்றுள்ளும்(117) வந்திருத்தல் காண்க. மை = கறுப்பு.)

இருவாரம் சேர்ந்தது ஒரு பக்கம் எனப்படும். இதையே பக்ஷம் என்பர் வடமொழியார். ("ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்து" சிலப். 23 : 133. பக்கம் = பகுதி; இருட்பக்கம் = கிருஷ்ண பக்ஷம்.)

இருபக்கம் சேர்ந்தது ஒரு திங்கள் (மாதம்).

இரு திங்கள் சேர்ந்தது ஒரு பெரும்பொழுது. சித்திரை முதல் பங்குனி யீறாக, இவ்விரு மாதமாய், முறையே, இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என ஆறு பெரும்பொழுதுகளாகும். இவை மிகப் பழைய இலக்கணமாகிய தொல்காப்பியத்திற் சொல்லப்பட்டிருப்பதுடன் இன்றும் தமிழ்நாட்டிற்கே பொருந்துவனவா யுள்ளன. ஆகையால், இவற்றுக்கு வடமொழியிற் கூறும் பெயர்களெல்லாம் மொழிபெயர்ப்பே.

பன்னிரு மாதங்கட்கும் இப்போது வழங்கிவரும் பெயர்கள் வட சொற்களே. இவற்றுக்கும் பதிலாகப் பன்னீர் இராசிப்பெயர்களே மலையாள நாட்டிற்போல் பண்டைத் தமிழ்நாட்டிலும் வழங்கிவந்தன. பன்னீர் இராசிப் பெயர்களில் மேடம்(மேழம்), இடபம், கடகம், கன்னி, துலாம், கும்பம், மீனம் என்னும் ஏழும் தமிழ்ச்சொற்கள் அல்லது தமிழுக்கும் வடமொழிக் கும் பொதுவான சொற்கள். இவற்றுள் முதலாறுக்கும் முறையே தகர், குண்டை, அலவன், மடந்தை, தூக்கு, குடம் என்றும் பெயர்களுண்டு. ஏனைய மிதுனம், சிங்கம், விருச்சிகம், தனுசு, மகரம் என்னும் ஐந்தும் தமிழில் முறையே இரட்டை, ஆளி, தேள், வில், சுறா எனப்படும். இராசிக்குத் தமிழில் ஓரை என்று பெயர்.

பன்னிரு மாதங்களும் இராசிப் பெயர் பெறுமாறு:

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | சித்திரை | - | மேடம் | 7. | ஐப்பசி | - | துலாம் |
| 2. | வைகாசி | - | இடபம் | 8. | கார்த்திகை | - | விருச்சிகம் |
| 3. | ஆனி | - | மிதுனம் | 9. | மார்கழி | - | தனுசு |
| 4. | ஆடி | - | கடகம் | 10. | தை | - | மகரம் |
| 5. | ஆவணி | - | சிங்கம் | 11. | மாசி | - | கும்பம் |
| 6. | புரட்டாசி | - | கன்னி | 12. | பங்குனி | - | மீனம் |

அசுவனி முதல் ரேவதி யீறான இருபத்தேழு நட்சத்திரங்கட்கும் தமிழிற் பெயருண்டு. அவை முறையே புரவி, அடுப்பு, ஆரல், சகடு, மான்றலை, மூதிரை, கழை, காற்குளம், கட்செவி, கொடுநுகம், கணை, உத்தரம், கை, அறுவை, விளக்கு, முறம், பனை, துளங்கொளி, குருகு, உடைகுளம், கடைக்குளம், முக்கோல், காக்கை, செக்கு, நாழி, முரசு, தோணி என்பன. இவற்றை நிகண்டுகளிற் கண்டுகொள்க.

ஆண்டு, முயற்சி, சொல், நஞ்சு, மகிழ்ச்சி, நோய், விருப்பம், ஊதியம், இழப்பு, வருத்தம், நிலா, ஆசிரியன், கோயில், நீர், முழுக்கு, குளிப்பு, சோறு,

தேர், திருவிழா, பறவை, விலங்கு, மேலாடை, இல்லம்புகல், சாப்பாட்டுக் கடை, வலம்வரல், சிலம்பு கழித்தல் அல்லது, காப்புக் கழற்றல், நீடுவாழி, மூத்த மகன், தம்மரசு, இருமையும் ஒத்து என்னும் செந்தமிழ்ச் சொற் களுக்கும் சொற்றொடர்களுக்கும் முறையே, வருஷம், பிரயாசை, வார்த்தை, விஷம், சந்தோஷம், வியாதி, இஷ்டம், லாபம், நஷ்டம், கஷ்டம், சந்திரன், உபாத்தியாயர், ஆலயம், ஜலம், அபிஷேகம், ஸ்நானம், சாதம், ரதம், உற்சவம், பக்ஷி, மிருகம், அங்கவஸ்திரம், கிருகப்பிரவேசம், போஜனசாலை, பிரதக்ஷிணம் (செய்தல்), கங்கண விஸர்ஜனம், சிரஞ்சீவி, ஜேஷ்ட குமாரன், சுயராஜ்யம், உபயானு சம்மதமாய் என்னும் வடமொழிச் சொற்களும் சொற்றொடர்களும் வழங்கிவருகின்றன. இங்ஙனம் தமிழில் வழங்கும் வடசொற்களும் சொற்றொடர்களும் பன்னூற்றுக் கணக்கின. இவை போன்றவையே பன்னிரு மாதங்கட்கும் இருபத்தேழு நட்சத்திரங்கட்கும் இதுபோது வழங்கும் வடசொற்களும் என்க.

நட்சத்திரம் தமிழில் நாள் அல்லது நாண்மீன் எனப்படும். பொதுவானதாயின் மீன் என்றும் உடு என்றும் வெள்ளி என்றும் கூறப்படும். ஒரு பகலும் ஓர் இரவுஞ் சேர்ந்து ஒரு கிழமை. ஒரு கிழமைக்குரிய நட்சத்திரம் நாள். "நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை" என்றார் ஔவையார். ஆயினும், நாள் என்பது கிழமை யென்னும் பொருளிலேயே இருவகை வழக்கிலும் பெரும்பாலும் வழங்கிவரும். கிரகம் கோள் அல்லது கோண்மீன் எனப்படும்.

அறுபதாண்டிற் கொருமுறையாக நிகழ்ந்த சில பஞ்சங்கள்பற்றி, அல்லது மக்களின் சராசரி வாழ்நாள்பற்றி, அறுபதாண்டு என்னும் அளவு பண்டைத் தமிழ்நாட்டில் சில முதியோர்க்குள் பெயரளவாய் மட்டும் வழங்கி வந்ததாகத் தெரிகின்றது. அது நடைமுறையிற் கணிக்கப்படவில்லை. சாலிவாகனனாலேயே அறுபதாண்டிற்கும் பெயரிடப்பட்டதாகத் தெரி கின்றது. அவை யாவும் வடசொற்கள். அவற்றுக்குத் தென்சொல் இல்லை. அறுபதாண்டுச் சக்கரம் சுற்றிச் சுற்றி வருதலின், அது ஆங்கில ஆண்டு போலச் சரித்திரத்திற்கும் நெடுங்காலக் குறிப்பிற்கும் பயன்படுவதன்று. பண்டைத் தமிழர் அவ்வவ் வரசரின் ஆட்சிக் காலத்தைக்கொண்டே ஓர் ஆண்டையோ நெடுங்காலத்தையோ குறித்தும் கணக்கிட்டும் வந்ததாகக் கல்வெட்டினின்றும் தெரியவருகின்றது. (எ-டு: கோப்பரகேசரி மாற வர்மனுக்கு 24ஆம் ஆண்டு). ஒரு நெடுங்காலத்தைக் கணக்கிடுவதற்குப் பல அரசர்களின் ஆட்சிக் காலத்தைக் கூட்டவேண்டியதிருக்கும். ஏனெனில் அடிக்கடி அரசர் மாறுவது வழக்கம். (சரித்திரகாலத்தில்) ஓர் அரசன் எவ்வளவு நீடித்தாளினும் நூறாண்டிற்கு மேற்படுவது மிகவும் அருமை. இக் குறையை நீக்குதற்கு ஒரு பெரியார் காலத்தினின்று, அல்லது ஒரு நகரத் தோற்றத்தினின்று, அல்லது ஒரு பெரு நிகழ்ச்சியினின்று நெடுங்காலத்தைக் கணக்கிட்டு வந்திருக்கின்றனர். இவற்றுக்கு முறையே மெய்கண்டான்

யாண்டும், கொல்லம் ஆண்டும், கலியாண்டும் உதாரணமாகும். ஆங்கில முகம்மதிய ஆண்டுகளும் பெரியார் காலத்தினின்றும் கணக்கிடப் படுவனவே.

அறுபதாண்டிற்கு மேற்பட்ட ஊழி என்னும் அளவு, பண்டைத் தமிழ் நாட்டில் நிகழ்ந்த சில கடல்கோள்கள்பற்றி, ஒரு வரையறையின்றி ஈரழிவிற் கிடைப்பட்ட அல்லது ஒரு விரி வளர்ச்சியை (Evolution) குறிக்கின்ற ஒரு நெடுங்காலத்தைக் குறிக்க அல்லது கணிக்க வழங்கிவந்தது. இது "இவ் வாசிரியர்(தொல்காப்பியர்) ஆதியூழியின் அந்தத்தே இந் நூல் (தொல் காப்பியம்) செய்தலின்" என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பியக் கற்பியல் 4ஆம் சூத்திர வுரையிற் கூறுதலானும், ஐம்பூதங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஊழியில் தோன்றிற்றென்று பரிபாடல் (2 : 3-19) கூறுதலானும் அறியப்படும். ஆகையால் இதுபோது பஞ்சாங்கத்திற் குறிக்கப்பட்டுள்ள யுக அளவு தமிழர் ஊழிக்குப் பொருந்துவதன்று; தமிழ் நாட்டுக் கடல்கோள் களின் இடைக்காலங்கள் அவ்வக் காலத்திற் கணிக்கப்பட்டிருக்கலாம். ஆனால், அதைப்பற்றிய ஒரு குறிப்பும் நமக்குக் கிடைத்திலது. இற்றைக் கலியூழி தலைச்சங்கத் திறுதியில் நிகழ்ந்த கடல் கோளினின்றும் கணிக்கப்பட்டதாயின், கலியுகம் தொடங்கி 5041 ஆண்டுகள் ஆயின என்னும் கணக்குப் பொருந்துவதாகும்.

மேற்கூறிய காலப் பெயர்களுள் 'காலம்' என்னுஞ் சொல்லையே சிறப்பாகக் கூற எழுந்த திக் கட்டுரையாதலின், அதன் மூலத்தையும் அது எம்மொழியைச் சேர்ந்ததென்பதையும் இனி ஆராய்வோம்.

காலம் என்னும் சொல், கால் என்னும் மூலத்தினின்றும் பிறந்தது. இது கால் எனுஞ் சொல் தனித்தும், ஒருகால், வந்தக்கால் எனத் தொடர் மொழிகளிலும் வந்து காலப்பொருள் தருவதால் அறியப்படும். தூண் என்பது 'அம்' ஈறு பெற்றுத் தூணம் என்று ஆனாற்போலக் கால் என்பதும் 'அம்' ஈறு பெற்றுக் காலம் என்றாயது. 'ஐ' ஈறுபெறின் காலை என்றாகும்; பார் (கம்பி) என்பது பாரை என்றானாற்போல.

கால், காலை, காலம் என்னும் மூன்று சொற்களும் தமிழில் இருவகை வழக்கிலும் மிகப் பெருவழக்காக வழங்கிவருகின்றன.

கால் என்பது 'ஒருகால்' 'முக்காலும்' என்னும் தொடர்களிலும், 'வந்தக்கால்' 'போனக்கால்' என எதிர்கால வினையெச்சங்களிலும் உலக வழக்கில் வழங்குகின்றது. இவ் வினையெச்சங்களை 'வந்தாக்கா' 'போனாக்கா' என்று சிதைத்து வழங்குவர் தமிழ்நாட்டின் வடமேற்பகுதியி லுள்ளவர்.

**"பின்முன் கால்கடை வழிஇடத் தென்னும்**
**அன்ன மரபிற் காலங் கண்ணிய**
**என்ன கிளவியும் அவற்றியல் பினவே"** (தொல். சொல். 714)

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தில், 'கால்' என்பது ஒரு வினையெச்ச விகுதியாகக் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியம் எவ்விதத்தும் இற்றைக்கு 3000 ஆண்டுகட்கு முற்பட்டதாகும்.

காலை என்பது ஒரு நாளின் சிறந்த காலை அல்லது வேளையாகிய விடியற்காலத்தை உணர்த்தும். காலை, விடிகாலை என்பன உலக வழக்கு. "காலையும் மாலையும் கைகூப்பிக் கால்தொழுதால்" எனச் செய்யுள் வழக்கிலும் அச் சொல் அப் பொருளில் வந்தது. காலை என்னும் சொல் முற்பகலையும், முற்பகலின் முற்பகுதியையும் குறிப்பதுமுண்டு.

**"இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை"**

**"இசையுட னருகும் தெரியுங் காலை"**

எனத் தொல்காப்பியத்தில், காலை என்னுஞ் சொல் பொழுது, வேளை என்னுஞ் சொற்கள்போல ஒரு குறித்த நேரத்தை உணர்த்திற்று.

காலம் என்னும் சொல் ஒரு குறித்த காலத்தையும் விடியற் காலத்தையும் பருவ காலத்தையும் ஒரு காலப் பகுதியையும் பொதுவான காலத்தையும் உணர்த்தும். 'விடியற்காலம்', 'சாயங்காலம்' 'இராக்காலம்', 'பேறுகாலம்', 'துன்பகாலம்', 'காலத்தினாற் செய்த நன்றி'(குறள். 102), 'ஆயியல் நிலையுங் காலத் தானும்'(தொல்காப்பியம்) என்னுந் தொடர் களில் ஒரு குறித்த காலமும் 'காலத்தாலே யெழுந்து' (காத்தாலை யெழுந்து என்பது கொச்சை வழக்கு.) என்னுந் தொடரில் விடியற்காலமும்; வேனிற் காலம்(கோடைகாலம்), மழைகாலம்(கார்காலம்) முதலிய தொடர்களில் பருவகாலமும்; முற்காலம், தற்காலம், கற்காலம், 'கீழோர்க் காகிய காலம்'(தொல்.) முதலிய தொடர்களில் ஒரு காலப்பகுதியும் 'பொருள்இடம் காலம் சினைகுணம் தொழில்' என்னுந் தொடரில் பொதுவான காலமும் குறிக்கப்பட்டன.

ஆங்கிலத்தில் `Tense' என்று கூறும் வினையிலக்கணத்தைக் குறிக்கத் தமிழில் காலம் என்னும் சொல்லே கொள்ளப்பட்டுள்ளது.

**"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"** (தொல். சொல். 683)

**"காலந் தாமே மூன்றெென மொழிப"** (தொல். சொல். 684)

**"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா**
**அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்"** (தொல். சொல். 685)

வினைச்சொல் காலங்காட்டுவதால் காலக்கிளவி என்றும் கூறப்படும். கிளவி-சொல்.

**"மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கைக்**
**காலக் கிளவியொடு முடியும் என்ப"** (தொல். சொல். வினை. 10)

தமிழ்ச் செய்யுளுறுப்புகள் இருபத்துநான்கனுள் காலமும் ஒன்றாகத் தொல்காப்பியத்துட் குறிக்கப்பட்டுள்ளது.

**"கேட்போர் களனே காலவகை எனாஅ..."** (தொல். பொருள். செய். 1)

அஃறிணை முடிபுபெறும் உயர்திணைச் சொற்களுள் காலம் என்பதும் ஒன்றாகக் கூறுவர் தொல்காப்பியர்.

**"காலம் உலகம் உயிரே உடம்பே**

**.....................................**

**பால்பிரிந் திசையா உயர்திணை மேன"** (தொல். சொல். கிளவி. 58)

காலம் என்பது வடசொல்லாயின், தமிழிலக்கணம் கூறப்புகுந்த தொல்காப்பியத்தில் அதனைக் கூறார் ஆசிரியர்.

கால் என்னுஞ் சொற்குத் தமிழிற் பல பொருள்களிருப்பினும், அவற்றுள் நான்கே தலைமையானவும், பிறவற்றிற்கு அடிப்படையானவு மாகும். அவை கால்(leg), கால்வாய், காற்று (கால் + து), காலம் என்பன வாகும், இந் நான்கனுள்ளும், கூர்ந்து நோக்கின், முதலதே ஏனை மூன்றிற்கும் மூலமாகும்.

ஒரு சொற்குப் பல பொருளிருப்பின் அவை யாவும் ஒரே தொடர் புடையனவா யிருக்கும். தொடர்பின்றேல் ஒரே வடிவுள்ள வெவ்வேறு சொற்குரியனவா யிருக்கும். இங்குக் கால் என்னுஞ் சொற்குக் கூறிய நான்கு பொருளும் ஒரே தொடர்புடையனவே, எங்ஙனமெனின், 'நீண்டது' என்னும் கருத்தையே அவை நான்கும் தழுவியுள்ளன. கால் என்னும் உறுப்பு (ஒடுங்கி) நீண்டிருப்பது; கால்வாய் நீண்டு ஓடுவது; காற்று ஓரிடத்து நில்லாது திசை நெடுக நீண்டு வீசுவது; காலம் ஒரு முடிவின்றி நீண்டு செல்வது. இந் நீட்சிக் கருத்துக் கால் என்னும் உறுப்பினின்றே தோன்றிய தாகும்.

கால் என்னும் உறுப்பின் பெயர் கால் என்னும் வினையினின்றும் தோன்றியதாகும். காலுதல் சிந்துதல், அல்லது பொழிதல். மேகங்கள் மழை பொழிவது காலுதல் எனப்படும். தூரத்தில் மழை பொழியும்போது, தூண்கள் போலப் பல படலங்களாகப் பிரிந்து வீழ்வதை என்றும் பார்க்கலாம். அவ் வீழ்ச்சிகள் மழைக்கால்கள் எனப்படும். அக் கால்கள் மேகத்திற்கு அல்லது வானத்திற்குத் தாங்கல்போலக் கீழே நீண்டு நிலத்தில் விழுவதுபோல், உறுப்பாகிய காலும் ஓர் உடம்பிற்குத் தாங்கலாய்க் கீழே நீண்டு நிலத்திற் பதிவதால், உவமையாகு பெயராய்க் காலெனப்பட்டது. பின்னர்த் தாங்குவது, அடியில் இருப்பது என்னும் பொருள்பற்றிக் கால் என்பது பல பொருள் கட்குப் பெயராயிற்று. முழங்கால் உடம்பிற் காற்பகுதியாதலின் காலென்பது நாலிலொரு பங்கையும் குறிப்பதாயிற்று. இதற்கு மறுதலை யாகக் கூறுவர் இலக்கணிகள்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் (Lexicon) கால் என்னும் சொற்கு 44 பொருள்கள் கூறப்பட்டுள்ளன. அவையாவன:-

1. காற்பங்கு
2. 'வ' என்னும் இலக்கம்
3. பாதம்
4. பூவின் தாள்
5. அடிப்பாகம்
6. 'ா' என்ற எழுத்து
7. உருள்
8. வண்டி
9. கோல்
10. குறுந்தறி
11. நெசவுத்தறியின் மிதி
12. கைப்பிடி
13. தூண்
14. பற்றுக்கோடு
15. முளை
16. மரக்கன்று
17. மகன்
18. வமிசம்
19. இனமுறை
20. பிறப்பிடம்
21. வாய்க்கால்
22. பிரிவு
23. வழி
24. நடை
25. இடம்
26. வனம்
27. வின்முனை
28. மரக்கால்
29. அளவு
30. பின்னுதற்கு வகுத்த மயிர்ப்பகுதி
31. கிரணம்
32. மழைக்கால்

கால் = 1. காற்று
2. வாதநோய்
3. பஞ்சபூதம்

கால் = 1 பொழுது
2. செவ்வி
3. தடவை
4. காலன்
5. இயமன்
6. கருநிறம்

கால் = 1. 7ஆம் வேற்றுமை உருபு
2. வினையெச்ச விகுதி
3. ஓர் உபசர்க்கம்.

இந் நாற்பத்து நான்கு பொருள்களும், கால்போலக் கீழிருப்பது, தாங்குவது, நீண்டிருப்பது, பிரிந்திருப்பது, காற்பங்காயிருப்பது, நிலத்தில் ஊன்றுவது முதலிய கருத்துப்பற்றியனவாயே இருத்தல் காண்க.

கால் உடம்பில் ஓர் இடமாயிருத்தலால், அதன் பெயர் இடத்தையும் குறிப்பதாயிற்று. பந்தர்க்காலுக்குப் பெரும்பாலும் மூங்கிலை நடுவதாலும், மூங்கில் வளர்வது காட்டிலாதலாலும், மூங்கிற்குழாயை அறுத்து முகத்தற் கருவியாகக் கொள்வராதலாலும், கால் என்னும் பெயர் மூங்கில், வனம், மரக்கால் என்னும் பொருள்களையும் தரும்.

பொழுது முதலிய மூன்று பொருள்களும் காலத்தையும், காலன் முதலிய மூன்று பெயர்களும் மழைக்காலையும் மூலமாகக் கொண்டன வாகும்.

ஆங்கிலத்தில் 'column' என்னும் சொல் தூணையும் பிரிவையும் சட்டத்தையும் குறிக்கும். சட்டமும் கால், தூண், கால்வாய் இவற்றுள் ஒன்றைப் போன்றே இருக்கும். கால் என்னும் சொல் காலத்தைக் குறிக்கும்போது தமிழிலும் 'அம்' ஈறு பெறும். தூண் என்பது தூணம் என்றும் வழங்கும். ஆகையால் 'கால்' 'column' என்னுஞ் சொற்கட்கு ஓர் இயைபுண்டோ என்று ஐயுறக்கிடக்கின்றது. ஆங்கில அகராதிகள் 'column' என்னும் சொற்கு celsus(high), collis(a hill) முதலிய மூலங்களைக் காட்டு கின்றன. அவை அவ்வளவு பொருத்தமுடையனவல்ல. மொழி நூற்கலை இன்னும் சரியாய் வளர்க்கப்படாமையின், மேனாட்டார் தமிழின் அருமையை அறிந்திலர் என்றே கூறல்வேண்டும்.

இங்ஙனமிருப்பவும், சிலர், தமிழுக்கு நீண்ட காலத்தைக் குறிக்கச் சொல்லில்லை யென்றும், புதன், சனி, ருது என்னும் வடசொற்குத் தென் சொல்லில்லை யென்றும், 27 நட்சத்திரங்களுக்கும், 12 மாதங்கட்கும் தமிழிற் பெயரில்லை யென்றும், வடமொழித் துணையின்றித் தமிழ் தனித்தியங்கா தென்றும் தமிழர்க்குத் தனி நாகரிகமில்லை யென்றும், பலவாறு பிதற்றாநிற்பர். இனி, சிலர் முழுப்பூசனியைச் சோற்றில் மறைப்பதுபோல், தமிழே வடமொழியினின்று வந்ததுதான் என்று வரம்பிறந்து மனப்பால் குடிப்பர். தமிழ் வடமொழிக்கு மிக முந்திய தென்பதும், வடமொழித் தோற்றத்திற்கு அல்லது ஆரியர் வருகைக்கு முன்னரே, அக்காலத்து மக்கட்குத் தோன்றிய கருத்துகளை யெல்லாம் தெரிவிக்கும் சொற்களைத் தன்பாற் கொண்டுள்ள தென்பதும் அவர் அறியார் போலும்!

ஆரியர் இந் நாட்டிற்கு வருமுன்னரே தமிழர் பல கலைகளிலும் தேர்ந்திருந்ததினாலும், தமிழர்க்கு வானநூலும் (Astronomy) தெரிந் திருந்தமை பண்டை நூல்களால் அறியப்படுவதாலும், நொடி முதல் ஊழியீறான சிறிய பெரிய கால அளவுகட்கெல்லாம் தமிழிற் சொல்லுண்மை யாலும், சொல்வளம் தமிழின் தனிப் பண்பாதலாலும், கால் என்பது ஒரு வினையெச்ச விகுதியாகவும், காலம் என்பது வினையின் காலத்தைக் குறிக்குஞ் சொல்லாகவும் தொன்றுதொட்டுத் தமிழிலக்கணத்தில் வழங்கிவருவதாலும், கால், காலை, காலம் என்னும் மூன்று வடிவங்களும் குறுங்காலத்தையும் நெடுங்காலத்தையும் குறிக்கத் தமிழில் இருவகை வழக்கிலும் பெருவழக்காகத் தொன்றுதொட்டே வழங்கிவருவதாலும், காலம் என்னும் சொல்லின் மூலப்பொருள் தமிழிலேயே தோன்றுவதாலும், மேனாட்டாரிய மொழிகளில் காலம் என்னும் சொல் காலப்பொருளில் வழங்காமையானும், நச்சினார்க்கினியர் கூறியபடி காலம் என்னுஞ் சொல் செந்தமிழ்ச் சொல்லே யென்று எட்டுணையும் ஐயமறத் தெளியப்படும்.

தமிழிற் சில கருத்துகளை யுணர்த்தற்கு இதுபோது சொல்லில்லை யென்பது உண்மையே. ஆயினும் அதற்குத் தகுந்த காரணங்கள் உள.

1. கிறித்துவுக்கு முற்பட்ட ஆயிரக்கணக்கான தமிழ்நூல்களுள், தொல்காப்பியம் தவிர மற்றவையெல்லாம் அழிந்து போயினமையின், அவற்றிலுள்ள அருஞ்சொற்களும் மறைந்துபோயின.

2. பண்டைத் தமிழ்நாட்டின் பெரும்பகுதியைக் கடல் கொண்டமை யின், அப் பகுதியில் வழங்கின எண்ணிறந்த திசைச்சொற்கள் அறவே மறைந்தன.

3. தமிழர் தம் அறியாமைபற்றி அருமையான தென்சொற்கட்குப் பதிலாக, வடசொற்களை வழங்கினதினாலும்,பண்டைக் காலத்தில் விரிவான தமிழகராதிகள் எழுதப்படாமையாலும், வழக்கற்ற தமிழ்ச்சொற்களெல்லாம் மறைந்தொழிந்தன.

4. தமிழ், மனித சமூகத்தின் இளமையில் தோன்றிய மிகப் பழைமை யான மொழியாதலின், இக்காலத்திற்குரிய சில கருத்துகள் அக்காலத் தமிழர்க்குத் தோன்றவில்லை. அதனால் அவற்றுக்குச் சொல்லுந் தோன்றவில்லை.

5. சென்ற 2000 ஆண்டுகளாகத் தமிழ் ஆரியவயப்பட்டுள்ளமை யின், புதுச்சொற்கள் புனைந்து தனித்தமிழ் வளர்க்கப்படவில்லை.

ஆகையால், தமிழைப் பிற புன்மொழிகள்போற் கருதி இழித்துக் கூறுவது தகாது.

ஒரு பொருளை ஆராயும்போது, விருப்பு வெறுப்பின்றி நடுவு நிலையாய் ஆராய்தல் வேண்டும்.

> **"காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்**
> **ஆய்தல் அறிவுடையார் கண்ணதே - காய்வதன்கண்**
> **உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்**
> **குற்றமுந் தோன்றாக் கெடும்."** (அறநெறி: 42)

மேலும், வடசொல் தென்சொற்களைப் பிரித்துணர்தற்கு மொழிநூல், குலநூல்(Ethnology), சரித்திர நூல் முதலிய நூல்களின் துணை இன்றியமை யாது வேண்டப்படும். ஆகையால், அவற்றின் துணைகொண்டு உண்மை யறிந்து கடைப்பிடிக்க. இன்றேற் குஞ்சரந் தடவிய குருடர் கூற்றாய் முடியும் என்க.

> **"பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்**
> **திறன்தெரிந்து கூறப் படும்."** (குறள். 186)

**- "செந்தமிழ்ச் செல்வி" நளி 1939**

## 8

# 'மாணவன்' தென்சொல்லா? வடசொல்லா?

தமிழ் வடமொழிக்கு முந்தியமையாலும், ஆரியம் நாவலந் தேயத்திற் புகுமுன்னரே தமிழ் முழுவளர்ச்சியடைந்திருந்தமையாலும், இந்திய நாகரிகத்தின் சாரமான பகுதி தமிழ் நாகரிகமே யாதலாலும், தமிழுக் கின்றியமையாத பழஞ் சொற்களெல்லாம் தனித்தமிழே என்பது முழு வுறுதியான உண்மையாகும். ஆயினும், தமிழனின் தாழ்வுணர்ச்சியாலும், ஆராய்ச்சியின்மையாலும், ஆரிய ஏமாற்றத்தாலும் இன்னும் தமிழின் பெருமை தமிழராலும் அறியப்படவில்லை.

தென்சொல்லா வடசொல்லா என்று ஐயுறப்படும் சொற்கட்கு, கீழ்க்காணும் நிலைமைகளிற் பல வொத்திருப்பின் தென்சொல்லென்றும், இராவிடின் வடசொல்லென்றும் துணியலாம்.

1. **வேரும் வேர்ப்பொருளும் தமிழிலிருத்தல்.**
2. **கிளைச்சொற்களும் வழிச்சொற்களும், தமிழில் மட்டு மாயினும் தமிழிலும் திரவிட மொழிகளிலுமாயினும், சிறு பெருங் குலமாகவோ குடும்பமாகவோ இருத்தல்.**
3. **சங்கநூல்களில் ஆட்சிபெற்றிருத்தல், அல்லது தொன்று தொட்ட உலகவழக்கில் வழங்கிவரல்.**
4. **தமிழெழுத்துகளால் (தமிழொலிகளால்) அமைந்திருத்தல்.**
5. **நாட்டுப்புறத்துக் கல்லாமக்களால் பெரும்பான்மையாகவோ சிறப்பாகவோ வழங்கப்பெறல்.**
6. **(ஐயுறப்படும் சொல்லால்) குறிக்கப்பெறும் பொருள் அல்லது கருத்துத் தமிழ்நாட்டில் அல்லது தமிழர் உள்ளத் தில் தொன்றுதொட்டே (அஃதாவது ஆரியர் வருமுன் பிருந்தே) இருந்துவரல்.**
7. **சொல்வடிவு அல்லது சொல்லமைதி தமிழுக்கேற்றல்.**

இனி, மாணவன் என்னும் சொல்லுக்குச் சிறுவன் என்பதே வேர்ப் பொருளாம். மக்கள் ஆசிரியனிடத்துக் கற்கும் பருவம் சிறுபருவமாதலால், சிறுவனைக் குறிக்கும் சொல்லே கற்போனையும் குறித்தது. இன்றும், பிள்ளைகள் என்றும், பள்ளிப் பிள்ளைகள் என்றும் மாணவர் அழைக்கப் பெறுதல் காண்க.

ஆங்கிலத்திலும், சிறுவனைக் குறிக்கும் சில சொற்கள் மாணவனை யுங் குறிக்கின்றன.

***Pupil***.n. (L. *pupillus, pupilla,* dim.s. of *pupas*, a boy; *pupa,* a girl.) 1. A young person of either sex under the care of an instructor or tutor; a scholar; a disciple.

-The Imperial Dictionary, p. 573.

***Pedagogue***. n. (Gk. *paidagogus-pais, paidos,* a child and *ago,* to lead') A teacher of children; one whose occupation is to instruct young children; a school master now used generally by way of contempt

Ibid. p. 396.

மாணவன் என்னும் சொல்லின் அடி (Stem) **மண்** என்பதாகும். இவ் வடியின் வேர் (Root) **முள்** என்பது. இவ் வேரின் இயல்புவடிவம் **முல்**.

**முல்** என்பது, சிறுமையை அல்லது இளமையை உணர்த்தும் வேர்ச் சொற்களுள் ஒன்று.

முல்-(முன்)-முனி = (கன்று), யானைக்கன்று
"முனியுடைக் கவளம் போல" (நற்.360).

முல் - முள் - முளை =1. இளமை
"முளையமை திங்கள்" (கம்பரா. கும்பகர்ணன் வரைப் படலம், 16.)
2. மரக்கன்று. "அதன்றாள் வழியே முளையோங்குபு" (சீவக. 223).
3. சிறுகுழந்தை.

முளை - முளையான் = சிறுகுழந்தை.

முள் - முளி - முறி = தளிர். "முறிமேனி" (குறள். 1113)

முறிதல் = துளிர்த்தல். "முறிந்த கோல" (சீவக. 2358)

முறி - மறி = சில விலங்கின் குட்டி

**"யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்**
**ஓடும் புல்வாய் உளப்பட மறியே."** (தொல். 1511)

முள் - முட்டு = சிறு பொருள். முட்டுக்காய் = சிறுகாய்.

முட்டுக் குரும்பை = சிறு குரும்பை. முட்டு - முட்டை = சிறு கரண்டி.

முட்டை = மொட்டை. மொட்டைப் பயல் = சிறு பயல்.

முள் - முடு - முடுக்கு = சிறு சந்து.

மொழிவளர்ச்சியில் சொற்கள் அடையும் பல்வகைத் திரிபுகளுள், இனத்திரிபு என்பது ஒன்று. அதில் உயிரினத் திரிபு என்பது ஒரு பிரிவு.

ஒருயிர் மற்றோ ருயிராகத்திரிவது உயிரினத் திரிபாம். எந்த வுயிரும் வேறெந்த உயிராகவும் திரியலாம். ஆயினும், பெரும்பான்மையாக இயல்கின்ற சில முறைப்பட்ட உயிரினத் திரிபுகள் உள்ளன. அவற்றுள் உ-அ என்பது ஒன்று.

எ-டு: குடும்பு - கடும்பு துணை - தனை
குடம் - கடம் முடங்கு - மடங்கு
குட்டை - கட்டை முறி - மறி (=வளை)
துளிர் - தளிர்

**முள் - மள்**

மள்-மள்ளன் = இளைஞன்.

"பொருவிறல் மள்ள" (திருமுருகு. 262)

**மள் - மழ**

"ரகார ழகாரம் குற்றொற் றாகா" (தொல், 49)

ஆதலால், மழ் என்னும் வடிவம் தோன்றாது,

மழ = 1. இளமை.

"மழவும் குழவும் இளமைப் பொருள" (தொல், 796)

2. குழந்தை.

"அழுமழப் போலும்" (திருக்கோ. 147)

மழ - மழவு = இளமை, குழந்தை.

மழபுலவர் = பள்ளியிற் படிக்கும் சிறார்.

"மையாட லாடன் மழபுலவர் மாறெழுந்து" (பரிபா. 11 : 88)

மழமழப்பு = மென்மை.

மழலை= இளமை, மென்மொழி, குழந்தைமொழி, புதுமை

மழலைத்தேன் = புதுத்தேன்.

மழவன் = 1. இளைஞன் (பிங்.).

"மழவர்த மனையன மணவொலி" (கம்பரா. நாட்டுப் படலம், 50)

2. வீரன் "மழவர் பெரும" (புறம். 90)

மழறுதல் = மென்மையாதல்.

"மழறுதேன் மொழியார்கள்" (திவ். திருவாய்மொழி, 6 : 2 : 5.)

**மழ-மாழை= இளமை.**

"மாழை மடமான் பிணையியல்" (கலித். 131)

**மழ-(மழை)-வழை=புதுமை.**

"பாகரிறை வழைமது நுகர்பு" (பரிபா, 11 : 66.)

ம - வ, மெய்யினத் திரிபு. ஒ.நோ: மிஞ்சு-விஞ்சு.

மழ - மழு - மழுக்கை - வழுக்கை. வழுக்கைப்பயல் = சிறு பயல்.

வழுக்கை - வழுக்கட்டை = சிறு பிள்ளை.

வழை - வழைச்சு = புதுமை.

"சாடியின் வழைச்சற விளைந்த" (பெரும்பா. 280)

புதுமை சிறுமை அழகு வீரம் முதலியன இளமையொடு தொடர்புடைய கருத்துகள். அதனால், இளமையைக் குறிக்கும் சொற்கள் இப்பொருள்களை உணர்த்தின.

மழலை - மதலை = குழந்தை மொழி, குழந்தை, மகன்.

மதலைக்கிளி = இளங்கிளி.

மழ - (மத) - மட - மடம் = இளமை, மென்மை, அழகு, அறியாமை.

மடமை = 1. மென்மை. "தெளிநடை மடப்பிணை" (புறம். 23)

2. அறியாமை

அறிவு பெரும்பாலும் ஆண்டுப் பெருக்கத்தால் அடையப் பெறுவதால், இளமையில் அறியாமை மிகுந்திருப்பது இயல்பு. இதனால், இளமைச்சொல் அறியாமையை உணர்த்திற்று.

**மள் - (மண்)** - மணி = சிறியது.

மணிக்கயிறு, மணிக்காடை, மணிக்குடல், மணிக்கை, மணிக்கோரை, மணிச்சம்பா, மணிச்சுறா, மணித்தக்காளி, மணித்துத்தி, மணிப்பயல், மணிப்புன்கு, மணிப்புறா, மணிப்பொச்சம், மணியீரல் முதலிய வழக்குகளை நோக்குக.

**மண் - மாண்** -1, சிறுவன், இளைஞன், மணவாதான் (பிரமசாரி).

"மாணாகி வைய மளந்ததுவும்" (திவ். பெரியதிருமொழி; 8 : 10 : 8,)

2. குறள், குறளன்.

"குறுமா ணுருவன் தற்குறியாக் கொண்டாடும்" (தேவாரம் 164 : 5)

மாண் - மாணி = 1. மணவாதான், மாணவன்

"கருமாணி யாயிரந்த கள்வனே" (திவ்.இயற்பா. 2:61)

2. குறள் வடிவம்

(திவ், பெரியாழ்வார் திருமொழி, 1 : 4 : 1 ஸ்வாபதேச வியாக்கியானம்).

3. சிற்றுறுப்பு.

மாணி என்னும் சொல் கன்னடத்திலு முளது. மாண், மாணி என்னும் சொற்கள் வடமொழியி லில்லை.

**மாண்** - மாணவன் = சிறுவன், கற்போன்.

மாணவன் - மாணவகன் = இளைஞன், கற்போன், மணவாதான், சிறுவன், அறிவீனன்.

யாழ்ப்பாண அகராதியில், மாணவகன் என்னும் சொல்லுக்கு 8 முதல் 16 ஆண்டுக்குட்பட்ட சிறுவன் என்னும் பொருள் குறிக்கப்பட்டுளது.

பொதுவாகக் கல்விகற்கும் பருவம் மணத்திற்கு முந்தியதாதலாலும், மணப்பருவம் ஆடவனுக்குப் பதினாறாண்டென்று அகப்பொரு ளிலக்கணங் கூறுவதாலும், 8 ஆண்டு முதல் 16 ஆண்டுவரைப்பட்ட இளைஞனை மாணவகன் என்று அழைப்பது தமிழ்மரபிற்கே மிகப் பொருத்தமாம். இன்றும், வசதியுள்ள ஆடவர்க்கெல்லாம் பதினாறாம் ஆண்டிலேயே மணம் நிகழ்கின்றது. ஆரியமணம் எட்டனுள் ஒன்றான பிரமம் என்பது, "நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமுன் அணிகலனணிந்து தானமாகக் கொடுப்பது" (தொல். பொருள். 92, உரை) தமிழன் 48 ஆண்டுவரை மணவாதிருத்தல் மிக அரிதாகும். வெப்பநாட்டார் முந்தியும் தட்பநாட்டார் பிந்தியும் மணத்தல் இயற்கை விளைவாகும். இன்றும், மேனாட்டார் பெரும்பாலும் நாற்பதியாண்டு நிரம்பிய பின்னரே மணக்கின்றனர். இந்திய ஆரியரின் முன்னோர் ஆதியில் வடக்கும் வடமேற்குமுள்ள குளிர்நாடுகளிற் குடியிருந்ததினால், அவர்க்கு நாற்பதியாண்டு மணவாதிருக்க முடிந்தது. தமிழர்க்கோ இந் நிலை அன்றுமில்லை; இன்றுமில்லை ஆதலால், இளங்கற்றுச்சொல்லியை மாணவகன் என்பது தமிழ்வழக்கேயாகும்.

மாணவகம் = கல்வி (சிந்தாமணி நிகண்டு)

மாணவன் - (மாணகன்) - (மாணக்கன்) - மாணாக்கன்.

மாணவி மாணாக்கி என்பன பெண்பால் வடிவங்கள்.

மாணவன் மாணவகன் என்னும் ஈர் ஆண் பெயரும் வடமொழியில், முறையே, மாணவ மாணவக என ஈறுகெட்டு வழங்குகின்றன. மாணவிகா என்பது வடமொழிப் பெண்பாற் பெயர். மாணாக்கன் என்னும் ஆண்பால் வடிவமும் மாணவி மாணாக்கி என்னும் பெண்பால் வடிவங்களும் மாணவன் என்பதற்கு அடிவழியான கொடிவழிச் சொற்களும் வடமொழியி லில்லை. னகரவீற்றுத் தமிழ்ப் பெயர்கள் வடமொழியிற் பெரும்பாலும் ஈறுகெட்டு வழங்குவது இயல்பு.

தொல்காப்பியத்திற்கு ஆத்திரேயன் பேராசிரியன் வகுத்த பொதுப் பாயிரத்தில்,

**"இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்**
**பல்பெருஞ் சிறப்பின் நல்லா சிரியர்**
**...................................................**
**உடையோ ராகி நடையறிந் தொழுகுநர்**
**நன்மா ணாக்கர் என்ப....................."**

எனக் கூறப்பட்டுள்ளது. ஆசிரியன், மாணாக்கன் என்னும் இரண்டும் தனித்தமிழ்ச் சொற்களாகும்.

மாணவன், மாணவகன், மாணாக்கன் என்னும் மூவடிவங்களும், தமிழெழுத்துகளாலேயே அமைந்தவை.

ஆரியர் வருமுன்பே தமிழர் கல்வியில் துறைபோயிருந்தனர். ஆசிரிய மாணவ மரபில் கல்வி வழங்கிவந்தது.

**"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்."** (குறள். 395)

**"செவிக்குண வில்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கு மீயப் படும்."** (குறள். 412)

என்பவை பிற்காலத்தவையாயினும், முற்கால நிலைமையையும் உணர்த்துதல் காண்க. இனி,

**"ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை**
**மெய்ப்படக் கிளந்த வகைய தாகி"** (தொல். 1598)

**"சூத்திரத் துட்பொருள் அன்றியும் யாப்புற**
**இன்றி யமையா தியைபவை யெல்லாம்**
**ஒன்ற உரைப்பது உரையெனப் படுமே."** (தொல். 1603)

முதலிய பகுதிகளும், முற்காட்டிய பொதுப்பாயிரப் பகுதியும், ஆசிரிய வாயிற் கல்வியை உணர்த்துதல் காண்க. ஆசிரிய மாணவர் ஆரியர்க்கு முற்பட்ட பண்டைக்காலத்தே தமிழ்நாட்டிலிருந்ததினால் அவரைக் குறித்தற்குச் சொற்களும் பழந்தமிழில் இருந்திருத்தல் வேண்டும். கற்போன், கொள்வோன், கோளாளன், கேட்போன் முதலிய மாணவன் பெயர்களும்; கற்பிப்போன், நுவல்வோன், உரைப்போன் முதலிய ஆசிரியன் பெயர் களும்; சூத்திரங்களிலும் செய்யுள்களிலும் மோனையெதுகைக் கேற்றவாறு அமைக்கப்பெறும் பொதுச் சொற்களேயன்றி, மரபு நெறிப்பட்ட சிறப்புச் சொற்களல்ல.

கற்றுச்சொல்லி என்பது இடைக்காலத்தெழுந்த தொடர்மொழிப் பெயர். மாணவன் என்னும் சொல்லின் அமைப்பும் தமிழ்முறைப்பட்டதே. மாண், பகுதி; அவன், விகுதி. ஊனவன், கானவன், வானவன், மீனவன் முதலிய பெயர்களை நோக்குக. இவற்றின் பகுதிகளை ஒருகால் ஊனம், கானம் முதலிய மகர வீற்று வடிவங்களாகக் கொள்ளினும், ஆனவன்

கோனவன் முதலிய பெயர்களின் பகுதிகளை அங்ஙனங் கொள்ள முடியாமை காண்க.

ஆனவர் = இடையர் (அக. நி.).

மாணவகன் என்பது மாணவன் என்பதன் விரித்தல். மாணாக்கன் என்பது மாணவன் என்பதன் திரித்தல். மாணவன் - மாணவி, மாணாக்கன் - மாணாக்கி என ஆண்பாற்பெயர் அன்னீறும், பெண்பாற்பெயர் இகரவீறும் பெற்றிருப்பது, தமிழுக்குச் சிறப்பாம்.

இதுகாறும் கூறியவற்றால், தென்சொற்கு விதிக்கப்பட்ட எழு நிலைமைகளுள் ஆறு (1, 2, 3, 4, 6, 7) மாணவன் என்னும் சொல்லுக்கு ஏற்றல் காண்க.

வடமொழியிலுள்ள சொற்களெல்லாம் வடசொற்களே என்னும் குருட்டுக் கொள்கையை நம்பி, வடமொழியிலுள்ள துணையானே தென்சொற்களை யெல்லாம் வடசொற்களென மயங்கற்க. வடமொழிச்சென்று வழங்கும் தென்சொற்கள் பல்லாயிரக்கணக்கின. அவற்றுள் ஒன்று மாணவன் என்பது. தமிழில் சீடன் என்று தற்பவமாகி வழங்கும் சிஷ்ய என்னும் சொல்லே வடசொல்லாகும்.

இதனையும் இதுபோன்ற பிற வுண்மைகளையும் உணர்தற்கு, தமிழையும் தமிழரையும் தமிழ்நாட்டையும் பற்றிய வரலாற்றுண்மைகளை அறிதல் வேண்டும். யாம் அண்மையில் வெளியிடும் முதற்றாய்மொழி, வடமொழி வரலாறு, முதல் நாகரிகம் முதலிய நூல்களுள் அவற்றைப் பரக்கக் கண்டு தெளிக.

**- "செந்தமிழ்ச் செல்வி" நவம்பர் 1949**

## 9
# என் பெயர் என்சொல்?

மொழியைப் பொறுத்தவரையில் நான் மறைமலையடிகளை முற்றும் அடியொற்றிச் செல்பவனாயிருந்தும், தமிழ்ப் பேராசிரியர் பலரும் மொழியாராய்ச்சியின்மையானே என் பெயரையும் வடசொல்லென ஐயுற்றும் வருகின்றனர். அவர் மயக்கறுப்பான் எழுந்ததிக் கட்டுரை.

### 1. தேவன்

எக்காலத்தும் மாந்தர் தெய்வ வழிபாடாற்றுதற்குக் காரணம், நன்மை செய்யும் பொருளிடத்து அன்பும், தீமைசெய்யும் பொருளிடத்து அச்சமுமே. எல்லாம் வல்ல இறைவன் வழிபாட்டில் இவ் விரு மெய்ப்பாடுகளும் கலந்துள்ளன. இறைவன் இறுதியில் பேரின்பந் தருவான் என்பது நன்மை யும், எரிநிரயத்தில் இடுவான் என்பது தீமையும் பற்றிய உணர்ச்சிகளாகும்.

வெளியொழிந்த நாற்பூதங்களுள் ஒவ்வொன்றும் நன்மையும் தீமையுஞ் செய்யுமேனும், அவற்றுள் தீயே அவற்றைச் சிறப்பாக அல்லது தெளிவாகச் செய்வதாம். அதனால், முதற்கால மாந்தர் அதனையே சிறந்த தெய்வமாகப் போற்றிவந்தனர். அதுபற்றித் தெய்வப் பொதுப்பெயரும், முழுமுதற் கடவுட்பெயரும் தீப்பெயரினின்று தோன்றியுள்ளன.

கட்புலனைப் பயன்படுவிக்கும் ஒளியும், சமையற்கு வேண்டும் சூடும், குளிரைப் போக்கும் வெம்மையும், உணவுப் பயிர்க்கு வேண்டும் வெப்பமும், தீயினால் உண்டாகும் நன்மைகளாம்; தீண்டினாற் சுடுவதும், அகப்படின் எரித்துக் கொல்வதும், அதனால் விளைவும் தீமைகளாம். நாற் பூதங்களுள்ளும், சிற்றளவிலிருப்பினும் தீமை செய்வது தீயேயாதலின், தீமைப்பெயர் அதனின்றே தோன்றிற்று.

மரத்தொடு மரமும் கல்லொடு கல்லும் உரசும்போதும் நெரியும் போதும் நெருப்புண்டாவதைக் கண்ட முதற்கால மாந்தர், அவ்வகை யிலேயே நெருப்புண்டாக்கக் கற்றுக்கொண்டனர். அதனால், உரசல், நெரிசல், தேய்தல் முதலிய உராய்தற் கருத்துச் சொற்களினின்று, தீயைக் குறிக்கும் பெயர்கள் தோன்றியுள்ளன.

உரசு, உராய், உராய்ஞ்சு, உரிஞ், உரிஞு, உரிஞ்சு, உரை, உரைசு, உரைஞ்சு, உரோசு, உரோஞ்சு என்பன ஒருவேர்ப் பிறந்த ஒருபொருட் சொற்கள்.

**உர்**: உர் - உரு. உருத்தல் = அழலுதல்.

“ஆகம் உருப்ப நூறி” (புறம். 25 : 10)

உரு - உரும் - உரும்பு = கொதிப்பு.

“உரும்பில் கூற்றத் தன்ன” (பதிற்றுப். 26 : 13).

உரு - உருமம் = வெப்பம். நண்பகல்.

உருமகாலம் = கோடைகாலம்.

உருமித்தல் = புழுங்குதல்,

உரு - உருப்பு = வெப்பம்.

“கன்மிசை உருப்பிறக் கனைதுளி சிதறென” (கலித். 16 : 7)

உருப்பு - உருப்பம் = வெப்பம்.

“கனலும்.................. உருப்பமெழ” (அரிச். பு. விவா. 104)

உரு - உருகு - உருக்கு - உருக்கம்.

உருகுதல் = வெப்பத்தினால் இளகுதல், மனம் இளகுதல் (இரங்குதல்).

உருக்கு = உருகின இரும்பு (எஃகு).

உருக்காங்கல் = உருகிப்போன செங்கல்.

உர் - உரி = நெருப்பு (கன்னடம், துளுவம்).

உரி என்னும் வடிவம் தமிழில் வழக்கற்று மறைந்தது.

உரி - எரி = நெருப்பு.

நெருப்பைக் குறிக்கும் ‘உரு’ வேர் தமிழ்ச்சொற்கள் பிறமொழிகளிலும் சென்று வழங்குகின்றன.

இலத்தீன் (Latin) - உர், (to burn)

அர்மீனியம் (Armenian) ஓர் = நெருப்பு.

ஆபுக்கானியம் (Afghan) - ஓர், வுர் = நெருப்பு.

எபிரேயம் (Hebrew) ஊர் = நெருப்பு, ஓர் = ஒளி.

**நெர்**: நெர் - நெரி - நெரிதல் = நெருங்குதல், உரசுதல், நொறுங்குதல்.

நெர் - நெரு - நெருப்பு. நெருப்பு - நிப்பு (தெலுங்கு).

அரபியம் (Arabic) - நார் = நெருப்பு, நூர் = ஒளி.

**தேய்**: தேய்தல் = உரசுதல்.

தேய் - தீய் - தீ = நெருப்பு, விளக்கு, நரகம்.

தீ - தீமை = தீயின்தன்மை. தீ. தீய = கொடிய,

தீய்தல் = எரிந்துபோதல், கருகுதல், பற்றிப்போதல்,

தீதல் = தீய்தல்.

ஏகாரம் ஈகாரமாய்த் திரிதலை, தேன் - தேம் - தீம் என்னும் திரிபிலும் கண்டுகொள்க.

தேய் - தேயு (சமற்கிருதம்) = நெருப்பு.

இத் 'தேய்' அடியினின்றே தெய்வப்பெயர் தோன்றிற்று.

தேய் - தேய்வு - தேவு - தேவன்,

தேய்வு - தெய்வு - தெய்வம்.

தேவு - தே = தெய்வம், தலைவன்,

"பால்வரை தெய்வம் வினையே பூதம்" (தொல். 541)

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை" (தொல். 964).

"தெய்வம் அஞ்சல் புரையறந் தெளிதல்" (தொல். 1218)

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப" (தொல். 1367).

யகரவொற்றுள்ள தெய்வப் பெயரே பெரும்பான்மையாகவும்,

"தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே" (தொல். 1395)

என வகரவொற்றுள்ள பின்னை வடிவு அருகியும், இதுபோதுள்ள தமிழ்நூல்களுள் முந்தியதாகிய தொல்காப்பியத்துள் வருதல் காண்க.

சமற்கிருதம் - deva, daiva

இலத்தீன் - dues = god.

கிரேக்கம் (Greek) - theos = god.

'தேவ' என்னும் சொற்குச் சமற்கிருதத்திற் காட்டப்படும் div (to be bright). di, dip (to shine) என்னும் வேர்ச்சொற்கள் முதற்பொருளன்றி வழிப்பொருளே கொண்டுள்ளமையின் பொருந்தாமை காண்க.

பின்வரும் சித்திய (Scythian) ஆரியச் சொற்கள், 'தீ' (நெருப்பு) என்னும் தமிழ்ச்சொற்கு இனமானவை எனக் கால்டுவெல் கண்காணியார் காட்டுவார்.

**சித்தியம்:**

சாமாயிதே (samoiede) - tu, tui, ti, ty.

மஞ்சு (Manchu) - tua.

அங்கேரியம் (Hungarian) - tuz.

ஒசுத்தியக்கு (Ostiak) - tut.

துங்கசு (Tungus) - togo.

இலசுக்கியம் (Lesghian) - tze, zi, zie.

**ஆரியம் :**

கேலிக்கம் (Gaelic) - teire

வேலிசு (Welsh) - tan

பாரசீகம் (Persian) - tigh

**2. நேயன்**

நள் : நள் - நண் - நண்பு - நட்பு.

நள்ளுதல் = அடைதல், பொருந்துதல், நட்புக் கொள்ளுதல், செறிதல்.

நள்ளார் = பகைவர்.

நள்ளி = உறவு (சூடா.).

நள்ளிருள் = செறிந்தவிருள் (திருக்கோ. 156, சிலப். 15 : 105)

நள்ளுநர் = நண்பர் (திவா.).

நள் - நளி. நளிதல் = செறிதல்.

நள் - நெள் - நெய் = ஒட்டும் நீர்ப்பொருள் (oil, ghee),
கருப்புக்கட்டிச் சாந்து.

நெய்தல் = இணைத்தல், நூலை இணைத்து ஆடையாகச் செய்தல்.

நெய் = குருதி, நெய்த்தோர் (நெய்த்துவர்?) = குருதி,

அகரம் எகரமாதலை, பரு - பெரு, சத்தான் - செத்தான் என்னும் திரிபுகளிற் காண்க.

ளகர மெய்யீறு யகர மெய்யீறாவதை, கொள் - கொய், தொள் - தொய், பொள் - பொய் முதலிய திரிபுகளிற் காண்க.

நெய் - (நெய்ஞ்சு) - நெஞ்சு - நெஞ்சம் = விலாவெலும்புகள் இணைக்கப்பட்ட இடம் அல்லது அன்பிற்கிடமாகக் கருதப்படும் நெஞ்சாங்குலை (Heart) உள்ள இடம்.

நெய் - நேய் - நேயம் = அன்பு.

ஈரம், பசை முதலிய சொற்கள் ஒட்டும் பொருளையும் அன்பையும் குறித்தல் காண்க. அன்பு, இருவரை அல்லது பலரை இணைப்பது.

நேய் - நே = அன்பு. நேயம் - நேசம்.

ய - ச. ஒ.நோ: நெயவு - நெசவு.

நேசம் - நேசி. நேசித்தல் = அன்பு கடாத்தல் விரும்புதல்.

“நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்” (தாயுமானவர்)

நேயம் - நேயன். நேசம் - நேசன்.

நேயம் என்னும் தென்சொல் வடநாட்டுத் திரவிடத்தில் வழங்கி, பின்னர்ப் பிராகிருதத்திலும் தொடர்ந்து, இறுதியில் சமற்கிருதத்திற் புகுந்து

'ஸ்நேஹ' என்று வழங்குகின்றது. இவ் வரலாற்றுமுறை அறியாதார், பேரன் பாட்டனைப் பெற்றான் என்பதுபோல், ஸ்நேஹ (சமற்) - நேயம் (பிராகிருதம்) - நேயம் (தமிழ்) எனத் தலைகீழாய்த் திரிப்பர். இங்ஙனமே சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதியிலும், உண்மைக்கு மாறாகக் காட்டப்பட்டுள்ளது. பகுத்தறிவும் நடுவுநிலைமையுமுள்ள அறிஞர் உண்மை கண்டுகொள்வாராக. நேயம் வடசொல்லாயின் 'நெய்' என்பதும் அதன் அடிவேரான 'நள்' என்பதும் வடசொல்லாதல் வேண்டும். அங்ஙனமாகாமை வெள்ளிடைமலை போல் தெள்ளிதே.

வடமொழி ஆயிரக்கணக்கான தென்சொற்களைக் கடன் கொண் டிருப்பதால், மொழிநூன் முறைப்படி நடுவுநிலையாய் ஆராய்ந்து உண்மை காணவேண்டுமேயன்றி, வடமொழி தேவமொழியாதலால் பிறமொழியி னின்று கடன்கொள்ளாதென்னும் கருநாடகக் குருட்டுக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு, தூய தென்சொற்களையும் வடசொல்லென வலிப்பது, அறிவாராய்ச்சி மிக்க இக்காலத்திற் கேற்காதென, வடமொழி வாணர் திடமாக அறிவாராக; ஆராய்ச்சியில்லாத தமிழ்ப் பேராசிரியரும், வடமொழியிலுள்ள சொல்லெல்லாம் வடசொல்லெனக் கருதும் பேதை மையை விட்டுய்வாராக. மயிர் என்னும் தென்சொல் 'ச்மச்ரு' (smrsru) எனச் சகரம் முதற்கொண்டு வழங்குவதுபோன்றே, நேயம் என்னும் தென் சொல்லும் 'ஸ்நேஹ' என ஸகரம் முற்கொண்டு சமற்கிருதத்தில் வழங்கு கின்றதென அறிக.

**- "தென்மொழி" நவம்பர் 1959**

(10)

# சிலை என்னுஞ் சொல் வரலாறு

உருவம், சிலை, படிமை என்னும் ஒருபொருள் முச்சொற்களுள் முதலதும் ஈற்றதும் ஐயுறவற்ற தூய தென்சொற்கள்.

**உருவம்**

உரு என்னும் வடிவும் உருவத்தைக் குறிக்கும்.

உருக்கல் = கோவில் கட்டியவருடைய கற்சிலை. இது கட்டடக் கலை வழக்கு.

உருவம் = சிலை (பிரதிமை).

உருவாரம் = சிலை (பிரதிமை) இது உலக வழக்கு.

உருவம் என்பது ரூப என்னும் வடசொல்லின் திரிபென்பர். இது ஏமாற்று.

உருத்தல் = தோன்றுதல்.

உரு = தோற்றம், வடிவம், வடிவுடைப் பொருள், படிமை.

உரு - உருவு - உருபு =வேற்றுமை வடிவம்; அதைக் குறிக்கும் எழுத்து அல்லது அசை அல்லது சொல்.

உருவம் என்ற தென்சொல்லே வடமொழியில் ரூப எனத் திரிந்துள்ளது.

**படிமை**

படி = ஒப்பு, வகை, உருவம் (சீவக. 1156). அப்படி =அதுபோல், அவ்வகை. ஒருபடியாய் (வகையாய்) வருகிறது. ஒரு வடியாய் என்பது நெல்லை வழக்கு.

படியோலை = மூல மொத்த ஓலை.

படி = ப்ரதி (வ.) இதையும் ப்ரதி > படி எனத் தலைகீழாய்க் காட்டி ஏமாற்றுவர் வடவர்.

படி - படிமை - ப்ரதிமா (வ.) - பதுமை (தற்பவம்).

படிமை - படிமம் = நோன்புக் கோலம், தவவடிவம்.

(படி - படிவு - படிவம்; படிவு - வடிவு; படிவம் - வடிவம்.)

## சிலை

சிலை என்னும் சொல் வடமொழியில் கல் அல்லது பாறை என்றே பொருள்படும். Silex என்னும் இலத்தீன் சொல்லும், அதனின்று திரிந்த silica என்னும் ஆங்கிலச் சொல்லும் வன்கல்லை (second stone) யன்றி உருவச் சிலையைக் குறியா. நாம்தான் அதைக் கருவியாகுபெயராய் உருவம் என்னும் பொருளில் வழங்குகின்றோம்.

சிலா சாசனம் = கல்லில் எழுதப்பட்ட கட்டளை, கற்பட்டயம், விக்கிரகம், மூர்த்தம் என்பனவே உருவத்தைக் குறிக்கும் வடசொற்கள். மூர்த்தம் உடையவன் மூர்த்தி. ப்ரதிமா என்பது தென்சொற்றிரிபு.

நாம் கற்சிலை என்பதுபோல் வடவர் சிலாசிலா என்ன முடியாது இருப்புச்சிலை, வெள்ளிச்சிலை, செப்புச்சிலை, பொற்சிலை, வெண்கலச் சிலை என்று உருவப்பொருளில்தான் வழங்குகின்றோம். கற்பொருளில் என்றும் வழங்குவதில்லை. தெய்வ உருவம் தெய்வச்சிலை எனப்படும்.

வடமொழியில் கல் என்னும் பொருட்கும் வேர் அல்லது முதனிலை இல்லை. மானியர் வில்லியம்சு தம் அகரமுதலியில், ஒருகால் 'சி' மூலமாயிருக்கலாம் என்பர். 'சி' என்பதற்கு நல்கு, பொந்திகை (திருப்தி)ப் படுத்து, கூராக்கு என்னும் பொருள்கள்தாம் உண்டு. அவை பொருந்தா. தமிழிலும் திட்டமாகவோ, தேற்றமாகவோ மூலங்காட்டுதற் கில்லை. சிலை என்னுஞ் சொற்குச் சில் என்பதுதான் மூலமாயிருத்தல் வேண்டும்.

சில் = துண்டு, வட்டம், வட்டப்பொருள்.

சில்லெனல் = குளிர்தல், ஒலித்தல்.

சில் - சிலை = வளைந்த வில், ஒலிக்கும் எதிரொலி.

சில் - சிலம்பு = ஒலிக்கும் கழல் (பரல் இடப்பட்ட காலணி), எதிரொலியிடும் மலை, ஒலிக்கும் சிலம்பக் கழி. (சிலம்பு - சிலம்பம்).

சிலைத்தல் = ஒலித்தல், முழங்குதல், ஆரவாரித்தல் - 'மலைபடுகடாம்' இக்கருத்தது. பாடும்போது எதிரொலித்தலைச் சிலையோடுதல் என்பர் நெல்லை நாட்டார்.

சில் என்பது வட்டம் என்னும் கருத்தில் சுல் என்பதன் திரிபாகும்.

சுலவுதல் = வளைதல். துண்டு என்னும் கருத்துதான் சில் என்பதைச் சிலையோடு இணைக்க ஓரளவு உதவும்.

சில் - சிலுக்கு = வெட்டின துண்டு; சிலுக்கு - சிதுக்கு - செதுக்கு. (ல - த போலி) ஒ.நோ: சலங்கை - சதங்கை; கலம்பம் - கதம்பம்; மெல் - மெது.

சில் - சிலை = வெட்டின அல்லது செதுக்கின உருவம். ஆதலால், கல் என்னும் பொருள் தமிழில் இல்லை.

இனி, சிலை என்பது சிலம்பு என்பது போல் மலை என்றும் தமிழில் பொருள் கொண்டிருப்பதால், மலை என்னும் பொருளினின்றே கல் (மலைப்பிஞ்சு) என்னும் முதலாகுபெயர்ப் பொருளும் தென்மொழியிலும், வடமொழியிலும் தோன்றிற்று என்று கொள்ளவும் இடமுண்டு.

சிலை = மலை - "வணங்காச் சிலைஅளித்த தோளான்" (பு.வெ. 2:12)

சிலை = கல் (பிங்க.)

ஆகவே, சிலை என்னும் உருவப்பொருட் சொற்குத் தமிழ் மூலம் சற்று வலிந்து கொள்வதாகவே இருப்பினும், பின்வரும் ஏதுக்களால் அதைத் தென்சொல் என்று கொள்ளவும் இடமுண்டு.

1. வடமொழியில் சிலை என்னும் சொற்கு மூலமில்லை.
2. அம் மொழியில் அச் சொற்குக் கற்பொருளேயன்றி உருவப் பொருளில்லை. தமிழில் இரண்டுமுண்டு.
3. ஆரியர் இந்தியாவிற்கு வருமுன்பே தமிழகத்தில் உருவக் கலை இருந்தது.
4. வடமொழியில் குறைந்தபக்கம் ஐந்திலிரு பகுதி தென்சொல். (என் 'வடமொழி வரலாறு' பார்க்க.)
5. உருவம், படிமை என்னும் தென்சொற்களும் வடசொல்லாகக் காட்டப்படுகின்றன. அவை போன்றே சிலை என்பதும்.
6. வேத ஆரியர்க்கு வேள்வி வழிபாடேயன்றி உருவ வணக்கமில்லை. தென்னாடு வந்தபின்னரே தமிழரிடமிருந்து மேற்கொண்டனர்.
7. சிலா என்னும் வடசொல்லில் இருமொழிப் பொதுவெழுத்தே யன்றி வடமொழிச் சிறப்பெழுத்தில்லை.
8. தமிழ் ஐகாரவீறு வடமொழியில் ஆகார ஈறாய்த் திரிவது இயல்பே. எ-டு: மாலை - மாலா; வடை - வடா.
9. சிலா என்னுஞ் சொல் இருக்கு வேதத்திற்குப் பிற்பட்ட வடநூல்களிலேயே ஆளப்பட்டுள்ளது.
10. சிலம்பு, சிலை என்னும் இரு (மலைப்பொருட்) சொற்களும், தமிழில் சில் என்னும் ஒரே மூலத்தையும், ஒலித்தல் என்னும் ஒரே வேர்ப்பொருட் கரணியத்தையும் கொண்டுள்ளன.
11. தமிழ் மேலை ஆரியத்திற்கும் அடிப்படைச் சொற்களை உதவிய பெருவளமொழி.

**- நாகைத் தமிழ்ச்சங்க மறைமலையடிகள் நினைவு மலர் 1969**

# 11

# கருமம் தமிழ்ச் சொல்லே!

கருமம் என்பது, குமரிக் கண்டத்தில் கரு என்னும் முதனிலை யினின்று தோன்றித் தொன்றுதொட்டுத் தமிழில் வழங்கிவருவதும், அடிநாளில் ஐரோப்பா சென்ற தமிழர் அல், திரவிடர் மொழியிற் கலந்திருந்ததுமான தூய தமிழ்ச் சொல்லாகும்.

கருமம் = செயல், தொழில், கடமை. R.V. karman

கரு – கருமை – கருமம்.

ஒ.நோ : பரு – பருமை – பருமம்.
உவ – உவமை – உவமம்.

மகரவீற்றுப் பெயர்கள் தமிழிலும் னகர வீறாகத் திரிதலுண்டு.

எ–டு : பருமம் – பருமன். உவமம் – உவமன்.

கரு–த்தல் = செய்தல். இது வழக்கற்றுப் போன தமிழ் வினைகளுள் ஒன்றாம். அட்டு, பொட்டு, கள், நன் முதலிய பல வினைகள் வழக்கற்றுப் போனமை காண்க.

அட்டுதல் = வார்த்தல்

பொட்டுதல் = பொருத்துதல், கட்டுதல்

பொருத்து – பொத்து – பொட்டு

பொட்டு + அணம் – பொட்டணம்.

ஒ.நோ : கட்டு + அணம் = கட்டணம்
கட்டல் = களவு செய்தல். கள்ளாமை = களவு செய்யாமை.
நட்டல் = நட்புச் செய்தல்.

ஒருபொருள் பற்றிப் பல சொல்லியிருப்பின், அவற்றுள் ஒன்றும் சிலவும் வழங்கப்படாமற் போதல் இயல்பே.

கரு–த்தல் என்னும் சொற்கு இருவகையில் வேர்ப் பொருள் கூறலாம்.

1. கருமை = பெருமை (திவா.), மிகுதி. கடு – கரு.

கடுத்தல் = மிகுதல். “நெஞ்சங் கடுத்தரு” (குறள். 706)

கருத்தல் = முன இல்லாத தொன்று மிகுமாறு செய்தல், செய்தல்.

ஆங்கிலத்தில் make என்னும் சொல்லிற்கு, இதே கருத்தில், magnus (L), megas (Gk.) என்னும் சொற்களின் mag என்னும் வேரையே மூலமாகக் காட்டுதல் காண்க.

கருமம் - கம்மம். (> Pkt. kamma) = 1. கம்மியர் தொழில், smith's work 'கம்மஞ் செய் மாக்கள்' (நாலடியார், 393) 2. உழவுத் தொழில்.

கம்மவார் (கம்மம் + அவர்) - உழவுத் தொழில் செய்யும் ஒரு தெலுங்க வகுப்பார்.

கம்மம் - கமம் = உழவுத் தொழில்.

நாகரிக வுலகில் முதன் முதல் ஏற்பட்ட கைத்தொழில் உழவுத் தொழிலே. அதனால், திருவள்ளுவர் உழவரைக் "கைசெய்தூண் மாலை யவர்" (1035) என்றார்.

கமம் - கம் = 1. உழவுத் தொழில்.

2. கம்மியர் தொழில், "ஈ முங் கம்மும்" (தொல். எழுத். 328)

கம்மாலை = 1. எருது பூட்டியிருக்கும் இறைவை யேற்றம்.

2. கன்னார் தொழிற்கூடம்.

கம்மாலை - கமலை - கவலை.

கமலை என்பது பாண்டி நாட்டு வழக்கு. கவலை என்பது சோழ கொங்கு நாட்டு வழக்கு.

கன்னட தெலுங்கு மொழிகளில் (சிறப்பாகக் கன்னடத்தில், வகரம் பகரமாகத் திரிவதால், கவலை என்பது அவ்விரு மொழிகளிலும் கபிலெ (kapile) எனத் திரிந்து வழங்குகின்றது. இதைக் குராற் பெற்றத்தைக் குறிக்கும் கபிலா என்னும் வடசொல்லோடு மயக்கி, (கவலையேற்றத்தைக் கபிலையேற்றமாகக் கொண்டு) கபிலை எனக் குறித்துள்ளனர் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியாளர். முதலாவது, கபிலையென்று தமிழ்நாட்டில் ஓரிடத்திலும் வழங்கவில்லை. இரண்டாவது, கபிலை என்பது கபில நிறமுள்ள பெற்றம் (பசு.) கமலையில் காளைகளைக் கட்டி நீரிறைப்பரே யன்றிப் பெற்றங்களைக் கட்டி யிறையார்.

கமலை வண்டி, கமலையுருளை, கமலைவடம், கமலைக்குழி முதலிய பலசொற்கள் கமலை யிறைவையொடு தொடர்புள்ளவை. இவற்றை மேற்குறித்த அகராதியாசிரியர் அறவும் அறிந்திலர்.

பண்ணுதல் என்னும் சொல்லும் இதே கருத்தடிப்படையில் அமைந்ததாகத் தோன்றுகின்றது. பண் - பண்ணை = கூட்டம், பெருங்கூட்டம், தொகுதி, மிகுதி.

2. கருத்தல் = கை கருக்குமாறு ஒரு வினை செய்தல், செய்தல்.

தொடர்ந்து வேலை செய்வதனால், கரு நிறத்தார் கை கருப்பதும் பொன்னிறத்தார் அல்லது வெண்ணிறத்தார் கை சிவப்பதும் இயல்பு. 'செய்த கை சேவேறும்' என்பது பழமொழி. சேவு - சேகு = செவ்வயிரம்.

செய் - செம்மை. செய்தல் - கை சிவக்குமாறு ஒரு வினை செய்தல், செய்தல்.

இவ்விருவகை மூலங்களுள் எது உண்மையாயினும், கருமம் என்பது தமிழ்ச் சொல்லாதல் தேற்றம். அது வடமொழியில் திரிந்த முதனிலையே யன்றி வேர்ப் பொருள் ஏதுமில்லை.

கரு + வி = கருவி. ஒரு தொழில் செய்வதற்கு வேண்டும் மூலப்பொருள் அல்லது துணைப்பொருள்.

இச் சொல் தமிழென்பதை எவரும் மறுக்கார். இது தமிழாயின் இதனொடு தொடர்புள்ள கருமம் என்பதும் தமிழேயாதல் வேண்டும்.

கரு + அணம் = கரணம் = செயல். மணச் செயற்சடங்கு, செயற்கு வேண்டும் கருவி.

கரணம் - கரணியம் = அறிவுப் புலக் கருவியான அகக்கரணம். R.V. karana.

கரணம் என்பதை நீட்டிக் காரண என்றும், (அதனொடு பொருந்தக்) கரு என்னும் முதனிலையை நீட்டிக் கார்ய என்றும், வித்தும் விளையும் போலக் கருமமும் பற்றிய இரு நுண்பொருட் சொற்களை அமைத்துக் கொண்டனர் வடமொழியாளர். இவற்றைத் தமிழிற் சேர்த்ததினாலேயே, கருமம், கரணம் என்றும் சொற்களும் வடமொழியில் வழங்குதல் பற்றி வடசொல்லெனக் கருதப்பட்டன. காரணம், காரியம் என்னும் இரண்டிற்கும் ஈடாக, கரணியம், கருமியம் என இரு சொற்களை அமைத்துக் கொள்ளலாம்.

கம்மக் குடம் = கம்மியர் (கன்னார்) செய்த குடம்.

கம் - கம்மி = குயவன். "மட்கலஞ் செய் கம்மி" (பாரத. திரௌ. 64) கலஞ் செய்யும் ஒப்புமையால், குயவனும் கன்னான்போற் கருதப்பெற்றான்.

கம் - கம்மியம் = 1. கைத்தொழில்; 2. கம்மாளர் தொழில்.

கம்மியம்- கம்மியன் = 1. தொழிலாளி
"கம்மியரு மூர்வர் களிறு" (சீவக. 495)
2. கம்மாளன் (திவா.)
3. நெசவாளி. "கம்மியர் குழீஇ" (மதுரைக் 521)
4. பொறிவினைஞன், mechanic

கம் - கம்மாளன் (Pkt. kammara) = கொல்லன், தச்சன், சிற்பன், தட்டான், கன்னான் என்னும் ஐவகைக் கம்மியருள் ஒரு வகையன்.

கம்மாளன் - கம்மாணன். "கம்மாண சேரியும்" (S.I.I. ii). 43

ஒ.நோ. : களவாளி - களவாணி, வளரி - வணரி.

கொல்லனைக் குறிக்கும் கருமகன் என்னும் சொல், கருமம் என்னும் சொல்லினின்று திரிந்த தனிச்சொல் அன்று; இரும்பை யுணர்த்தும் கரு

என்னும் சொல்லும், ஆடவனைக் குறிக்கும் மகன் என்னும் சொல்லும் சேர்ந்த கூட்டுச் சொல்லாகும்.

கருமகன் - கருமான் - கருமன் - கொல்லன் (பிங்.)

கருங்கொல் = இரும்பு (சூடா.)

கருங்கொல்லன் = கருமான். கருமகன் = கொல்லன். ‘‘கருமகக் கம்மியன்’’ (கம்ப. பம்பா. 37) கருமம் என்னும் சொல்லினின்று கருமகன் என்பது தோன்றியிருப்பின், ‘கருமக் கம்மியன்’ என்று மிகைபடு சொல்லாற் குறிக்க வேண்டியதில்லை.

இனி, கருமையென்னுஞ் சொற்கு வலிமைப் பொருளும் (புறம். 2; சிலப். 5, 29) இருப்பதால், ‘கருங்கைக் கொல்லன்’ (சிலப். 5, 29) என்னும் தொடரைச் சான்றாகக் கொண்டு, கருமகன் என்பதற்கு வலியவன் அல்லது வன் செயலன் என்று பொருளுரைக்கவும் இடமுண்டு. ஆயினும், அஃது அத்துணைச் சிறப்பும் பொருத்த முடையதன்று.

கருமான் என்பது, செம்மான் (shoemaker) என்பதனொடு நிறம் பற்றி முரண்பட்டது. செம்மகன் - செம்மான்.

ஒ.நோ : blacksmith x white smith (worker in tin).

செம்மான் என்பதை, Carman (S) என்னும் தோற் பெயரின் திரிபாகச் சென்னைத் தமிழகராதி குறித்திருப்பது தவறாகும்.

cf. E. tan. to convert raw hide into leather, to make brown by exposure to sun.

ஒரு குலத்தைக் குறிக்கும்போது, பலர்பாற் பெயரொடு அகரச் சாரியை சேர்த்துக் குறிப்பது தமிழர் வழக்கம்.

| எ-டு : | **ஒருமைப் பெயர்** | **பன்மைப்பெயர்** | **குலப்பெயர்** |
|---|---|---|---|
| | தட்டான் | தட்டார் | தட்டாரக்குலம் |
| | செக்கான் | செக்கார் | செக்காரக்குலம் |
| | வண்ணான் | வண்ணார் | வண்ணாரக்குலம் |

இம்முறைப்படி, கருமான் சொல்லினின்று கருமாரக் குலம் என்பது அமையும். இதை அடிப்படையாகக் கொண்டு கொல்லன் பெயர் Karmara என்று இருக்கு வேதத்தில் அமைந்ததாகத் தெரிகின்றது.

செய்தலைக் குறிக்கும் கரு என்னும் வினைமுதனிலை, வடமொழி யில் கரு (kr) என்றும், இலத்தீனில் (cres) என்றும் நிற்கும். ஓர் இயல்பான வேர்ச்சொல் உயிர் முதலாய் அல்லது உயிர் மெய்ம்முதலாய் இருக்குமே யன்றி, மெய்ம்முதலாய் இராது. கர்ம, கர்ண, கர்த்தா, காரண, கார்ய முதலிய திரிசொற்களெல்லாம், வடமொழியிலும் உயிர் மெய்ம் முதலாயே யிருத்தல் காண்க.

## 12

# எது தேவமொழி?

உலகிலுள்ள (ஏறத்தாழ) மூவாயிர மொழிகளுள், ஒருசில, மறை நூலுடைமை பற்றித் தம்மைத் தூயமொழி (Holy Language) என்றும், அவற்றுள்ளும் சமற்கிருதம் தன்னைத் தேவமொழி (Divine Language) என்றும், போற்றிப் புகழ்ந்து கொள்கின்றன. தூயமொழி என்பதினும் தேவமொழி என்பது உயர்வானது. முன்னது மண்ணுலகத்தில் தெய்வத் தன்மை யடைந்த மக்கள் மொழி யென்றும், பின்னது விண்ணுலகத்தி னின்றோ வீட்டுலகத்தினின்றோ மண்ணுலகத்திற்கு வந்த தேவர்மொழி யென்றும், கருத்துப் பிறப்பிப்பன.

உலகில் ஒரு மொழியும் தேவமொழி யன்று. ஒன்றைத் தேவமொழி யென்று குறிப்பின், அது புனைந்துரைவகையாகவே யிருத்தல் வேண்டும். அங்ஙனம் புனைந்துரை வகையிற் குறித்தற்கும், கீழ்க் குறிக்கப்பெறும் குணங்களனைத்தும் அதற்கிருத்தல் வேண்டும்.

(1) உலகமொழி முதன்மை
(2) ஒலியெளிமை
(3) பன்மொழித் தாய்மை
(4) ஒப்புயர்வற்ற பண்பாடு
(5) தூய்மை
(6) மறைநூலும் பல்கலை இலக்கியமும் உண்மை
(7) மக்கட் பொதுவுரிமை
(8) நடுநிலை அறங்கூறல்

இவ் வெண்ணியல்புகளும் ஒருங்கே தமிழுக்குள. இவற்றுள் ஒன்றிரண்டே சமற்கிருதத்திற்குள்ளன.

(1) வழக்கற்றுப்போன வேத ஆரிய மொழியும் அக்காலத்து வட்டார மொழிகளாகிய (தமிழ் உட்பட்ட) பிராகிருத மொழிகளும் கலந்த அரைச் செயற்கையான இலக்கிய மொழியே வடமொழி யென்று சிறப்பாய்க் கூறப்படும் சமற்கிருதமாம். (கி.மு. 2000).

தமிழோ, மாந்தன் முதல் முதல் தோன்றிய (Lemuria என்னும்) குமரிநாட்டில், தானே தோன்றிய இயற்கை மொழியாம் (கி.மு. 50,000).

"ஓங்க லிடைவந்து......... தன்னே ரிலாத தமிழ்," என்னும் பழைய தனிப் பாவும் இதனைப் புலப்படுத்தும்.

(2) **"ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்**
**போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார் - ஏட்டெழுதி**
**வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்**
**சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று."**

என்று கோதமனாரும்,

**"ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி**
**..........................................**
**வள்ளுவர் வாய்மொழி மாண்பு."**

என்று மாங்குடி மருதனாரும், கூறியவையே. தமிழொலி மென்மைக்கும் சமற்கிருதவொலி வன்மைக்கும் போதிய சான்றாம்.

(3) தமிழ் தென்னாட்டு மொழிகட்கெல்லாம் தாயாயிருப்பது போன்றே, சமற்கிருதம் வடநாட்டு மொழிகட்கெல்லாம் தாய் என்றொரு தவறான கருத்து நெடுங்காலமாக நிலவி வருகின்றது. ஒரு காலத்திலும் உலக வழக்காய் வழங்காத அரைச் செயற்கையான இலக்கியக் கலவைமொழி, எங்ஙனம் தாய்மொழியாயிருத்தல் கூடும்? ஒரு மொழி முதற்கண் தனிமொழியா யிருந்தாலன்றோ பின்னர்த் தாய்மொழியாயும் அமைதல் கூடும்! தமிழ், திரவிட மொழிகட்குத் தாயும், ஆரிய மொழிகட்கு மூலமுமா யிருக்கும்போது, அவ் வாரிய மொழிகளுள் ஒலியளவில் முதுவளர்ச்சி யடைந்த இலக்கியச் செயற்கைக் கலவை மொழியாகிய சமற்கிருதம் எங்ஙனம் உண்மையில் பன்மொழித் தாயாயிருத்தல் ஒல்லும்?

(4) **"கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து**
**பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை**
**மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்**
**எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"**

என்று பரஞ்சோதி முனிவர் தருக்குமாறு, இலக்கணச் செம்மையும் வேறெம் மொழியினுமில்லாத பொருளிலக்கணமுமுடைய தமிழே மொழிப் பண்பாட்டில் தலைசிறந்ததாம்.

(5) பெருஞ் சொல்வள முடையதும் பிறமொழித் துணை வேண்டாததும் தனித்து வளர்ந்தோங்க வல்லதும் தமிழ் ஒன்றே,

**"அன்றியும் தமிழ்நூற் களவிலை அவற்றுள்**
**ஒன்றே யாயினும் தனித்தமி ழுண்டோ?"**

என்னும் சுவாமிநாத தேசிகர் கூற்று. மொழியாராய்ச்சி யில்லாத இருட்காலத் தெழுந்ததாதலின், அது இற்றைக்குப் பொருளற்றதென விடுக்க.

சமற்கிருதத்திற்குள்ள சொல்வளம் பன்மொழிச் சேர்க்கையால் உண்டானதாதலின், அதுவும் சிறப்பிலதென்று விடுக்க.

(6) **"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே"** (1336)

**"மறைமொழி கிளந்த மந்திரத் தான"** (1421)

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப"** (1434)

என்னும் தொல்காப்பியர் கூற்றும்,

**"ஏரணம் உருவம் யோகம் இசைகணக் கிரதம் சாலம்**
**தாரணம் மறமே சந்தம் தம்பநீர் நிலமு லோகம்,**
**மாரணம் பொருளென் றின்ன மானநூல் யாவும் வாரி**
**வாரணம் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரும் மாள"**

என்னும் பழந்தனிப்பாடலும், பண்டைத் தமிழில் மறைநூலும் பல்கலை இலக்கியமும் இருந்து பின்னர் இறந்துபட்டமையை உணர்த்தும். பண்டைத் தமிழிலக்கியம் இறந்துபட்டமையினாலேயே, அதன் மொழிபெயர்ப்பான சமற்கிருத இலக்கியம் இன்று முதல் தோன்றிய மூலமாகக் காட்சியளிக்கிறது.

(7) ஆரிய வேதத்தையும் அதன் வழிப்பட்ட சமற்கிருத நூல் களையும் தமிழரான சூத்திரர் ஓதின், அவர் நாவை அறுத்துவிட வேண்டு மென்றும், அவற்றைக் கேட்பின் அவர் காதில் உருக்கின ஈயத்தை வார்த்தல் வேண்டுமென்றும், ஆரிய அறநூல்கள் அறைகின்றன. தமிழையும் தமிழ் நூல்களைக் கற்றற்கும் கேட்டற்குமோ எத்தகைய குலமத கட்சியின விலக்கும் வேறுபாடுமில்லை.

**"செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த**
**பொய்யா மொழிக்கும் பொருளொன்றே - செய்யா**
**அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை**
**இதற்குரியர் அல்லாதார் இல்"**

என்று வெள்ளிவீதியாரும் பாடியிருத்தல் காண்க.

(8) ஆரிய அறநூல்கள் யாவும் கடுகளவும் நடுநிலையறியாதவை யென்பது, அவை குலத்திற்கொரு முறையும் தண்டமும் கூறுவதினின்று தெளிவாய் அறியப்படும்.

**"வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்**
**உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்திற் கொருநீதி"**

என்னும் சுந்தரம்பிள்ளை வாயுரை ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

இங்ஙனம் தமிழ் பல்லாற்றானும் தலைசிறந்த மொழியாயும், சிவநெறியும் திருமால்நெறியும் தூயதமிழ் மதங்களாயும், இருப்பவும், தமிழ் பொதுவழிபாட்டிற்குத் தகாத மொழியென்று தள்ளப்பட்டபின்னும், தமிழர் ஆரியரினும் தாழ்ந்தவரென்று கொள்ளப்பட்டபின்னும், தமிழும் தமிழிலக்கியமும் இழப்பிற்கும் அழிப்பிற்கும் இடனாய், இற்றைச் சிறுமையடைந்துள்ளன. அறிவும் ஆராய்ச்சியும் மிக்க இக்காலத்திலேனும், தமிழர் விழித்தெழுந்து தம் முன்னோர் நிலைமையடைய முயல்வாராக.

**- "தென்மொழி" செப்டம்பர் 1959**

## 13

# சமற்கிருதவாக்கம் – சொற்கள்

வேத ஆரியர் நாவலந்தேயம் அல்லது நாவலம்பொழில் என்னும் இந்தியாவிற்குட் புகுந்தபோது, இங்கிருந்த இலக்கியம் தமிழிலக்கியமே. அவர் இந்திய நாகரிகம் தமதெனக் காட்டித் தம்மைக் குமுகாய (சமுதாய) நிலையில் உச்ச நிலைக்கு உயர்த்துவான் வேண்டி, தமிழ்நூல்களை மொழி பெயர்த்து ஓர் இலக்கியத்தை அமைத்தற்குப் போதிய சொல்வளம் தம் முன்னோர் மொழிக்கின்மையால் ஆயிரக்கணக்கான சொற்களைத் தமிழினின்று கடன் கொள்ள வேண்டியதாயிற்று. இங்ஙனங் கடன் கொண் டமைந்த இலக்கியச் செயற்கைக் கலவை மொழியே சமற்கிருதம். இதற்கு, ஏற்கெனவே இருவேறு நிலைகளில் நேரல்லா வழியிற் கடன் கொள்ளப்பட் டிருந்த தமிழ்ச்சொற்களும் துணைசெய்தன. இதனால், கீழையாரியம் மூவேறு காலத்தில் தமிழ்ச்சொற்களைக் கடன் கொண்டமை அறியப்படும்.

அவற்றுள்:

முதற்காலம் மேலையாரியக் காலமாகும். அக் காலத்திற் கடன் கொள்ளப்பட்டவை முதற் காலத் தமிழ்ச்சொற்கள் (Tamil of the First Period) எனத் தகும்.

இரண்டாங் காலம் வேத ஆரியக் காலமாகும். அக்காலத்திற் கடன் கொள்ளப்பட்டவை இரண்டாங் காலத் தமிழ்ச்சொற்கள் (Tamil of the Second Period) எனத் தகும்.

மூன்றாங் காலம் சமற்கிருதக் காலமாகும். அக் காலத்திற் கடன் கொள்ளப்பட்டவை மூன்றாங் காலத் தமிழ்ச்சொற்கள் (Tamil of the Third Period) எனத்தகும்.

**1. மேலையாரியத் தமிழ்ச்சொற்கள்**

எ–டு:

**தியூத்தானியம்:**

அம்ம - amma, ஆன் ( = அங்கு) - yon, இரு - are, இரும்(பு) - iron, ஈன் - yean, ean; உரறு - roar, கரை - cry, காண் - con, cun, can; குரங்கு (= வளை) - crank, குருள் - curl, கொடுக்கு - crook, சப்பு - sup, sip; துருவ - through, நாகு - nag, பட்டு (அடி) - beat, புல்லம் - bull, மெது - smooth, முன்னு - mun (think), வேண்டு - want.

**இலத்தீனம்**

அமர் - amo (love), amor; உருளை - உருண்ட - rota (wheel), உரை - or, கும்மல் - cumulus, சமம் - similis, சேர் - ser, தா - do, நாவாய் - navis, படகு - barca, புரை - par (equal), மன் - man (remain), முதிர் - maturus, மெல் - mellow (soft), வல் - val (strong), வரி (வளை) - vers (turn).

**கிரேக்கம்**

அரசன் - arthos, arkhon, குரு (நிறம்) - chroma, கோணம் - gona, சாயை (நிழல்) - skia, தச்சன் - tekton, திருப்பு - trepos, துரப்பணம் - trapanon, தொலை - telos, நரம்பு - neuron, நீரம் - neros (wet), பல - polus, பரி - peri (round), பறழ் - proles, பாழி (நகரம்) - polis, புரை - poros, மத்திகை - mastix, mastigos, மால் - melas (black), விழை - philos.

**பொது**

பல தமிழ்ச்சொற்கள் மேலையாரியத்தில் பல மொழிகட்கு அல்லது மொழிக் குடும்பங்கட்குப் பொதுவாகவும் வழங்குகின்றன.

எ-டு:

அ. (சேய்மைச் சுட்டு) - E. *a* (that), Du. *a* (dat). Ger. a (das).

இ. (அண்மைச் சுட்டு) - E. *i* (this) OE. (*hit*), Goth (*hita*), L. (*hic*).

ஈ. (அண்மைச் சுட்டு) - E. (*these*).

இதோள் (இவ்விடம்) - E. *hither*. OE. *hider*, L. *citra*.

(இய்) - இயல் - L. *i, e;* Gk. *i ei;* Goth. *i*. Slav. *i*, Lith. *ei*.

இயலுதல் = இயங்குதல், நடத்தல், செல்லுதல். உய்(இய்) - இய - இயங்கு. இய - இயவு = செலவு, வழி. இய - இயவுள் = வழி. உய்தல் = செல்லுதல். உய்த்தல் = செலுத்துதல்.

ஏர் (கலப்பை). E *ear*., L. *ar.*

ஒன் - ஒன்னு, ஒன்று - E. *one*. Du. *een*, Ger. *ein*, L. *unus*, Gk. *oinos*.

கொத்தி = பூனை (கன்னடச் சொல்). பகலிற் குருடு போலிருப்பது என்பது இதன் பொருள். L. *catta*; E.*cat.*

சாலை - Ger. *saal*, It. *sala, salone*, F. *salon*, E. *saloon*, E.*hall* Du. and Dan. *hal.*

பதி - பதம் - பாதம். நிலத்திற் பதிவது பதம் அல்லது பாதம். பாதம் - பாதை = வழி. பதம் = வழி. அடித்தடம் தொடர்ந்து பதிவதனால் ஒரு வழி அமையும். அடி என்பது ஒரு பொருளின் அடிப்பாகம். அது, கால், பாதம், கீழிடம் முதலிய பல பொருள்களை யுணர்த்தும். பாதம் என்பது நிலத்திற்

பதியக்கூடிய பரந்த அடிப்பகுதி. பாதம் வைத்த விளக்கு என்னும் வழக்கை நோக்குக. அடிமரம் பருத்தது, மரத்தடியில் உட்கார்ந்தான், மேடைக்கடியிற் பார், அடிநாளிலிருந்து சொல்லிவருகின்றேன், என்னும் வழக்குகளில் பாதம் என்னும் சொல் பொருந்தாமை காண்க.

பதம், பாதம் - Gk. *podos*. L. *pedis*. OE.*fot* (E.*foot*), Ger. *fuss*.

பாதை - E. *path*, OE. *paeth*, Dut. *pad*, Ger. *pfad*.

பொறு - OE., OHG. *ber*., Goth. *bair*, E.*bear*, L.*fer*, Gk. *pher*.

போடு - E.*put*, *pot. pyt*; Dan. *putte*. L. *pon*.

போகவிடு - போக்கு - போடு.

இங்குக் காட்டிய சொற்களுள், கீழையாரியத்தில் இல்லாதனவு முள. அவை மேலையாரியத்தினின்று பிரிந்து வரும்போது கீழையாரியத்தால் இழக்கப்பட்டனவாகும்.

சில தமிழ்ச்சொற்கள் மேலையாரியத்தினும் கீழையாரியத்தில் திரிந்திருப்பது, பின்னதன் பின்மையைக் காட்டும்.

எ–டு:

அம்மா - O.G. *amma* - Skt. *amba*.

காண் - OE. con - *cna* (metathesis) - E.*know*,

OHG. cna, L. and Gk. *gno* - Skt. *Jna* (Ph).

முழுகு - L. *merg*, Skt. *majj*.

இரும்(பு) - O.E.*iren*. O.G. Mod Ger. *eise*, Goth. *eisarn*.

L. *aer. aes*; Skt. *ayas*.

வல் - L. *val* Skt. *bal*.

சில தமிழ்ச் சொற்கள் கீழையாரியத்தினும் மேலையாரியத்தில் திரிந்திருப்பது, வடதிரவிடம் வடமேற்காய்ச் சென்று படிப்படியாய்த் திரிந்து ஐரோப்பாவில் முழுவாரியமாய் மாறியதையும், கீழையாரியம் இந்தியாவிற்குட் புகுந்தபின் வடஇந்திய வடிவத்தைச் சில சொற்களில் மேற்கொண்டதையும் உணர்த்தும்.

எ–டு:

உம்பர் - வ.தி. ஊப்பர், Teut. *upper*, over; L. *super*, Gk. *huper*. Skt. *upari*.

ஆயிரம். அயிர் – (அயிரம்) – அசிரம்). North Indian. *hazar*, Persian. *hazar* Gk. *kesloi; kilioi*; Skt. *sahasra* (sa+hasra).

சில தமிழ்ச்சொற்கள் தியூத்தானியத்தினும் இலத்தீனில் திரிந் திருப்பது, வடமேற்கிற் சென்ற திரவிடம் ஐரோப்பாவின் வடமேல்

மூலையை முட்டித் திரும்பியதையும், திரும்புகாலில் கிழக்கு நோக்கித் திரிந்ததையும் காட்டும்.

எ-டு:

துருவ - Teut. *through*, L. *trans*.

துள் - துரு - துருவு - துருவ (வி.எ.).

துருத்து - Teut. *thrust*, L. *trud* (*o*) (intrude, protrude, obtrude etc).

## 2. வேதவாரியத் தமிழ்ச்சொற்கள்

வேதவாரியர் வட இந்தியாவிற்குட் புகுந்தபோது (கி.மு.2000 - 1500), அங்கு வாழ்ந்தவருட் பெரும்பாலார் திரவிடரே. பெலுச்சித்தானத்திலும் வங்காளத்திலும் இன்றும் திரவிட மொழிகள் வழங்குவதையும், காளிக் கோட்டம் (Calcutta) என்னும் பெயர் தூய தமிழ்ச் சொல்லா யிருப்பதையும், ஊன்றி நோக்குக.

ஆரிய வேதம் வடதிரவிடம் வழங்கும் நாட்டில் இயற்றப் பெற்றமையால், நூற்றுக்கணக்கான தென்சொற்கள் அதிற் புகுந்துவிட்டன.

எ-டு: அகவு, அவை - சவை, இலக்கு, உத்தரம், உரு - உருவு - உருவம், உலகு, உவணம் - சுவணம், கடுகம், காலம், கருள் (கருமை), குமரன் - குமரி, தக்கணம், தண்டம், தூது, நடம், பக்கம், மண்டலம், மந்திரம், முத்து - முத்தம், வட்டம்.

விரிவஞ்சி இவற்றுட் சிலவற்றிற்கே இங்கு மூலம் விளக்கப்பெறும்.

அமலுதல் = நெருங்குதல். அமர்தல் = நெருங்குதல். அமைதல் = நெருங்குதல், நிறைதல், பொருந்துதல், சேர்தல், கூடுதல். திரளுதல். அமை = திரண்ட கெட்டி மூங்கில்.

அமை - அவை = கூட்டம். ம-வ, போலி.

ஒ.நோ: அம்மை - அவ்வை, குமி - குவி.

அவை - சவை. உயிர் முதற் சொற்கள் சொல்லாக்கத்தில் மொழி முதல் மெய்கள் ஏறப்பெறும். அவற்றுள் ஒன்று சகரம்.

எ-டு : உருள் - சுருள், உவணம் - சுவணம், ஏண் - சேண், ஏமம் - சேமம், சபா (Sabha) என்னும் சொற்கு வடமொழியிற் பொருத்தமான வேரில்லை.

உத்தரம் = உயரம், உயரமான வடதிசை. தக்கணம் = தாழ்வு, தாழ்வான தென்திசை, குமரிமலை முழுகிப் பனிமலை தோன்றியபின், நாவலத்தில் வடதிசை யுயர்ந்து தென்றிசை தாழ்ந்தது. தக்குத் தொண்டை = தாழ்ந்த குரல். குடமலையால் உயர்ந்திருப்பது மேற்றிசையென்றும், குணகடலால் தாழ்ந்திருப்பது கீழ்த்திசை யென்றும் வழங்கி வருதல் காண்க.

உருத்தல் = தோன்றுதல். உரு = தோற்றம், வடிவம், வடிவுடைப் பொருள். உரு – உருவு – உருபு = வேற்றுமை வடிவம், அதைக் காட்டும் இடைச்சொல். ஒ.நோ: அளவு – அளபு. உருவு – உருவம். தமிழிலக்கணம் ஆரிய வருகைக்கு எண்ணாயிரமாண்டு முற்பட்டது.

உலவுதல் = வளைதல், சுற்றுதல். உலா = நகரைச் சுற்றி வரும் பவனி. உலக்கை = உருண்ட பெரும்பிடி. உலம்வா – உலமா. உலமருதல் = சுழலுதல். உலவு – உலகு = உருண்டையாயிருப்பது அல்லது சுற்றி வருவது. ஒ.நோ: கொட்குதல் = சுற்றி வருதல். கொள் – கோள். உலகு – உலகம். லோக் என்னும் வடசொல், பார்த்தது அல்லது பார்க்கப்படுவது என்னும் பொருளது. அது நோக்கு என்னும் தென்சொல்லின் திரிபாம்.

இனி, உலகம் வட்டமாயிருக்கும் ஞாலம் (பூமி) என்றுமாம். ஒ.நோ: "கடல்சூழ் மண்டிலம்" (குறுந். 300).

உகரம் உயரத்தைக் குறிக்கும் வேர்ச்சொல். எ–டு: உக்கம் = தலை, உவ்வி = தலை, உத்தி = ஒருவகைத் தலையணி. உச்சி, உம்பர், உவண், உயர்.

உவண் = மேலிடம். உவணை = தேவருலகம். உவணம் = உயர்ச்சி, பருந்து, கலுழன், கழுகு. பருந்து உயரப் பறக்கும் பறவைகளுள் ஒன்று. "உயரவுயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?" என்பது பழமொழி. உவணம் – சுவணம் = பருந்து, கலுழன். கழுகு. உவணம் (சுவணம்) முல்லை நிலத்துப் பறவையாதலால், அந் நிலத்தெய்வமாகிய மாயோனுக்கு ஊர்தியாகக் குறிக்கப்பெற்றது.

சுவணம் என்னும் சொல்லை வடமொழியாளர் சுபர்ண என்று திரித்துப் பின்பு சு + பர்ண என்று பிரித்து, நல்ல இலை, அழகிய இலையுள்ளது, அழகிய இலை போன்ற சிறகையுடையது, என்று பொருந்தாப் புளுகலாகக் கரணியங் காட்டுவர். கடுகளவேனும் பகுத்தறி வுடையார், நகைச்சுவையான இச் சொற்பொருட் கரணியத்தைக் காணின் நகாதிரார்.

கும்முதல் = திரளுதல். கும் – குமர் – குமரன் = திரண்டவன், இளைஞன். குமரி = திரண்டவள், இளைஞை. ஒ.நோ: L. *virginem*, E. *virgin* from *virgo* to swell. விடைத்தல் = பருத்தல். விலங்கினத்திலும் பறவை யினத்திலும் திரண்டு இளைமையா யிருப்பவற்றை விடையென்பது மரபு. ஆடு, மாடு, குதிரை, மான், பூனை, கோழி, பாம்பு முதலியவற்றுள், திரண்டு இளமையாயிருப்பவற்றை விடையென்பது இருவகை வழக்கிலுமுண்மை கண்டுகொள்க. விடை – விடலை = இளங்காளை, மறவன் (வீரன்), இளைஞன், 16 முதல் 30 ஆண்டு வரைப்பட்டவன், திண்ணியோன். இளநீரை விடலையென்பது நாஞ்சில் நாட்டு வழக்கு. உயிரினங்களிற் பெரும்பாலும் ஆண் பருத்திருப்பதால், விடையென்பது இளவாணையே சிறப்பாகக் குறிக்கும். குமர் என்னும் சொல் உயர்திணையில் இருபாற் பொதுவாம். குமரி

என்பது, இளமைபற்றிச் சில மரப்பெயர்க்கும், புதுமை (முதன்மை) குறித்துச் சில தொழிற்பெயர்க்கும், அழியாமை குறித்துச் சில இடப்பெயர் பொருட் பெயர்க்கும் அடைமொழியாம்.

குமரன், குமரி என்னும் தமிழ்ச்சொற்களை, வடவர் குமாரன் குமாரி என நீட்டி, முறையே தமிழ்ப் பொருளொடு மகன், மகள் என்னும் பொருளிலும் வழங்கிவருகின்றனர்.

முள் - முண்டு - முண்டை = முட்டை. முள் - முட்டு - முட்டை.

முண்டு - மண்டு - மண்டி. மண்டியிடுதல் = காலை மடக்குதல்.

மண்டு - மண்டலம் = வட்டம். வட்டமான பொருள்.

மண்டலம் - மண்டிலம்.

மண்டலம் - மண்டலி. மண்டலித்தல் = வளைத்தல்.

மண்டலம் என்பது இருக்குவேதப் பெரும்பிரிவின் பெயர். தமிழ்ச் செய்யுளில் எல்லாவடிகளும் அளவொத்துவரும் யாப்பு மண்டிலம் எனப்படும்.

**"ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்**
**குட்டமும் நேரடிக் கொட்டின என்ப"** (செய். 114)

**"மண்டிலம் குட்டம் என்றிவை யிரண்டும்**
**செந்தூக் கியல என்மனார் புலவர்"** (செய். 116)

என்பன தொல்காப்பிய நூற்பாக்கள். "என்ப", "என்மனார் புலவர்" என்னும் வழிநூன் மரபுரைகள், 'மண்டிலம்' என்னுஞ் சொல் முதனூற் குறியீ டென்பதைத் தெரிவிக்கும். முதனூல் ஆரிய வருகைக்கு முற்பட்டதென்பது முன்னரே கூறப்பட்டது.

மண்டலம், மண்டிலம் என்னும் இருசொல்லும் வட்டமான பொருள் களையும், தோற்றத்தையும் செலவையும் காலத்தையும் இடத்தையும் தொன்றுதொட்டு இருவகை வழக்கிலும் குறித்து வந்திருக்கின்றன. நாற்பது அல்லது நாற்பத்தைந்து நாட் கொண்டது மருத்துவ நூல் கூறும் கால மண்டலம். தொண்டை மண்டலம், கொங்கு மண்டலம் என்பன பழைமை யான இடமண்டலம். "மண்டிலத் தருமையும்" என்பது தொல்காப்பியம் (977).

தள் - தாள் = மரஞ் செடி கொடி பயிர் புல்லின் தடித்த அடி; இலை பூவின் அடி தாளை ஒட்டிய பயிர் புல்லிலை; தாள் போன்ற கால், விளக்குத்தண்டு முதலியன.

தள் - தண்டு = செடிகொடிகளின் திரண்ட அடி. (எ-டு: கீரைத்தண்டு), தண்டு போன்ற பொருள் (எ-டு: விளக்குத்தண்டு).

தண்டு - தண்டான் = தண்டுக்கோரை. தண்டுதல் = தண்டுபோல் திரட்டுதல், பணத்தைத் திரட்டுதல்.

தண்டு = தடி, படகு வலிக்குங் கோல், தண்டினால் தாங்கும் பல்லக்கு, தண்டுபோல் திரண்ட படை.

ஒ.நோ: club = stick association. staff = stick, body of officers.

தண்டு – தண்டன் = கோல்.

தள் – தட்டு, தட்டை = சோளப் பயிர் போன்றவற்றின் திரண்ட அடி.

தண்டு – தண்டி = பருமன் மிகுதி, தடி, வீணைக் கோடு, தடித்த மூங்கில் தாங்கும் பல்லக்கு. தண்டி – தண்டியம் = தாங்கும் கட்டை. தண்டி – தண்டிகை = பல்லக்கு. தண்டி – தண்டியல் = தண்டிகை.

தண்டித்தல் = பருத்தல், தடியால் அடித்து ஒறுத்தல், ஒறுத்தல்.

தண்டி – தடி. ஒ.நோ: பிண்டி – பிடி, கண்டி – கடி, மண்டி – மடி,

அண்டி – அடி. இது தொகுத்தல் திரிபு.

தடித்தல் = பருத்தல். தடியன் = பருத்தவன், பருத்த பூசணிக்காய்.

தடி – தடிப்பு – தடிப்பம். தடி – தடிம்பு – தடிம்பல்.

தண்டு – தண்டம் = தடி; படை. தண்டத்தலைவன் = படைத்தலைவன்.

தண்டி + அம் = தண்டம் (ஒறுப்பு). தண்டி + அனம் = தண்டனம் (ஒறுப்பு). தண்டி + அனை = தண்டனை (ஒறுப்பு).

தண்டா என்பது கல்வெட்டுக் குறிக்கும் மூவகைத் தண்டனைகளுள் ஒன்று.

தள் என்னும் வேர்ச்சொற்கே பருத்தற் பொருளுளது.

தள் – தளம் = கனம், திண்மை (சீவக. 719, உரை).

தளம் – தடம் = பருமை. "தடவும் கயவும் நளியும் பெருமை". (தொல். 803).

தடா = பருமை. (கல்லாடம், 8 : 15), பெரும்பானை (திவா.).

தடவுத்தாழி = பெருஞ்சாடி.

தள் – தாள் – தாளி = கூந்தற்பனை. தாளி = தாழி = பெரும்பானை.

தாள் – தாட்டி = பருமை, வலிமை.

'தழங்கு' என்னும் சொல் 'முழங்கு' என்பதுபோல் ஒலிப் பெருமையை உணர்த்தும்.

முன்னுதல் = கருதுதல், எண்ணுதல்.

முன்னம் = மனம் (திவா.). முன்னம் – முனம் – மனம்.

முன் – மன். மன் + திரம் = (மன்றிரம்) – மந்திரம்.

ஒ.நோ: மன் – மன்று – மந்து – மந்தை.

முன்று – முந்து, பின்று – பிந்து.

மந்திரம் = இன்னது ஆகவென்று உறுதியாய் எண்ணுதல், அங்ஙனம் எண்ணிச் சொல்லும் உரை.

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப"** (1434)

என்னுந் தொல்காப்பிய நூற்பாவையும்,

**"எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்"** (குறள். 666)

என்னும் திருக்குறளையும், திருமூலர் திருமந்திரத்தையும் மந்திரம் சொல்லிச் சவித்துவிட்டான், மந்திரத்தினால் வாயைக் கட்டிவிட்டான் என்னும் வழக்குகளையும்; மந்திரி, மந்திரம் (சூழ்வினை) என்னும் அரசியற் சொற்களையும், கூர்ந்து நோக்குக.

வாய்மொழி என்பது மந்திரத்தின் மறுபெயர். நாலாயிரத் தெய்வப் பனுவலில் நம்மாழ்வார் அருளிச்செய்த முதலாயிரம் திருவாய் மொழி யெனப் பெயர் பெற்றிருத்தல் காண்க.

ஆகவே, மந்திரம் என்னும் சொல் தமிழில் அரசியல், மதவியல், இலக்கணம் ஆகிய முத்துறைக்குரியதாகும். சேர, சோழ, பாண்டிய வரசுகள் வரலாற்றிற்கெட்டாத் தொன்மை வாய்ந்தவை. பண்டைநாளிற் கிழக்கத்திய நாடுகட்குத் தமிழ்நாட்டொடு அரசியல் தொடர்பும் வணிகத்தொடர்பும் இருந்ததினால், மந்திரி என்னும் சொல் மலேயா சீனம் முதலிய நாடுகளிலும் பரவியிருக்கின்றது. Mandarin என்னும் ஆங்கிலச்சொல் போர்த்துகீசிய வாயிலாய்ப் பிற்காலத்திற் புகுந்ததாகும். அதற்குமுன் மேலையாரியத்தில் இச் சொல் இல்லை.

## சமற்கிருத இரு படைகள்

1. அடிப்படை - வேத ஆரியம்
2. மேற்படை
   1) வட திரவிடம் (பிராகிருதம்)
   2) தென் திரவிடம் (தமிழொழிந்த பஞ்ச திரவிடம்)
   3) தமிழ்

பிராகிருதம் என்பது. வேதக் காலத்தில் வட இந்தியாவில் வழங்கிய வட்டார மொழிகள். பிராகிருதம் = முந்திச் செய்யப்பட்டது. சமற்கிருதம் என்பது, வேதமொழி யிலக்கண வமைதியைப் பெரும்பாலும் தழுவி, அம் மொழியொடு பிராகிருதத்தையும் திரவிடத்தையும் (தென் திரவிடம்) தமிழையும் கலந்து செய்த அரைச் செயற்கையான இலக்கிய நடைமொழி யாகும். சமற்கிருதம் = நன்றாய்ச் செய்யப்பட்டது.

பிராகிருதம் என்னும் சொல் பாகதம் என்றும், சமற்கிருதம் என்னும் சொல் சங்கதம், சனுக்கிரகம் அல்லது சானுக்கிரகம் என்றும், திரியும்.

பிராகிருதம் சமற்கிருதத்திற்கு முந்தியதென்பது அதன் பெயராலும் மொழியாலும் தெளிவாய்த் தெரியினும், சமற்கிருதத்தினின்று பிராகிருதம் திரிந்ததாகப் பேதைமை மிக்க பழங்குடி மக்களையும் ஆராய்ச்சியில்லாத அயலாரையும் வடமொழியாளர் மயக்கி வருகின்றனர். அதற்குக் கரணியம் (காரணம்), சமற்கிருதச் சொற்கள் திரிந்தும் திரியாமலும் பாகதத்தில் வழங்குவதே.

| எ-கா: | திரியாதவை | திரிந்தவை |
|---|---|---|
| | சஷ்டி (sashti) | சட்டி (satihi) |
| | தர்ம (dharma) | தம்ம (dhamma) |

திரிந்து வழங்குவன, தமிழில் வழங்கும் திட்டாந்தம் (த்ருஷ்டாந்த), சோத்தம் (ஸ்தோத்ர) என்னும் வடசொற்கள் போன்றவையே. அவை யாவும் அடிப்படைச் சொற்களல்ல. பிராகிருதத்திற்கும் அடிப்படை தமிழே ஆயினும், அது விளங்கித் தோன்றாதவாறு அத்துணை வட சொற்கள் அதிற் கலந்துள்ளன. வடசொற் கலப்பு தமிழில் இருப்பதைவிடத் திரவிடத்தில் மிகுதியாகவும், திரவிடத்தில் இருப்பதைவிடப் பாகதத்தில் மிகுதியாகவும், இருக்கும். வடக்கே செல்லச் செல்ல வடசொற் கலப்பு மிகும் என அறிக. வேத ஆரிய மொழி வழக்கற்றுப் போனதனால், அது பழங்குடி மொழிகளிற் கலந்து புல்லுருவியும் உண்ணியும் பேனும் போல் மேலுண்ணியாய் (Parasite) இருந்து வருகின்றது. ஆரியச் சொல் வேரூன்றியவுடன் அதற்கு நேரான தென்சொல் வழக்கற்றுப் போம். வழக்கற்ற சொல் இலக்கியத்தில் இடம் பெறாவிடின் மறைந்து மீளா நிலையடையும்.

பிராகிருதம் என்னும் வடதிரவிடத்திலுள்ள தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் ஈறு திரிந்தே வழங்கும்.

| எ-டு : | தமிழ் | பிராகிருதம் | தமிழ் | பிராகிருதம் |
|---|---|---|---|---|
| | அச்சன் | அஜ்ஜ | கட்டை | கட்ட |
| | அத்தை | அத்தா | கம்பம் | கம்ப |
| | ஏழகம் | ஏளக | நேயம் | நேயம் |
| | ஐயன் | அய்ய | வட்டம் | வட்ட |

பிராகிருத வழிப்பட்ட மொழிகளுள் ஒன்றான இந்தியின் அடிப்படையும் தமிழே.

| எ-டு : | தமிழ் | இந்தி |
|---|---|---|
| | அம்மா | மா |
| | ஆம் | ஹாங் |
| | இதோள் (இங்கே) | ஹிதர் |
| | உதோள் (உங்கே) | உதர் |
| | உம்பர் | ஊப்பர் |

| தமிழ் | இந்தி | தமிழ் | இந்தி |
|---|---|---|---|
| கால் (கருமை), காள் | காலா | நேரம் | தேர் |
| | | நோக்கு | தேக்(கு) |
| கொச்சு | குச்(சு) | படி (கீழிரு) | பைட் |
| செல் | சல்(ch) | படி (வாசி) | பட் |
| சிட்டு (சிறு) | சோட்டா (ch) | படு (பெரிய) | படா |
| தண் | தண்டா | பழம் | பல் |
| தத்தை | தோத்தா | புகல் | போல்(b) |
| தா | தே | வத்து(தெலுங்கு) | மத் |

சமற்கிருதத் திரவிடச் சொல் முந்திய கட்டுரையில் எடுத்துக் காட்டப்பட்டது.

## சமற்கிருதத் தமிழ்ச் சொற்கள்

சமற்கிருதச் சொற்களெல்லாம், கீழ்ப்படையும் மேற்படையும் பற்றி,

1) பழஞ்சொல்,

2) புதுச்சொல் என்றும்;

மொழி வகை பற்றி,

1) ஆரியச் சொல்

2) தமிழ்ச் சொல் என்றும்;

வேர்ப் பொருட் கரணியம் உண்மையும் இன்மையும் பற்றி,

1) கரணியக் குறி

2) இடுகுறி என்றும்;

இவ்விரு பாலாய்ப் பகுக்கப்படும்.

பழஞ்சொல் என்பன வேத ஆரியம். இடுகுறிகள் ‘ஆனந்த பைரவி’, ‘கலியாணி’, ‘சங்கராபரணம்’, ‘தன்னியாசி’, ‘நாத நாமக் கிரியை’, முதலிய பண்ணுப் பெயர்கள் போன்றவை.

தமிழ்ச் சொற்கள் பின்வருமாறு மூவகையாய் வகுக்கப் பெறும்.

(1) முழுச்சொல் : எ-டு : அகவு, தூது.

(2) வேர்ச்சொல் : எ-டு : பண் - பாணி (கை), மன் - மநு.

முன்னுதல் = கருதுதல். முன் - முன்னம் - முனம் - மனம்.

முன்-மன் (Man) = சிறப்பாகக் கருதும் உயிரினம்

மன்பதை = மக்கட் கூட்டம்.

(3) புனைசொல்: எ.டு: அனுமானம், கும்பகாரன், ஆதா,

அல்லுதல் = பொருந்துதல், பொருத்துதல், பின்னுதல், முடைதல்.

அல் – அன் – அனு = கூட.

மன் – மான் – மானி – மானம் = அளவு, படி, மதிப்பு, கருத்து, பெருமை.

மன்னுதல் = பொருந்துதல்.

மானுதல் = ஒத்தல்.

மானித்தல் = ஒப்பிட்டளத்தல் அல்லது பொருத்தியளத்தல்.

மான் – மா = ஓர் அளவு.

கும் – கும்பு – கும்பம் = குவிந்த கலம்

கடு – கடி – கரி – காரம் – காரன். காரம் = மிகுதி, வலிமை, உரிமை, காரன் = உரியவன்.

ஆ என்பது ஓர் எதிர்மறை யிடைச்சொல். தா = கொடு.

ஆதா = எடு.

அவமானம், அனுமானம், உபமானம், சன்மானம், நிர்மாணம், பிரமாணம், பரிமாணம் முதலிய பல சொற்கள் மானம் என்னும் தமிழ்ச் சொல்லை வருமொழியாகயும் ஈறாகவும் கொண்டவை.

## தமிழ்ச் சொல் திரிப்பு முறைகள்
## மூவகைத் திரிபு

### (1) தோன்றல்

பல தமிழ்ச் சொற்கள், முதலயலில் ரகரமிடைச் செருகியும் வகரமிடைச் செருகியும் வடசொல்லாக்கப்பட்டுள.

எ–டு : **ர** : தமிழ் – த்ரமிட – த்ரவிட,
திடம் – த்ருட,
தூணி – த்ரோண, தோணி – த்ரோண,
படி – ப்ரதி, படிமை – ப்ரதிமா,
பதிகம் – ப்ரதீக, பவளம் – ப்ரவாள,
புட்டம் – ப்ருஷ்ட, புடவி – ப்ருத்வீ,
மதங்கம் – ம்ருதங்கம், மெது – ம்ருது,
வட்டம் – வ்ருத்த.

**வ** : சுரம் – ஜ்வரம், சொம் (சொத்து) – ஸ்வாம், சொலி – ஜ்வலி
சுள் – சுர் – சுரம்
சுல் – சுள் – சுள்ளை – சூளை, சுல் – சுல்லி = அடுப்பு
சுல் – சொல் – சொலி. சொலித்தல் = எரிதல், ஒளிர்தல்.
சொல் = ஒளிரும் பொன் போன்ற நெல்.

## (2) திரிதல்

**உயிர்த்திரிபு (சில)**

ஆ-ஐ : வடை - வடா, மாலை - மாலா, கலை - கலா.
இ-ஈ : புரி - புரீ, குடில் - குட்டீர.
உ-அ : குடம் - கடம், சும் - சம் (அமைதியாயிரு).
எ-ஏ : பெட்டி - பேட்டீ.
ஏ-ஈ : பே (அஞ்சு) - பீ (bhi).
ஐ-அ : மலையம் - மலய. வளையம் - வலய.
ஒ-ஏ : ஒக்க - ஏக்க (ஒன்று.)

**மெய்த்திரிபு**

**க** : க-ஜ : பகு - பஜ்.
க-ஹ : பெருகு - ப்ருஹ் (bh)
க்க-க்ஷ : பக்கம் - பக்ஷ.
**ச** : ச-ch : சல் - சலி - chal.
ச-ஷ : பேசு - பாஷ் (bh)
ச-ஜ : முரசு - முரஜ.
ச-க : சீர்த்தி - கீர்த்தி
ச்ச-க்ஷ : அச்சு (axle) - அக்ஷ
ட : ட-ஷ : மாடை - மாஷ
மாடு = செல்வம், பொன்.
மாடு - மாடை = ஒரு பொற்காசு.
ட-ர : மடி - மரி - ம்ரு
ட-ண : படம் - பணம்
ட-த : கடம்பு - கடம்பம் - கதம்ப
ட்ட-த்த : நடம் - நட்டம் - ந்ருத்த
ட்ட-ஷ்ட்ட : விட்டை = விஷ்ட, முட்டி - முஷ்டி.
**த** : த-ச : திரு - ச்ரீ(ஶ்ரீ).
த-ஜ : விதை - பீஜ
த-ஸ : மாதம் - மாஸ
த்த-க்த : முத்து - முத்தம் - முக்த
த்த-த்ய : நித்தம் - நித்ய
நில் - நிற்றல் = நிற்கை, நிலை.
நிற்றலும் = நிலையாக, என்றும்.

"குணபத்திரன்றாள் நிற்றலும் வணங்கி" (சூடா. 7,76).

நிற்றல் - நித்தல் = என்றும்.

"நித்தல் பழி தூற்றப் பட்டிருந்து" (இறை. கள. 1, 14).

"நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே" (சிலப். உரைபெறு கட்டுரை, 4).

நித்தல் - நித்தலும் = என்றும்.

"உமை நித்தலுங் கை தொழுவேன்" (தேவா. 825, 1)

நித்தல் - நிச்சல் = என்றும்.

"நிச்சலேத்து நெல்வாயிலார் தொழ" (தேவா. 21, 3)

நிச்சல் - நிச்சலும் = என்றும்.

"நிச்சலும் விண்ணப்பஞ் செய்ய" (திவ். திருவாய் 1, 9,11)

நித்தல் - (நித்தன்) - நித்தம் = என்றும்.

"நித்தமணாளர் நிரம்பவழகியர்" (திருவாச. 17, 3).

நித்தக்கட்டளை, நித்தக்காய்ச்சல் என்பன உலகவழக்கு.

**ண** : ண - ஷ: உண்ணம் - உஷ்ண

உள் - ஒள் - ஒளி.

உள் - உண் - உண - உணங்கு -

உணக்கு.

உண் - உண்ணம் = வெப்பம். "உண்ண வண்ணத் தொளிநஞ்ச முண்டு" (தேவா. 510, 6).

**ந** : ந-ல. நோக்கு - லோக்(கு)

**ம** : ம-ஸ. மனம் - மனஸ்.

**ன** : ன-த : திருமான் - ஸ்ரீமத்

ன்ன-ர்ண : கன்னம் - கர்ண

கல் - கன் - கன்னம் = துளையுள்ள காது, குழிவிழும் அலகு

**ய** : ய-ச: காய் - காச்.

காய்தல்=எரிதல், சுடுதல், ஒளிர்தல் விளங்குதல்.

ய-த : தயிர் - ததி (dh)

**ல** : ல-த : சீலம் - சீத

ல-ர : கலுழன் - கருட (செம்மையும் வெண்மையும் கலந்த பருந்து வகை)

கல் - கலுழ் - கலுழன். கலுழ்தல் = கலத்தல்.

ல-ன : நாலா - நானா

**வ** : வ-ப : உவமை - உபமா

வ-க : சொலவம் - சுலோக

**ழ** : ழ-ட : நாழி - நாடி

ழ-ஷ : மேழம் - மேஷ, மேழகம் - மேஷக.

முழுத்தல் = திரள்தல். முழு - முழா - மிழா - மேழம் - மேழகம் - ஏழகம் = செம்மறியாட்டுக் கடா, ஆடு.

ழ-ல : பழம் - பலம்

**ள** : ள-ஷ : சுள் - சுஷ்.

ள-ல : வளையம் - வலய

சமற்கிருத வல்லின வொலிகளுள் ஒவ்வொன்றிற்கும், கடுத்தும் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் ஒலிக்கும் நந்நான்கு வகையிருப்பதால், சில தமிழ் வல்லெழுத்துகள் வடமொழியில் பல் வேறெழுத்துகளாய்த் திரிகின்றன.

எ-டு : சாய்: சாய் - சா - சாவு - சவம் - சவ;
சாய் - சய் - சயனம்;
சாயுங்காலம் - சாயங்(காலம்) - ஸாயம்;
சாய் - சாயை - சாயா (ch).

பகு: பகு - பஜ் (bh), பாகம் - பாக (bh); பக்கம் - பக்ஷ (p).

## (3) கெடுதல்

பட்டம் - பட்ட

### அறுவகை வேறுபாடு

**வலித்தல்** : அம்பு - அப்பு.
அம் = நீர். அம் - ஆம் = நீர். அம் - அம்பு = நீர்.

**மெலித்தல்** : மத்து - மந்த (Mantha).

**நீட்டல்** : குமரி - குமாரி.

**குறுக்கல்** : வாரணன் - வருண.
வார் - வாரணம் = கடல். வாரணன் = கடல் தெய்வம்.

**விரித்தல்** : மாணவன் - மாணவக

**தொகுத்தல்** : அருந்து - அத்.

### முக்குறை

**முதற்குறை** : அரங்கம் – ரங்க

**இடைக்குறை**: மந்திரம் – மந்த்ர

**கடைக்குறை** : சலி – சல்

### மும்மிகை

**முதன்மிகை** : தூண் – தூணம் – ஸ்தூண.

**இடைமிகை** : அப்பம் – அபூப

**கடைமிகை** : உம்பர் – உபரி, மயில் – மயூர.

### மூவொட்டுகள்

**முன்னொட்டு** : ஆயிரம் – அஸ்ர – ஸகஸ்ர.

**இடையொட்டு** : –

**பின்னொட்டு** : வடவை – வடவாமுக

**முறைமாற்று நீட்சி** : அரசன் – ராஜன்
உருவம் – ரூப (p)

**மரூஉ** : சாயுங்காலம் – சாயம்

**சிதைவு** : புடலங்காய் – பட்டோலிக்கா
புழல் = உட்டுளை. புழல் – புடல் = புழலான காய். புடல் – புடலை.

**மொழி பெயர்ப்பு** : புள் – சகுன, நிலை – ஸ்தாய்.
சகுன = பறவை, ஸ்தா = நில்.

### ஏமாற்று வகைகள்

ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களும் திரவிடச் சொற்களுமான தென்சொற்கள் வட மொழியிலிருக்கவும், அவற்றையெல்லாம் வட சொல்லெனக் காட்ட வேண்டிப் பல்வேறு ஏமாற்று முறைகளைக் கையாண்டு வருகின்றனர் வட நூலார்.

அம் முறைகளாவன :

**(1) தவற்றுப் பிரிப்பு**

| எ–டு : **தமிழ்** | **வடமொழி** |
|---|---|
| உவணம் = சுவணம் | சு + பர்ண |
| அகவு | ஆ + ஹ்வே |
| அலத்தகம் | அ + லக்தக |
| நிலை – நிலையம் | நி + லய |

**(2) தவற்றுப் பொருட் கரணியங் கூறல்**

எ-டு :

| சொல் | உண்மைக் கரணியம் (தமிழ்) | தவற்றுக் கரணியம் (வடமொழி) |
|---|---|---|
| அரசன் | அரணானவன், பாதுகாப்பவன் (அரவு = அரசு) | விளங்குபவன் (rang. ranj) |
| குமரன் | திரண்ட இளைஞன் (கும் - குமர் - குமரன்) | எளிதாய் இறப்பவன் (கு + மார); விரும்பப்படுபவன் (கம்). |
| சிவன் | செந்நிறத்தான் (சிவ - சிவம் - சிவன்) | எல்லாவுயிர்களும் இருத் தற்கிடமானவன் (சீ), நன்மைசெய்வன் (ச்வி). |
| பல்லி | (சுவரிலும் மரத்திலும் ஒட்டிக்கொண்டிருப்பது. (புல் - புல்லி - பல்லி) | சொல்லுவது (பல்.) |
| பாண்டியன் | பழையன் (பண்டு) | பாண்டவன் (பாண்டு). |
| மீன் - மீனம் | மின்னுவது (மின்) | இறப்பது, திரிவது (மீ) |
| வடவை | வடமுனை நெருப்பு (வடம்) | பெட்டைக்குதிரை முகத் தில் தோன்றுவது (வடவா முகம்). |

குறிப்பு : சிவம் என்னும் சொற்கு நன்மைப் பொருள் தமிழிலும் உண்டு. செம்மை = நன்மை.

**(3) தவறாக மூலங்காட்டல்**

எ-டு :

| சொல் | உண்மையான மூலம் | தவறான மூலம் |
|---|---|---|
| கமலை-கவலை | நீரிறைக்கும் ஆலை, பயிர்த்தொழில் ஆலை. (கம்+ஆலை). | ஆவை (பசுவை)ப் பூட்டியிறைக்கும் ஏற்றம் (கபிலை). |

அவிழ் = அவிந்த சோற்றுப் பருக்கை, சோறு.

அவிழ் - அவிழ்து - அமிர்து - அமுது = சோறு.

மருவுதல் = தழுவுதல், மரு - மார் = நெஞ்சு, முலை. மார் - மார்வு - மார்பு - மார்பம்.

மரு - மருமம் - மம்மம் - அம்மம் = முலை, முலைப்பால்.

அம்மம் - அமுது - அமிழ்து - அமிழ்தம் = பால்.

அமிழ்து - அமிர்து - அமிர்தம் = பால்.

சோறு என்று பொருள்படும் அமுது என்னும் தமிழ்ச் சொற்கும், பால் என்று பொருள்படும் அமுது என்னும் தமிழ்ச் சொற்கும், அம்ருத என்னும் வட சொல்லை மூலமாகக் காட்டுவது முற்றுந் தவறாம்.

## (4) தவறாகத் தொடர்புபடுத்தல்

பல தமிழ்ச் சொற்கள், ஒருமருங்கு வடிவொப்புமைபற்றியும் பற்றாதும், வட சொற்களுடன் தொடர்புபடுத்தப்படுகின்றன.

எ-டு :

| **தமிழ்ச்சொல்** | **வடசொல்** |
|---|---|
| அச்சன் (அத்தன்) = தந்தை | ஆர்ய = ஆரியவரணத்தான் |
| ஆசிரியன் (ஆசு + இரியன்) = குற்றத்தைப் போக்குபவன். | ஆச்சார்ய (ஆ + சார) = ஒழுக்கத்தைக் கற்பிப்பவன். |
| ஐயன் (ஐ + அன்) = பெரியோன் | ஆர்ய = ஆரிய வரணத்தான் |
| கம்பம் (கம்பு + அம்) = உயரமான பெரிய கம்பு | ஸ்தம்ப (ஸ்தம்ப்) = ஊன்றிய தூண். |
| கேரளம் (சேர - சேரலம் - கேரளம்) = சேர நாடு, மலையாள நாடு | நாளிகேரம் (= தென்னை) மிகுந்திருக்கும் நாடு. |
| பார்ப்பான் = நூல்களைப் பார்ப்பவன் | பிராமணன் = பிரமத்தை அல்லது பிராமணத்தை அறிந்தவன். |

குறிப்பு: பார்ப்பனன் என்னும் வடிவில் 'அனன்' (அன் + அன்) என்பது ஈறு. வினையாலணையும் பெயர்க்கு மூலமான வினைமுற்று 'ஆன்' ஈறு போன்றே 'அனன்' ஈறு கொள்ளும்.

எ-டு :

| இ.கா. | நி.கா. | எ.கா. |
|---|---|---|
| வந்தனன் | வருகின்றனன் | வருவனன் |
| வந்தனள் | வருகின்றனள் | வருவனள் |
| வந்தனர் | வருகின்றனர் | வருவனர் |
| வந்தன்று | – | – |
| வந்தன | வருகின்றன | வருவன |

வந்தன்று என்பது வந்தனது என்பதன் திரிபாம்.

## (5) தலைகீழ்த் திரிப்பு

| **தமிழ்** > | **பிராகிருதம்** > | **சமற்கிருதம்** |
|---|---|---|
| வட்டம் (வள்) | வட்ட | வ்ருத்த |
| மேழகம் - ஏழகம். | ஏளக | ஏலக |
| நேயம் (நெய்) | நேயம் | ஸ்நேக (ஸ்நிக்) |
| மாதம் (மதி) | – | மாஸ |

இவற்றைத் தலைகீழாகத் திரிப்பது வடநூலார் இயல்பு.

### (6) வலித்துரைத்தல்

இருமொழிகள் குறுகிய காலத்தில் அடுத்து வழங்கினும், ஒன்றினின்று இன்னொன்று ஒரு சில சொற்களையேனும் கொள்ளாதிராது. வடமொழி தென்மொழியொடு தொடர்புகொண்டு மூவாயிரம் ஆண்டிற்கு மேலாயினும், அதிற் கலந்துள்ள ஆயிரக்கணக்கான தென் சொற்களுள் ஒன்றையேனும் தென் சொல்லென ஒப்புக் கொள்ளாது வட சொல்லேயென வலிப்பது, இன்றும் வட மொழியாளர் இயல்பாயிருந்து வருகின்றது. வட மொழியிலுள்ள தென் சொற்கள் ஐந்திலிரண்டு பகுதியாகும்.

### (7) தேவமொழியெனல்

வேத ஆரியர், பழங்குடி மக்களான பண்டைத் தமிழரின் பேதைமையையும் மதப்பித்தையும் அளவிறந்து பயன்படுத்தி, தம்மை நிலத்தேவர் (பூசுரர்) என்றும், தம் முன்னோர் மொழியான வேத ஆரியத்தையும் அதன் வழிப்பட்ட சமற்கிருதத்தையும் தேவமொழியென்றும் சொல்லித் தமிழர் அதை முற்றும் நம்புமாறு செய்துவிட்டதனால், தமிழில் அளவிறந்த வடசொற்கள் வேண்டாது கலக்கவும், அதனால் அது தன் வளங் குன்றித் தூய்மையிழக்கவும், வழிபாட்டிற்குத் தகாததென்று தள்ளப்படவும், இவ் விருபதாம் நூற்றாண்டிலும் தமிழர் தம்மைத் தாழ்த்திக் கொள்ளவும், நேர்ந்ததென அறிக.

**- "தென்மொழி" செப்பிடெம்பர் 1963**

# 14
# சமற்கிருதவாக்கம் – எழுத்து

## தமிழெழுத்து

எழுத்து, ஒலியும் வரியும் என இருவடிவுடையது. இவற்றுள் உண்மை யானது ஒலியே. ஒலியே எழுதப்படுதலின் எழுத்தெனப்பட்டது. உள்ளத்தி லெழும் கருத்துகளை நேரடியாய் அறிவிக்கும் குறி ஒலி. செவிப்புலனான ஒலியைக் கட்புலனாக்கும் குறியே வரி.

முழுகிப்போன குமரிக்கண்டத்தில், கி. மு. ஐம்பதினாயிரம் ஆண்டு கட்கு முன்பே தமிழ் தானே தோன்றி,

1) அசை நிலை (Monosyllabic Stage),

2) கூட்டு நிலை (Compounding Stage),

3) பகு சொன்னிலை (Inflexional Stage),

4) கொளுவு நிலை (Agglutinative Stage),

என்னும் நால்வகை மொழி நிலையுங் கடந்து முழு வளர்ச்சியடைந்து, கி.மு. பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்பே எழுத்தும் இலக்கியமும் இலக்கணமும் நிரம்பப்பெற்று, முதன் முதலாகத் தென்மதுரைத் தலைக்கழகத்தில் ஆராயப்பெற்றது.

தமிழொலிகள் பெரும்பாலும் இயற்கையானவை; எளியவை; எல்லா மொழிகட்கும் பொதுவானவை. பொதுவாக, எழுத்தொலிகள் தெற்கே செல்லச் செல்லத் தொகையிலும் வன்மையிலும் குறைந்தும், வடக்கே செல்லச் செல்ல அவற்றில் மிகுந்தும் உள்ளன. தமிழ் வல்லின வொலிகள் வடமொழி வல்லின வொலிகளை நோக்க மெல்லியவை. இவற்றுள், முன்னவை இரட்டித்தாலன்றிப் பின்னவற்றை வன்மையில் ஒவ்வா. இந் நிலைமையை இற்றைத் தென்பாண்டி நாட்டுப்புறப் பழங்குடி மக்களின் நாவில்தான் செவ்வையாகக் காணமுடியும்.

1) படவெழுத்து (Pictogram or Hieroglyph),

2) கருத்தெழுத்து (Ideogram),

3) அசையெழுத்து (Syllabary),

4) ஒலியெழுத்து (Phonemic Character),

என்னும் நால்வகை வரிநிலையும் முறையே அடைந்த தமிழ் நெடுங் கணக்கு, கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இற்றை நிலையிலேயே யிருந்த தென்பது,

> **"தொல்லை வடிவின எல்லா வெழுத்தும் ஆண்**
> **டெய்தும் எகர ஒகரமெய் புள்ளி"** (98)

என்னும் நன்னூல் நூற்பாவாலும்; கி.மு. 6ஆம் அல்லது 7ஆம் நூற்றாண்டிலும், உயிரும் உயிர் மெய்யுமாகிய எகர ஒகரங்களும் குற்றியலிகர குற்றியலுகரங்களும் புள்ளி பெறுதலும், உட்புள்ளிபெற்ற பகர வடிவே மகர வடிவாதலும், தவிர, மற்றையவெல்லாம் இற்றையவே யென்பது தொல்காப்பியத்தாலும், அறியக்கிடக்கின்றன.

எழுத்து எழுதப்படும் கருவிக்கேற்ப வேறுபட்டிருத்தல் வேண்டுமாதலால், எழுத்தாணி கொண்டு ஏட்டில் எழுதுதற்கு ஒரு வரைவெழுத்து முறையும், உளி கொண்டு செம்பிலும் கல்லிலும் செதுக்கற்கு ஒரு வெட்டெழுத்து முறையும், தொன்று தொட்டுக் கையாளப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது. தமிழின் தொன்மையையும் தலைமையையும் ஆய்ந்தறியும் மதுகையும் நடு நிலைமையும் இல்லா அயலார், வரைவெழுத்தும் வெட்டெழுத்தாகிய வட்டெழுத்தும் ஒன்றே யெனப் பிறழவுணர்ந்துவிட்டனர்.

## ஆரியவொலித்திரிபு

தமிழொலிகள், முதலாவது, தென் திரவிடமாகிய தெலுங்கில் வன்மைபெற்று வட திரவிடத்தில் வளர்ச்சியடைந்து, வட மேலையாரிய (ஐரோப்பிய) மொழிகளில் இயற்கையாரிய வடிவுற்று, இறுதியில் கீழையாரியமாகிய சமற்கிருதத்தில் பெரும்பாலும் செயற்கை வடிவு கொண்டுள்ளன. இதை,

> **"செந்திறத்த தமிழோசை வடசொல் லாகி"**

என்னும் திருமங்கையாழ்வார் திருநெடுத்தாண்டகத் தொடர் இரட்டுறல் முறையிற் குறிப்பதாகக் கொள்ளலாம்.

என்றும் எங்கும் பிஞ்சு முற்றிக் காயாகுமேயன்றிக் காய் இளந்து பிஞ்சாகாது. அதுபோல், இயற்கையான மொழி வளர்ச்சியில், மெல்லொலி வலித்து வல்லொலியாகுமே யன்றி வல்லொலி மெலிந்து மெல்லொலி யாகாது. குழந்தை வாயில் வல்லொலி பிறவாததுபோல், முந்தியல் மாந்தன் வாயிலும் வல்லொலி பிறப்பதில்லை. பழந்தமிழன் சூடு என்று சொன்ன சொல்லை இற்றைத் தமிழன் கொச்சை வழக்கில் ஜூடு என்று சொல்வதையும், triplus என்ற இலத்தீன் சொல்லினின்று treble என்னும் ஆங்கிலச்சொல் திரிந்திருப்பதையும் நோக்குக. kna என்ற தியூத்தானியச் சொல் gno என்று இலத்தீனில் திரிந்ததும் அதுவே.

இற்றை நிலைப்படி, வல்லின எழுதொலிகளையெல்லாம்,

(1) கடுப்பொலி (voiceless unaspirate),

(2) உரப்பொலி (voiceless aspirate),

(3) எடுப்பொலி (voiced unaspirate),

(4) கனைப்பொலி (voiced aspirate),

என நால்வகையாக வகுக்கலாம். இவற்றுள், தமிழில் இருப்பவையெல்லாம் மென்கடுப்பொலிகளும் மெல்லொலிகளுமே. இவற்றுள், பின்னவை மென்கடுப்பொலிகள் சொல்லிடை கடை தனித்தும் மெல்லினத்தின் பின்பும் வந்தாலன்றி நிகழா. இலத்தீனில், மூச்சொலி சேர்ந்த புணர்மெய்களே இல்லை; k-யும் s-உம் சேர்ந்த x (ks) என்னும் புணர்மெய்தான் உண்டு. கிரேக்கத்தில், th, ph, kh என்னும் மூச்சொலிப் புணர்மெய்கள் மூன்றும், ks, ps என்ற மூச்சொலியில்லாப் புணர்மெய்கள் இரண்டும், உள்ளன. இவ்விரு மொழிக்கும் பொதுவாக b, d, g, z என்னும் நாலெடுப்பொலிகள் உள. எழுத்துப் புணர்ச்சியால் ஏற்படும் ஜகர வொலியும் (j) கிரேக்கத்திற்குண்டு. சமற்கிருதத்திலோ வல்லின வொலிகள் ஐந்திற்கும், கடுப்பொலி எடுப்பொலி யாகிய இருவடிவிலும், மூச்சொலியைச் சேர்த்தும், செயற்கை முறையில் இருபது மெய்களைப் பிறப்பித்திருக்கின்றனர். இவற்றுள், மூச்சொலி சேர்ந்த பத்தும் உண்மையில் புணர் மெய்களே (consonantal diphthongs). க்ஷ (க்+ஷ), ஜ்ஞ முதலிய புணர் மெய்களும் கூட்டு மெய்களும் ஏராளம்.

## வேத ஆரியர்க் கெழுத்தின்மை

வேத ஆரியர் இந்தியாவிற்குள் புகுந்தபோது, அவர்க்கு எழுத்து மில்லை; இலக்கியமுமில்லை. வேதத்தில் மேனாட்டுப் பொருள்களைப் பற்றிய குறிப்பிருப்பினும், அஃது எழுதப்பட்டது வட இந்தியாவிலேயே. மேலையாரிய மொழிகளிலெல்லாம் எகர ஒகரக் குறிலும் நெடிலும் உள்ளன. கீழையாரியத்திலோ வட திரவிடத்திற் போன்றே எகர ஒகரக் குறிலில்லை. ஆரியவேதம் முதலில் ஒன்றாயிருந்து, பின்பு மூன்றாகி, இறுதியில் நான்கா யிற்று. சமற்கிருதம் தோன்றும் வரையும் கீழையாரியத்திற்கு எழுத்தில்லை. ஆரிய வேதம் நீண்டகாலமாக ஆசிரியனால் வாய்ப்பாடமாக ஓதப்பெற்று மாணவரால் செவி வாயிலாகவே கற்கப்பட்டு வந்ததனால், அதற்கு ஆரியத்தில் **சுருதி** யென்றும், தமிழில் **எழுதாக்கிளவி** என்றும் பெயர் எழுந்தன.

ச்ரு = கேள். ச்ருதி = கேள்வி. ச்ரு என்பது செவியுறு என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபேயென வறிக. இங்ஙனம் பல வடசொற்கள் தூய ஆரியமாயினும், தமிழ் வேர்களினின்றே திரிந்தவையென்பது, என் வடமொழி வரலாறு என்னும் நூலில் விரிவாக விளக்கப்பெறும்.

## தமிழ் முறையைப் பின்பற்றி யெழுந்த ஆரிய நெடுங்கணக்கு

வேத ஆரியர் கி. மு. 1500 போல் தென்னாடு வந்து தமிழரொடு தொடர்பு கொண்ட பின்னரே சமற்கிருதம் தோன்றிற்று. அன்று ஆயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களும் தென் சொற்களும் கடன் கொள்ளப் பட்டதுடன், தமிழ் நெடுங்கணக்கைப் பின்பற்றி ஆரிய நெடுங்கணக்கும் அமைக்கப்பட்டது.

**சமற்கிருத நெடுங்கணக்கு தமிழ் முறையைப் பின்பற்றிய தென்பதற்குச் சான்றுகள்** :

### 1) முறை

மேலையாரிய மொழிகளுள் ஒன்றிற்கேனும் நெடுங்கணக்கில் முறையில்லை. உயிரும் மெய்யும் வேறுபாடின்றிக் கலந்து கிடக்கின்றன. தமிழிலோ, உயிர் முன்னும் மெய் பின்னும், உயிருள் குறில் முன்னும் நெடில் பின்னும், குறிலுள் அகரம் முன்னும் இகரம் இடையும் உகரம் பின்னும், அதன்பின் எகரமும் இறுதியில் ஒகரமும், ஏகாரத்தையடுத்து ஐகாரமும் ஓகாரத்தையடுத்து ஔகாரமும்;

மெய்யுள் இனவலியும் மெலியுமாக இவ்விரண்டாய் வல்லினம் முன்னும் மெல்லினம் பின்னும், இடையினம் அவற்றின் பின்னும், பிந்தி யெழுந்த நாலெழுத்தும் இறுதியிலும்; வல்லினம் **க ச ட த ப** என்ற முறையிலும், இடையினம் **ய ர ல வ** என்ற முறையிலும்,

ககரத்திற்கினமான நுண்ணொலி (ஆய்தம்) ககரத்தையடுத்து முன்னும், அடித்தொண்டை முதல் இதழ் வரைப்பட்ட எழுத்துப் பிறப்பியல் முறைபற்றி ஒழுங்காக வைக்கப்பட்டுள்ளன. உலகில் முதன் முதல் இம் முறையில் எழுத்துகள் வைக்கப்பட்ட நெடுங்கணக்குடைய மொழி தமிழே. தமிழில், எழுத்திலக்கணம் பன்னிரண்டனுள் முறை என்பதும் ஒன்று.

### 2) புணர்ச்சி

எழுத்துப் புணர்ச்சியும் மேலையாரிய மொழிகட்கில்லை. இதனால், உயிர் மெய்யெழுத்துமில்லை.

### 3) ஒப்பு

தமிழாய்தத்தை ஒருபுடை யொத்த வடமொழி விசர்க்கம். உயிருக்கும் மெய்க்கும் இடையில் வைக்கப்பட்டிருப்பது ஊன்றி நோக்கத்தக்கது.

### 4) தொன்மை

தமிழ் நெடுங்கணக்கு கி. மு. பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்பே குமரிக் கண்டத்தில் தோன்றியது. வேத ஆரியர் இந்தியாவிற்கு வந்த காலம் கி.மு. 2000-1500.

### 5) ஒலிநூற்புலமை

தமிழ் நெடுங்கணக்கில் தனியெழுத் தொலிகளே இடம் பெற்றுள்ளன. சமற்கிருத நெடுங்கணக்கில், அசைகளும் புணர்மெய்களும் சேர்க்கப்பட்டுள்ளன; உயிர் மெய்கள் உயிர்களாகக் காட்டப்பட்டுள்ளன.

ரு, லு முதலிய எழுத்துகள் குற்றியலுகரம் சேர்ந்த ரகர லகர மெய்கள்; அம், அ : என்பவை அகரத்தொடு கூடிய மூக்கொலி விசர்க்கங்கள்; மூக்கொலி சேர்ந்த வல்லினம் புணர் மெய்கள்.

### 6) வருடொலிகள் (Linguals or Cerebrals).

ட, ண என்னும் வருடொலிகள் ஆரியத்திற்குரியவையல்ல; தமிழுக்கும் திரவிடத்திற்கும் திரவிட அடிப்படையைக் கொண்ட வடநாட்டு மொழிகட்குமே யுரியவை.

கால்டுவெல் ஐயர் காலத்தில் தொல்காப்பியமும் கழக நூல்களும் கழக மருவிய நூல்களும் மறையுண்டு கிடந்தமையாலும், குமரிக்கண்ட உண்மை அறியப்படாதிருந்ததனாலும், தனித்தமிழ் உணர்ச்சி தோன்றா திருந்ததனாலும், தமிழ் நெடுங்கணக்கு வடமொழி நெடுங் கணக்கைத் தழுவிய தென்று அவர் வரைந்திருப்பது இற்றைக்குச் செல்லாதென்று கூறி விடுக்க.

## சமற்கிருத வரி வடிவு வகை :

சமற்கிருத வரி வடிவு, கிரந்தம், தேவநாகரி என இரு வகைப்படும். இவற்றுள் முந்தியது கிரந்தம். வேத ஆரியர் தமிழொடு தொடர்பு கொண்ட பின், தமிழ் வரிவடிவைப் பின்பற்றிச் சமற்கிருதத்திற்கு அமைத்துக் கொண்டதே கிரந்தம். கிரந்தம் ஏற்பட்ட பின்பும், வேதம் நீண்ட காலம் எழுதப்படாமலே யிருந்து வந்தது. இதை,

> **"ஆற்ற லழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்**
> **போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார் – ஏட்டெழுதி**
> **வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்**
> **சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று."**

என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் உணர்த்தும்.

தென்னாட்டுக் கிரந்தத்திற்குப்பின் வடநாட்டிலெழுந்த வடமொழி வரிவகை தேவநாகரி நகரத்தில் அல்லது நாகரிகமாகத் தோன்றியதென்பது பற்றியும், தேவ மொழிக்குரிய தென்பது பற்றியும், தேவநாகரி எனப்பட்டது. அதைப்பற்றி மானியர் உல்லியம்சு என்பவர்தம் சமற்கிருத அகர முதலியின் முன்னுரையில் 28ஆம் பக்க அடிக் குறிப்பில் பின் வருமாறு குறிக்கப்பட் டுள்ளது.

"சமற்கிருதக் கல்வெட்டுகளுள் மிகப் பழமையானதாக அறியப்பட்டது கத்தியவாரில் சுனாகரில் ஒரு பாறை மேலுளது. அஃது உருத்திர தாமன் கல்வெட்டென்னும் பெயர் கொண்டது. அது கி.பி. 2ஆம் நூற்றாண்டினது. அது நாகரியில் இல்லை; பழைய கல்வெட்டெழுத்துகளில் உள்ளது. ஏறத்தாழக் கி.பி. 400ஆம் ஆண்டினதான பவர் கையெழுத்துப்படி நாகரி நோக்கிய பெரு முன்னேற்றத்தைக் காட்ட, கி.பி. சுமார் 750ஆம் ஆண்டினதான தந்திதுருக்கன் கல்வெட்டு இற்றை வழக்கிலுள்ள நாகரியை மிகவும் ஒத்த ஒரு நிறைவான குறித்தொகுதியை காட்டுவதாயுள்ளது. எனினும், உண்மையான தற்கால நாகரியில் உள்ள முதற் கையெழுத்துப்படி, கி.பி. 11ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதன்றென்பது கவனிக்கத்தக்கது."

தென்னாட்டுக் கிரந்தமும் வடநாட்டுத் தேவநாகரியும் முதற்கண் உலகியற் கலை நூல்கட்கே பயன்படுத்தப்பட்டு வந்தன. இன்று மறை நூல்களும் அவற்றில் எழுதப்பெறுகின்றன.

ஆழ ஊன்றி நோக்கும் நடுநிலை ஆய்வாளர்க்கு, கிரந்தமும் தேவநாகரியும் தமிழெழுத்தினின்றே தோன்றினவென்னும் உண்மை, முறையே, வெளிப்படையாகவும் குறிப்பாகவும் தோன்றாமற் போகாது.

15

# சமற்கிருதவாக்கம் - இலக்கணம்

இலக்கணம் இலக்கியம் என்னும் இரண்டனுள் முந்தியது இலக்கியமே.

> **"இலக்கிய மின்றி இலக்கண மின்றே**
> **எள்ளின் றாகில் எண்ணெயு மின்றே**
> **எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல**
> **இலக்கி யத்தினின் றெடுபடும் இலக்கணம்"**

என்பது பேரகத்தியத்தைச் சேர்ந்ததாகக் காட்டப்பெறும் ஒரு பழைய மேற்கோள் நூற்பா.

இலக்கியம் என்னும் சொல்லில், 'இலக்கு' முதனிலை; 'இயம்' ஈறு. இலக்கு = குறி, குறிக்கோள். ஒரு குறித்த இடத்தை இலக்கு என்பர் நெல்லை நாட்டார். வாழ்க்கையின் சிறந்த குறிக்கோளை எடுத்துக்காட்டும் நூலே இலக்கியம்.

> **"அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம்**
> **உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்**
> **ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்"** (சிலப். பதிகம். )

நாட்டி, அரசியல் பிழையாமை, கற்புடையாளைப் போற்றுதல், தீ வினை செய்யாமை ஆகிய முக்குறிக்கோளை எடுத்துக் காட்டுவதே சிலப்பதிகாரத்தின் நோக்கமாயிருத்தல் காண்க.

ஆகவே, இலக்கைக் காட்டுவது இலக்கியம். அதுவும், சிறந்த அறிஞனால் செய்யப் பெறுவதால், அதன் நடையும் சிறந்ததாய் இருத்தல் வேண்டும். ஒரு மொழியில் உயர்ந்தோர் கையாளும் நடையைப் பிறரும் பின்பற்றுமாறு எடுத்துக்காட்டுவதே இலக்கண நூலின் நோக்கம். ஆகவே, இலக்கணமும் ஒன்றைக் குறியாக அல்லது குறிக்கோளாகக் கொண்டதே. இலக்கணம் என்னும் சொல்லில், 'இலக்கு' முதனிலை; 'அணம்' ஈறு.

> **"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்**
> **கொள்ளும் என்ப *குறி*யறிந் தோரே"** (993)

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், இலக்கணம் குறி என்றே பெயர் பெற்றிருத்தலை நோக்குக. இலக்கணம் இலக்கியம் இரண்டும் மொழி

வாயிலாகவே அறிவிக்கப் பெறினும், முன்னது பண்பு என்றும், பின்னது பண்பி என்றும் வேறுபாடறிதல் வேண்டும்.

இலக்கு, இலக்கியம், இலக்கணம் என்னும் தென்சொற்கள் வடமொழியில், முறையே, லக்ஷ், லக்ஷ்ய, லக்ஷண என நிற்கும். லக்ஷண என்னும் வடசொல், குறி, இயல், இயல் வரையறை என்னும் பொருள்களைப் பொதுப் படக் குறிக்குமேயன்றி, இலக்கணம் (grammar) என்னும் பொருளைக் குறிக்காது. அங்ஙனமே, லக்ஷ்ய என்னும் வடசொல்லும், குறிப்பொருள், இயல் விளக்கப் பொருள், எடுத்துக்காட்டு என்னும் பொருள்களைப் பொதுப் படக் குறிக்குமேயன்றி, இலக்கியம் (literature) என்னும் பொருளைத் தராது. இலக்கணத்தை வியாகரணம் (வ்யாகரண) என்றும், இலக்கியத்தை சாகித் தியம் (ஸாஹித்ய) என்றும் சொல்வர் வடநூலார். வியாகரணம் என்னும் சொல் கூறுபடுப்பது என்னும் பொருளது. சாகித்தியம் என்பது தொடர்பு என்னும் பொருளது.

தமிழில், இலக்கணத்திற்கு அணங்கம் என்னும் பெயரும், இலக்கியத் திற்கு அணங்கியம் என்னும் பெயரும் உண்டு. ஆயின், இவை வழக்கில் இல்லை. தொன்றுதொட்டு இலக்கணம், இலக்கியம் என்னும் சொற்களே இருவகை வழக்கிலும் இருந்துவருகின்றன. அணங்குதல் = ஒலித்தல். அணங்கு = ஒலி, எழுத்து, சொல். அணங்கம் = இலக்கணம் (சொல் லிலக்கணம், மொழியிலக்கணம்), அணங்கத்தையுடையது அணங்கியம்.

ஒ.நோ: Gk. gramma (letter), E. grammar.
L. littera (letter), E. literature.

இலக்கணம் இலக்கியம் என்னும் சொற்கள், முறையே இயல், இயலது என்னும் பொருளில் சிறப்பாக மொழிபற்றியே எழுந்தனவேனும், சிறுபான்மை பிறபொருள் பற்றியும் ஆளப்பெறும்.

இலக்கியம் என்பது, ஒரு சிறந்த இலக்கணத்தை ஒரு பொருளின் வாயிலாய் எடுத்துக்காட்டுவது, அல்லது விளங்க வைப்பது. எடுத்துக் காட்டைக் குறிக்கும் `illustration' என்னும் ஆங்கிலச்சொல், ஒளியைக் குறிக்கும் சொல்லினின்று தோன்றியதாகும். Illustrate = L.il + lustrare (illumine). இலக்குதல் என்னும் வினைச்சொல், குறித்தல் என்னும் வினைச்சொற்போல் எழுதுதலைக் குறித்தலோடு, இலங்குதல் என்பதன் பிறவினையாய் விளங்கச் செய்தல் என்றும் பொருள் தருகின்றது. எழுத்து ஒலியின் குறி.

இலக்குதல் = வரைதல். "இரேகை யிலக்குக" (சைவசமய நெறி, பொது. 274).

இலங்கு - இலக்கு (பி.வி.).

உகரவீற்றுச் சொற்கள் இகரவீற்றவாய்த் திரிதல் இயல்பு.

| எ-டு : | **பெயர்** | **வினை** | **உரி** |
|---|---|---|---|
| | குச்சு - குச்சி | நீடு - நீடி | கடு - கடி |
| | பஞ்சு - பஞ்சி | நீட்டு - நீட்டி | |

இம் முறையில் இலக்கு என்பது இலக்கி என்றும் ஆகும்.

இலக்கித்தல் = வரைதல், எழுதுதல். "இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக் கித்து" (சீவக. 180)

இலங்கு என்பது இலகு என்பதன் இடைமிகை அல்லது விரித்தல். இலகுதல் விளங்குதல், எல் - இல் - இலகு.

**"எல்லே யிலக்கம்"** (தொல். 754)

தமிழிலக்கணம் இயல் இசை நாடகம் என முத்திறப்பட்டு, கி.மு.பத்தா யிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய தலைக்கழகத்திற்கு முன்பே முழு நிறைவடைந்துவிட்டது. இயற்றமிழிலக்கணம் எழுத்து சொல் பொருள் என முப்பாலது. அற்றை நூலெல்லாம் செய்யுளாதலால், பொருளில் யாப்பும் அடங்கிற்று. அணியை ஒரு தனியிலக்கணப் பிரிவாக முதனூலார் கொண்டிலர். நல்லிசைப் புலவர் செய்யுளில் அணி தானாக அமையு மென்பதும், அதற்கொரு வரம்பில்லை யென்பதும் அவர் கருத்து. பொரு ளணிகட்கெல்லாம் தாயாகிய உவமை, பொருளை விளக்கும் முறைமை பற்றியே பொருளிலக்கணப் பகுதியாக உவமவியலிற் கூறப்பட்டது.

தலைக்கழகம் இருந்த தென்மதுரை, ஆத்திரேலியாவும் ஆப்பிரிக்கா வும் நாவலந்தேயமும் ஒன்றாயிருந்திருந்த குமரிமலை நாட்டில் அமைந்த தாதலால், ஆரியம் என்னும் பேரே உலகில் தோன்றுமுன், வரலாற்றிற் கெட்டாத முதுபழந் தொன்மைப்பட்டது. அன்று அகத்தியமு மில்லை; அகத்தியருமில்லை. அக்கால நூலெல்லாம் தமிழரே இயற்றிய தனித்தமிழ் நூலே. இறையனாரகப்பொருளுரையிலுள்ள முச்சங்க வரலாறு பிற்காலத்தில் (கி.பி. 6ஆம் 7ஆம் நூற்றாண்டில்) எழுதப்பட்டதாதலால், தலைக்கழக நிலைமையை உண்மையாய் எடுத்துக் கூறவில்லை.

வேத ஆரியர் நாவலந் தீவிற்கு வந்த காலம் கி.மு. 2000 – 1500. அவர்க்கு அன்று எழுத்துமில்லை, இலக்கியமுமில்லை. அகத்தியர், நாரதர் போன்றவர் தென்னாட்டிற்கு வந்து தமிழரொடு தொடர்புகொண்ட பின்னரே, தமிழைப் பின்பற்றி வடமொழி யிலக்கணமும் எழுத்தும் அமைத்துக் கொண்டவர். வேதத்தில் தமிழ்ச்சொற்களும் தமிழெழுத்தொலிகளும் உள்ளமை முன்னரே கூறப்பட்டது. தமிழிலக்கணம் ஓர் உயிருள்ள முதுபெருந் தாய்மொழிக்கு வகுக்கப்பட்டதென்றும், வடமொழியிலக்கணம் ஒரு வழக்கற்ற நூன்மொழிக்கே வகுக்கப்பட்டதென்றும், வேறுபாடறிதல் வேண்டும்.

முதன் முதல் வேதமொழிக்கு வகுக்கப்பட்ட எழுத்தொலியிலக்கணம் சிட்சை (சிக்ஷை) என்பதாம். அது நால்வேதங்கட்கும் கிளைகள் போன்ற பாட வேறுபாட்டுத் தொகுதிகளான சாகைகளுள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி ஏற்பட்டிருந்ததனால் பிராதிசாக்கியம் (ப்ராதிசாக்ய) எனப்பட்டது. பொது வெழுத்துகளைப் பொறுத்தமட்டில் வடவெழுத்துகளின் ஒலி, முறை, பிறப்பு, உருவம், மாத்திரை (அளபு) ஆகியவை தமிழிலக்கணத்தைத் தழுவியவையே. எழுத்துகளை ஒலிப்பதற்குத் துணையாகக் கொள்ளப் பெறும் சாரியைகள், தமிழ் முதனூற்படி, குறிலுக்குக் கரமும், உயிர் நெடிலுக்குக் காரமும், ஐ ஔவிற்குக் கானும், ஆய்தத்திற்கு ஏனமும் ஆகும். ஆயின், வடநூலார் குறிலுக்குக் காரமும் கொண்டனர். அதைப் பிற்காலத் தமிழிலக்கணியர் பின்பற்றியதோடு குறிற்குக் கானும் வகுத்துவிட்டனர்.

இடையினம் வலிக்கும் மெலிக்கும் இடைநிகர்த்தா யொலிப்பது பற்றித் தமிழில் அப் பெயர் பெற்றது. வடநூலார் அதை அந்தஸ்த (antashtha - இடையில் நிற்பது) என மொழிபெயர்த்து, உயிருக்கும் மெய்க்கும் இடைப்பட்டு அரையுயிராய் (semi vowels) இருப்பது என்று பொருட்கரணியங் காட்டுவர்.

சிட்சைக்குப்பின் எழுந்தது சந்தசு (சந்தஸ்) என்னும் யாப்பு நூல். அது வேத மந்திரங்களின் ஓசை வேறுபாட்டையும் அமைப்பையும் எடுத்துக் கூறுவது. சந்தசின் பின் எழுந்தது. எழுத்திலக்கணமும் சொல்லிணக்கமும் கூறும் வியாகரணம். இடைக்கழகத்திறுதியில் முதன்முதலாய்த் தென்னாட்டிற்கு வந்து தமிழ் கற்ற வேதகாலப் பிராமணர் அல்லது ஆரியர், தமிழைப் பின்பற்றி ஆரியமொழிக்கு அமைத்துக் கொண்ட இலக்கண நூல்களுள் ஒன்று ஐந்திரம். அஃது இந்திரன் என்பவனாற் செய்யப்பட்டது. அது பாணினீயத்திற்கு மிகமுந்தியது. அது தோன்றியதும் மறைந்ததும் தமிழ்நாட்டிலேயே. அதனால் அது வேறெங்கும் காணப்படவில்லை. பாணினியின் இலக்கணம் (அஷ்டாத்யாயீ) வழக்கிற்கு வந்தபின், ஐந்திரம் எங்கும் காணப் பெறாமையாலேயே,

> **"புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்**
> **விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவிர்"** (சிலப். 11 : 98 - 9)

என்று கி.பி.3ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தினனான மாங்காட்டு மறையோன், ஐந்திரத்தின் தொன்மையும் சிறப்பும் தோன்றக் கூறியதாக இளங்கோவடிகள் பாடியுள்ளார். ஒரு பொய்கைக் குளிப்பை ஐந்திர வியாகரண அறிவிற்கேதுவாய்ச் சொல்லியிருப்பதால், அப் பொய்கையில் அந் நூற்படிகளெல்லாம் பாணினீயத்தின் சிறப்பை மிகுத்தற்கு வேண்டு மென்றே அமிழ்த்தப்பட்டனவோவென்று ஐயுற நேர்கின்றது.

தொல்காப்பியர் காலத்திற் பாணினீயம் தோன்றவில்லை. அவர் கற்ற வடமொழி யிலக்கணம் ஐந்திரமே. அதனால்,

**"மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த**
**தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றி"**

எனப் பாடினார் பனம்பாரனார்.

தொல்காப்பியர் காலம் கி.மு.7ஆம் அல்லது 6ஆம் நூற்றாண்டு. பாணினி காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு. பாணினீயத்துக்குப் பொழிப்புரை வரைந்த காத்தியாயனர் காலம் கி.மு.4ஆம் நூற்றாண்டு. அந் நூற்கு அகலவுரை வரைந்த பதஞ்சலியார் காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு.

பாணினியும் காத்தியாயனரும் வடநாட்டினராகச் சொல்லப் பெறினும், பதஞ்சலியார் தமிழ்நாட்டினர்; அல்லது தமிழ்நாட்டில் நீண்ட காலம் வாழ்ந்தவர். அவர் வியாக்கிரபாதர் என்னும் புலிக்கால் முனிவரொடு தில்லையில் வதிந்து, திருச்சிற்றம்பலத்திற் சிவபிரான் திருக்கூத்தைக் கண்டு களித்தவரென்று கோயிற்புராணங் கூறுகின்றது. கி.மு. 3ஆம் நூற்றாண்டில் தில்லையில் வதிந்த ஒரு வடநூற் புலவர் மாணிக்க வாசகர்போல் ஒரு சிறந்த தமிழ்ப் புலவராயு மிருந்திருத்தல் வேண்டும். சிறந்த வேதநூற் புலவரும் சமற்கிருதப் பண்டிதரும் இன்றும் தென்னாட்டிலேயே உள்ளனர். கிறித்து விற்குப் பிற்பட்ட தமிழ்வேந்தர் மூவரும், தம் அறியாமையால் தமிழைப் புறக்கணித்து வடமொழியையே பெரிதும் வளர்த்து வந்திருக்கின்றனர்.

பாணினீயம் நேரடியாகவோ வடநூல் வழியாகவோ தமிழிலக் கணத்தைத் தழுவிய தென்பது வெள்ளிடைமலையா யிருப்பினும், அதன் உரையாசிரியர் தமிழ்ப் பழங்குடிப் பொதுமக்களின் பேதைமையைப் பெரிதும் பயன்படுத்தி, உயிரையும் மெய்யையும் கூறும் அந் நூற் பதினான்கு நூற்பாக்களும் சிவபெருமான் உடுக்கையிலிருந்து தோன்றின வென்றும், அதனால் மாகேசுவர சூத்திரமென்று பெயர் பெறுமென்றும், துணிந்து கூறிவிட்டனர். பாணினியாரே சாக்கலியர், பாரத்துவாசர் முதலிய பல முன்னூலாசிரியரைத் தம் நூலிற் குறித்திருக்கும்போது, பாணினீயம் முழு முதனூல் எனல் எங்ஙன் பொருந்தும்?

சில வடமொழி யிலக்கணக் குறியீடுகள் தமிழிலக்கணக் குறியீடு களின் மொழிபெயர்ப்பாயுள்ளன.

எ-டு :

| **தமிழ்** | **வடமொழி** |
|---|---|
| பெயர் | நாமம் |
| வினை | கிரியை (க்ரியா) |
| வேற்றுமை | விபக்தி |

சில வடநூற் குறியீடுகள் தமிழ்ச்சொற்களை ஒத்துள்ளன.

எ-டு :

| **தமிழ்** | **வடமொழி** |
|---|---|
| உத்தி | யுக்தி |
| உவமை | உபமா |

வடமொழியிற் பொருளிலக்கணமில்லை. வடமொழி யிலக்கணம் கிறித்துவிற்கு 1500 ஆண்டுகட்கு முன்தோன்றி 500 ஆண்டுகட்குள் வழக்கற்றுப்போன ஒரு நூன் மொழியை ஆராய்தற்கு எழுந்தது. தமிழ் இலக்கணமோ, கி.மு.இருபதினாயிரம் ஆண்டுகட்கு முன்பே முழு வளர்ச்சியடைந்த மொழியில், பத்தாயிரம் ஆண்டாகத் தோன்றி வந்த பல துறைப்பட்ட பன்னூற்றுக் கணக்கான நூற்பொருள்களை, அகம் புறமென்று இருபாற்படுத்தி ஆராய்தற் பொருட்டெழுந்தது. தமிழின் தொன்மையையும் தன்மையையும் உண்மையாய் உணர்ந்தார்க்கு இஃது ஒரு சிறிதும் உயர்வு நவிற்சி யன்றென்பது தெற்றெனப் புலனாம்.

கால்டுவெல் கண்காணியார், தமிழின் குமரிநாட்டுத் தோற்றத்தையும், தொல்காப்பியத்தையும் கழக நூலையும் அறியாதும், தமிழரும் தமிழும் இன்றுள்ள நிலையை எண்ணிக்கொண்டும், தமிழ் நாகரிகம் கொற்கையில் தோன்றியதென்றும், உயரிய கலைகளெல்லாம் ஆரியருடையவை யென்றும், தமிழ் நெடுங்கணக்கும் வேற்றுமையமைப்பும் சமற்கிருதத்தைப் பின்பற்றியவையென்றும், தவறாகக் கூறிவிட்டார்.

தமிழில், எட்டு வேற்றுமையும் இயற்கையாகவும் ஏரண முறைப்பட்டும் தனித்தனி வேறுபட்ட பொருளுடையனவாகவும் இருக்கின்றன. அத்தோடு, மூவேறு வகையில் பெயர் கொண்டும் உள்ளன. எண் வகையில், முதல் வேற்றுமை, 2ஆம் வேற்றுமை, 3ஆம் வேற்றுமை, 4ஆம் வேற்றுமை, 5ஆம் வேற்றுமை, 6ஆம் வேற்றுமை, 7ஆம் வேற்றுமை, 8ஆம் வேற்றுமை என்றும்; பொருள் வகையில், எழுவாய் வேற்றுமை, செய்பொருள் வேற்றுமை, கருவி வேற்றுமை, கொடை வேற்றுமை, நீக்க வேற்றுமை, கிழமை வேற்றுமை, இட வேற்றுமை, விளி வேற்றுமை என்றும்; உருபு வகை யில், பெயர் வேற்றுமை, ஐ வேற்றுமை, ஒடு வேற்றுமை, குவ் வேற்றுமை, இன் வேற்றுமை, அது வேற்றுமை; கண் வேற்றுமை, விளிப் பெயர் வேற்றுமை என்றும் பெயர் பெற்றிருத்தல் காண்க.

வடமொழியிலோ, ப்ரதமா விபக்தி, த்விதீயா விபக்தி, த்ருதீயா விபக்தி, சதுர்த்தீ விபக்தி, பஞ்சமீ விபக்தி, ஷஷ்டீ விபக்தி, ஸப்தமீ விபக்தி, ஸம்போதன ப்ரதமா விபக்தி என்று எண்பற்றியே எண் வேற்றுமையும் பெயர் பெற்றுள்ளன.

3ஆம் வேற்றுமைப் பொருள்களான கருவி, வினைமுதல் (கருத்தா), உடனிகழ்ச்சி ஆகிய மூன்றும் முரண்பட்டவை என்று கால்டுவெல் கண்காணியார் கருதுகின்றார். அம் மூன்றையும் ஆய்ந்து நோக்குவார்க்கு, அவற்றின் ஒற்றுமை தோன்றாமல் போகாது. வினைமுதல் என்பது உயர் திணைக் கருவியாதலால், கருவியுள் அடங்கும். கருவியுள் உடனிகழ்ச்சியும் உடனிகழ்ச்சியிற் கருவியும் நுண்ணியதாய்க் கலந்து கிடப்பதை, நுழைபுலங் கொண்டும் வழக்கு நோக்கியும் உணர்ந்தே, இவ் விரண்டையும் ஒரு

வேற்றுமைப்படுத்தினர் தமிழ் முதனூலாசிரியர். ஒரு கருவி கொண்டு ஒரு வினை செய்யும்போது அக் கருவி செய்வா னுடனிருப்பதையும், ஒருவன் மற்றொருவனுடன் கூடி ஒரு வினை செய்யும் போது அம் மற்றொருவன் துணையாய் நின்று கருவிப்படுவதையும், கூர்ந்து நோக்குக. இனி, வழக்கு வருமாறு:

**ஆன் (ஆல்) உருபு:**

மண்ணான் இயன்ற குடம் – கருவி

ஊரான் ஒரு கோவில் – உடனிகழ்ச்சி

**ஒடு உருபு:**

ஊசியொடு குயின்ற தூசு – கருவி

நாயொடு நம்பி வந்தான் – உடனிகழ்ச்சி

ஆங்கிலத்திலும் இவ் வழக்கு ஒத்திருப்பது கவனிக்கத்தக்கது.

with (ஒடு): Write with a pen – கருவி

Went with him – உடனிகழ்ச்சி

By (ஆல்) Live by bread – கருவி

Stand by him – உடனிகழ்ச்சி

இங்ஙனமே, 5ஆம் வேற்றுமைக்குரிய நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என்னும் நான்கும் நீக்கப்பொருள் வேறுபாடுகளே. இங்கு ஒப்பு என்பது உறழ்பொருவை (Comparative Degree). இவற்றை விரிப்பிற் பெருகும். என் தமிழ் வரலாற்றில் கண்டு கொள்க.

3ஆம் வேற்றுமைக்குக் கருவிப் பொருளுடன் உடனிகழ்ச்சிப் பொருள் வடமொழியிலுமுள்ளது. இஃதை, "இனிச் சகார்த்தமாய் வந்த திருதியைச் சகார்த்தத் திருதியை என்றும், சகார்த்தமென்றும்,..... கூறுவர்" என்னும் பிரயோக விவேக உரையாலும் (பக்கம், 11), "புத்ரை: ஸஹ க்ராமம் கச்சதி ஹரி" என்னும் சொற்றொடர் பற்றி, "ஸஹ governs the instrumental" என்று இராமகிருட்டிண கோபால பந்தர்க்கார் தம் சமற்கிருத முதற் புத்தகத்தில் (ப.24) எழுதியிருக்கும் அடிக்குறிப்பாலும், அறிக.

இனி, தமிழில் எத்தனை உருபோ அத்தனை வேற்றுமை என்று கால்டுவெல் கண்காணியார் கூறியிருப்பது, கண் கால் கடை யிடை முதலிய இடப்பொருளுருபுகள் பற்றியோ பல்வேறு வேற்றுமை பற்றிவரும் சொல்லுருபுகள் பற்றியோ, அறிகிலம். எதுபற்றியதாயினும் அவர் கூற்றுப் பொருளற்றதென்பது தெளிவாம். பொருள்களிடைப்பட்ட உறவு வேறுபாடு எட்டே வகைப்படுமென்பது, இலக்கண முறையாலன்றி ஏரண முறையாலும் தெளிந்ததே. எட்டிற்கு மேற்பட்டவையெல்லாம் கூட்டும் கலவையுமா யிருக்குமே யன்றித் தனிப்பட்டவையாயிரா.

இனி, ஒரு சார் வடநூல்வழித் தமிழாசிரியர், “ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன்” என்னும் பனம்பாரனார் கூற்றையும்,

**“ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை**
**வேறென விளம்பான் பெயரது விகாரமென்**
**றோதிய புலவனு முளனொரு வகையால்**
**இந்திரன் எட்டாம் வேற்றுமை யென்றனன்”**

என்னும் (பேரகத்திய நூற்பாவாகக் காட்டப்பெறும்) ஒரு பழைய உரையாசிரியர் மேற்கோளையும்,

**“வேற்றுமை தாமே ஏழென மொழிப”** (546)

**“விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே”** (547)

என்னும் தொல்காப்பிய நூற்பாக்களையும், ஒருங்கு நோக்கி, தொல் காப்பியத்திற்கு முதல் நூல் ஐந்திரமெனக் கூறித் தமிழ்நூற்கு வடநூல் மூலங் காட்ட முயல்வர். “ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்” என்பது, தொல் காப்பியரின் ஐந்திர அறிவை மட்டும் குறிக்குமேயன்றி, தமிழிலக்கண நூல் வடமொழியிலக்கண நூல்வழிப்பட்டதென்பதைக் காட்டாது. ஆரியம் கருக்கொள்ளு முன்னரே தமிழ் குமரிக்கண்டத்தில் முழுவளர்ச்சி யடைந் திருந்ததையும், ஆரியமொழிக்குத் தமிழே அடிப்படையா யிருத்தலையும் நோக்கும்போது, தமிழிலக்கணம் வடமொழி யிலக்கண வழிப்பட்ட தென்பது பேரன் பாட்டனைப் பெற்றானென்ற கதையாகவே முடியும். சித்தரஞ்சன் புகைவண்டித் தொழிற்சாலையில் சிறந்த வகையில் சூழ்ச்சியம் (Engine) செய்யப் பெறினும் அதைச் சென்ற நூற்றாண்டிற் புதுப்புனைந்தவர் சியார்சு தீபன்சன் (George Stephenson) என்னும் ஆங்கிலேயர் என்பதை எவர் மறுக்க வொண்ணும்? அதுபோன்றதே தமிழிலக்கண முன்மையும் என்க.

விளிவேற்றுமை என்பது உண்மையில் எழுவாயின் வேறொரு வடிவே யாதலால், அதை முதல் வேற்றுமையுள் அடக்கி வேற்றுமை ஏழெனவே தமிழ் முதனூலார் கொண்டிருக்கலாம். பின்னூலார் அதை எட்டாக்கி யிருக்கின்றனர். இதையே இந்திரனும் தழுவியிருக்கின்றனன் பாணினியார் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டவரேனும், விளிவேற்று மையை அட்டமீ (அஷ்டமீ) விபக்தி யென்னாது சம்போதனப் பிரதமா விபக்தியென்பது எழுவாய் வேற்றுமையிலேயே அடக்கியிருக்கின்றனர். எந்நாட்டிலும் தன்னாட்டாசிரியர்க்குள்ளேயே பொருட் பிரிவுபற்றிக் கருத்து வேறுபாடிருப்பது இயல்பே. சிறுபொழுது ஐந்தென்றும் ஆறென்றும், புறத்திணை ஏழென்றும் பன்னிரண்டென்றும், தமிழத் தமிழாசிரியரே மாறுபடுதல் காண்க.

இனி, எழுத்துகளின் பிறப்பு முறை பற்றித் தொல்காப்பியமும் பாணினி சிட்சையும் கூறுவது ஒன்றாயிருத்தல்பற்றி, முன்னதைப் பின்னதன்

வழிநூலாகக் கருதி, தொல்காப்பியர் காலம் கி.பி.2ஆம் நூற்றாண்டென்பர் வடமொழி வரலாற்றாசிரியர் பண்டாரகர் (Dr.) சுப்பிரமணிய சாத்திரியார்.

அகத்தியம், மாபுராணம், பூதபுராணம், அவிநயம், தொல்காப்பியம், காக்கைபாடினியம், நற்றத்தம், பனம்பாரம், வாய்ப்பியம் முதலிய பல தமிழிலக்கண நூல்கள், பாணினீயத்திற்குப் பல சில நூற்றாண்டுகட்கு முற்பட்டவை. அகத்தியத்திற்கு முந்திய முழுத் தூய தமிழிலக்கணங்களோ எத்தனையோ பல. ஆதலால் பாணினீயமாயினும் பாணினி சிட்சையாயினும், பிற வடமொழி இலக்கணநூல் எதுவாயினும், தமிழ்நூலை முதல் நூலாகக் கொண்டதே அல்லது பின்பற்றியதே என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. வேத ஆரியர் காலத்தில் வடஇந்திய மக்களும் பெரும்பாலும் திரவிடரா யிருந்ததனால், அவருட் கற்றோரிடைத் தமிழ்நூல்களும் வழங்கி யிருத்தல் வேண்டும். ஆதலால், சிந்தாற்றங் கரையிற் செய்யப்பட்ட வேதத்தில் கலந்துள்ள திரவிட அல்லது தமிழவருடொலிகள் (Linguals or Cerebrals) பர். சுப்பிரமணிய சாத்தியார் கருதுகிறபடி, ஆரியமொழிக் குரியவாகா.

வடமொழி யொலிகளின் வன்மையும் பெருக்கமும் கலவையும், குறில் நெடில் அளபெடை யென்னும் மூவகை உயிர்ப் பகுப்பும், குணம் விருத்தியென்னும் உயிர்த் திரிபும், இருமை யெண்ணும், ஈறு பற்றிய செயற்கைப்பாலும், இடுகுறி (ரூடி) என்னும் சொல்வகையும், வேர்ச் சொல்லாகக் காட்டப்படுபவற்றின திரிசொற்றன்மையும், பிறவும் வட மொழியின் திரிநிலையையும் அம் மொழி யிலக்கணத்தின் பின்மையையும் காட்டப் போதிய சான்றாம்.

**– “தென்மொழி”**

(16)

# ஆரியப் பூதம் அடக்கமெழும்புதல்

மீன மாதம் 5ஆம் பக்கல் (18.3.1969) 'மெயில்' தாளில் பின்வருமாறு ஓர் அறிக்கை வெளியிடப்பட்டிருந்தது.

**பள்ளிகளிற் சமற்கிருதம்**

விருப்பப் பாடமாகுமாறு நெருக்கப்படுதல்

"இந்தியச் சமற்கிருத மொழிக்கழகம், சமற்கிருதத்தை வழிநிலைக் கல்வியில் (Secondary Education) எந்த நிலையிலாவது மீண்டும் விருப்பப் பாடமாக்குமாறு, தமிழ்நாட்டு அரசிற்கு வேண்டுகோள் விடுத்துள்ளது.

'அக் கழகம் முதலமைச்சருக்கு விடுத்த வேண்டுகோள் மடலில், சமற்கிருதத்தை 10ஆம் 12ஆம் வகுப்புகளில் மட்டும் தெரிப்புப் பாடமாகக் கற்குமாறு இன்றுள்ள ஏற்பாடு 'நிரம்பக் குறைவானது' என்று கூறியுள்ளது. 6ஆம் வகுப்பிலிருந்தே அதைக் கற்குமாறு ஏற்பாடிருத்தல் வேண்டும்.

"மா பெரும்பாலான பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் சமற்கிருதம் கற்கப்பட்டு வருவதாக அக் கழகம் கூறியுள்ளது. பத்தாயிரத் திற்கும் குறையாத பாடசாலைகளில், வாழ்நாள் முழுதும் சமற்கிருதக் கல்வி யேற்றுக்கொண்ட ஆடவர், அம் மொழியை வழங்கும் கல்வி வாயிலாகவே ஆள்கின்றனர். இத் தேயத்தில் ஐம்பதினாயிரவர்க்குக் குறையாது அதில் விரைவாகப் பேசுகின்றனர்.

"பலர் பூசாரித் தொழிலை மேற்கொண்டு இந்துமதப் பண்பாட்டுக் காவலராகத் தொண்டு புரிகின்றனர். பத்திலக்கத்திற்கு மேற்பட்ட மக்கள் வாழ்க்கை, பிறப்பு, திருமணம், இறப்பு ஆகிய நிகழ்ச்சிகளிற் சமற்கிருதத்திற் சமயச் சொலவங்களை மன்றாட்டு வடிவில் எதிரொலிக்கிறது.

"பண்டைக் காலத்தில் சமற்கிருதத்தில் இலக்கக் கணிதம் (Algebra), வடிவுக் கணிதம் (Geometry), முக்கோணக் கணிதம் (Trignometry), அறிவியல் (Science) ஆகியவற்றை விளக்கும் நூல்களிருந்தன. அணுவியற் கொள்கை முதன்முதல் சமற்கிருத நூல்களில் இடம்பெற்றது. இக்காலத்தில் மேனாடு இந்திய மெய்ப்பொருளியற் கருத்துகளை மேன்மேலுங் கடன்கொண்டு வருகின்றது. சமற்கிருதக் கல்வி மாணவர் களுக்குக் கவர்ச்சி யுண்டாக்குமாறு தக்க பாடத்திட்டம் வகுக்கப்படுதல் வேண்டுமென்று, அவ் வேண்டுகோள் மடல் கூறுகின்றது."

சமற்கிருதம் தமிழ்நாட்டிற்குத் தேவையல்லாதது மட்டுமன்றி, தமிழுக்குத் தொடக்கந்தொட்டு உயிர்ப்பகையாகவும் இருந்துவருகின்றது. அதன் தோற்றமே தமிழுக்கு மாறாக ஏற்பட்டதே. தமிழை வழிபாட்டிற்குத் தகாத மொழியென்று தள்ளியதும் தாழ்த்தியதும் சமற்கிருதமே. தமிழ்ச் சொற்களை இழிவுபடுத்தியும் வழக்கு வீழ்த்தியும் இறந்துபடச் செய்தும் தமிழின் தூய்மை குலையவும் வளங்குன்றவும் செய்தவை, அதில் தேவை யின்றிப் புகுத்தப்பட்ட சமற்கிருதச் சொற்களே. ஆரிய வருகைக்கு முற்பட்ட முதலிரு கழகத் தூய தமிழ்நூல்க ளெல்லாவற்றையும் அழித்ததும் சமற் கிருதமே. மேலையர் திங்களும் வெள்ளியுங் குடிபுகவிருக்கும் இக்காலத்தி லும், தமிழரைப் பகுத்தறிவும் தன்மானமும் நெஞ்சுரமும் அற்ற அடிமைய ராகவும் அஃறிணையாகவும் அமைத்து வைத்திருப்பது சமற்கிருதமே. ஆதலால், சமற்கிருதக் கல்வி தமிழ மாணவர்க்கு எத்துணையும் வேண்டுவ தன்று. பிராமணர் தம் பிள்ளைகட்கு வேண்டு மாயின் தம் சொந்தச் செலவில் அல்லது தம் இனச் செலவில் தனியாகச் சமற்கிருதப் பள்ளிகளை ஊர்தொறும் தெருத்தொறும் இல்லந்தொறும் அமைத்துக்கொள்ளலாம்.

மேனாடாயினும் கீழ்நாடாயினும், சமற்கிருதத்தைப் பல்கலைக் கழகங்களில் தலைமையாகப் போற்றிக் கற்பிப்பதற்குத் தமிழின் பெருமை யையும் சமற்கிருதத்தின் உண்மையான வரலாற்றையும் அறியாமையே கரணியமாம். குமரிக்கண்டத் தமிழ் திரவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமுமாகும் என்னும் உண்மையை வெளிநாட்டார் அறிவராயின், அன்றே சமற்கிருதத்தைத் தாழ்த்தித் தமிழை அரியணை யேற்றுவர் என்பது திண்ணம். வடமொழி வெறியர் மொழி வெறியே வடிவமாக அமைந்தவ ராதலின், பத்தாயிரம் பாடசாலைகளில் வாழ்நாள் மாணவராக விருப்பதில் வியப்பொன்றுமில்லை. வழக்கிறந்த மொழிகளை யும், செயற்கை மொழிகளையும் விரைவாகப் பேசுவார் இன்றும் உலகத்திலிருப்பதால், அரைச் செயற்கையான இலக்கிய நடை மொழியாகிய (Semi-artificial literary dialect) சமற்கிருதத்தை ஐம்பதினாயிரவர் தட்டுத் தடையின்றிப் பேசவல்லார் என்பதிலும் சிறப்பேதுமில்லை.

சென்ற நூற்றாண்டில் ஐரோப்பாவில் **வோலப்பூக்கு** (Volapuk) **எசுப்பெராந்தோ** (Esperanto), **இந்தர்லிங்குவா** (Interlingua), நோவியல் (Novial) முதலிய பல செயற்கை மொழிகள் இயற்றப்பட்டன. அவற்றுள் நெடுநாட் பெருவழக்காயிருந்த எசுப்பெராந்தோவைப்பற்றி 'மொழித்தறி' (The Loom of Language) என்னும் மொழிநூலில் வரைந்திருப்பது வருமாறு:

"பன்னாட்டு மன்றத்தின் (League of Nations) பொதுச் செயலகம் (எசுப்பெராந்தியர் கொடுத்த புள்ளிக்கணக்கைச் சார்ந்து) வெளியிட்ட அறிக்கைப்படி, எசுப்பெராந்தோ மூலநூல்கள், மொழிபெயர்ப்புகள், பாடப்

பொத்தகங்கள், பரப்புரைச் சுவடிகள் முதலியன உள்ளிட்டு ஏறத்தாழ நாலாயிரம் வெளியீடுகளைக் கொண்டுள்ளதாகப் பெருமை பாராட்ட முடியும். அஃது அல்பானியாவில் வழிநிலைக் கல்விக்கும் மேல்நிலைக் கல்விக்கும் கட்டாயப் பாடமாயிற்று. சீனத்திற் பீக்கிங் பல்கலைக்கழகம் சில கடவைகளை (Courses) ஏற்படுத்திற்று. மாதிரிதும் இலிசுபனும் பல செருமனிய நகரங்களும் அதை ஊர்க்காவற் பள்ளிகளின் பாடப் பட்டியிற் சேர்த்தன. பெரும் பிரித்தானத்தில் (Great Britain) அது தொழிலாளர் கல்லூரிகளில் மக்கள் விருப்பைப் பெற்றது. பிரைசு பெருமகனார், எச்சு, சீ. வெல்சு (H.G. Wells). இராபெர்ட்டு செசில் பெருமகனார், ஆர்தர் என்றெர்சன் போன்ற எழுத்தாளரும் அதை ஊக்கினர். இரசியாவில் பொதுமக்கள் கல்வித் திணைக்களம், 1919 சனுவரியில் அதன் தகுதிகளை ஆயவும், ஒரு பன்னாட்டுப் பொதுமொழியைச் சோவியத்துப் பள்ளிகளிற் கற்பிப்பதின் பொருத்தத்தைப்பற்றி அறிக்கை விடவும், ஒரு குழுவை அமர்த்திற்று. சினோசியேவ் இடோ (Ido) மொழியை விரும்பினாரேனும், குழு எசுப்பெராந்தோவைத் தீர்மானித்தது. வேய்மர் மக்களாட்சியில், ஐந்து செருமனிய நகரங்கள் எசுப்பெராந்தோவைத் தொடக்கப் பள்ளிகளிற் கட்டாயப் பாடமாக்கின. லீபுசிக்கு நகரத்தில் ஆசிரியரைப் பயிற்றுவதற்கு ஏற்பட்ட தேசிய எசுப்பெராந்தோக் களரி, உள்நாட்டு மந்திரியாரிடமிருந்து அதிகாரமுறை யொப்புதலைப் பெற்றது. 1921-22 மாரியில், செருமனியில், ஏறத்தாழ 40,000 இளந்தையர்க்கு 1592 கடவைகள் இருந்தன. அவருட் பாதிப்பேர் பாட்டாளி மக்கள்." (பக். 461-2)

இங்ஙனம் ஒரு வகுப்பிற்கும் சிறப்பாக வுரியதல்லாத புதுச் செயற்கைமொழி, 1935 சூன் 8-ல் செருமனியத் தேசியக் கூட்டுடைமைக் கல்வியமைச்சர், அந் நாளுக்குப்பின் மூன்றாம் அரசில் எசுப்பெராந் தோவைக் கற்பிப்பது சட்ட முரணானதென்று தீர்ப்புச் செய்யும் வரை, ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும், சீனாவிலும் பரவியிருந்திருக்குமாயின், தமிழரும், திரவிடரும் பிறருமாகிய பழங்குடி மக்களை யெல்லாம் பிராமணர்க்கு என்றும் அடிமைப்படுத்துதற்கென்றே ஆக்கப்பட்ட சமற்கிருதத்தை, அதன் வாயிலாக மேனத்தாக வாழும் ஒரு வகுப்பாருள் ஒரு பகுதியினர் அதை வாழ்நாள் முழுதுங் கற்று வாய்த்திறமையாகப் பேசுகின்றனரெனின், அஃது இறும்பூது விளைத்தற்கு எள்ளளவும் இடமுண்டோ?

சிவமதமும் திருமால் மதமும் தூய தமிழ மதங்களாதலின் கோயில் வழிபாடோ இருவகைக் குடும்பச் சடங்குகளோ ஆற்றுதற்குப் பிராமணியப் பூசாரியரும் வேண்டியதில்லை; சமற்கிருத நடைமொழியும் வேண்டிய தில்லை. இன்று தாழ்த்தப்பட்டுள்ள தமிழ்மக்கள் போன்றே தாழ்த்தப்படாத தமிழரும் பண்டு தமிழ உவச்சரைக் கொண்டு தமிழிலேயே இறை வழிபாட்டையும் இருவகைச் சடங்குகளையும் புரிந்து வந்தனர். பிராமணர்

தாம் நிலத்தேவரென்றும் தம் முன்னோர் மொழியும் செயற்கை மொழியும் தேவமொழியென்றும் ஏமாற்றியதினாலேயே அரசருங் குடிகளுமான இடைக்காலத்துப் பழங்குடி மக்கள் ஏமாறி நம்பி ஆரியத்தை யேற்றுப் போற்றி வந்தனரென்றும், வரலாற்றறிவும் மொழியாராய்ச்சியும் மிக்க இக்காலத்திற்கு அவ் வேமாற்று இம்மியும் ஏற்காதென்றும், தெற்றெனத் தெரிந்துகொள்க.

இனி, அறியாமைக் குப்பைகளும் இடக்கர்ச் செய்திகளும் மூடப் பழக்கவழக்க வண்ணனைகளும் பொய்புரட்டுகளும் மலிந்த இதிகாச புராணங்களும், தரும சாத்திரம் என்னும் தீய வொழுக்க நூல்களும் தவிர, மற்றச் சமற்கிருத அறிவியல் நூல்கட்கெல்லாம் மூலம் ஆரியத்தால் அழியுண்டுபோன தமிழ் நூல்களே என்பதும், தெரிதரு தேற்றமாம்.

"இனி, இசைத்தமிழ் நூலாகிய **பெருநாரை பெருங்குருகும்** பிறவும் தேவவிருடி நாரதன் செய்த **பஞ்சபாரதீயம்** முதலாவுள்ள தொன் னூல்களிறந்தன. நாடகத்தமிழ் நூலாகிய **பரதம் அகத்தியம்** முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன. பின்னும் **முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றிய** மென்பனவற்றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின், அவையும் இறந்தன போலும்!" என்று அடியார்க்குநல்லாரும் (சிலப்பதிகார வுரைப்பாயிரம்),

"எண்ணென்பது கணிதம். அது கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும்; அவை **ஏரம்ப** முதலிய நூல்களுட் காண்க." (திருக்குறள், 392, உரை) என்று பரிமேலழகர், கூறியிருத்தலையும், சிறுகுழி பெருங்குழி யென்னும் சதுர வாய்பாடுகள் சென்ற நூற்றாண்டுவரை வழங்கியமையும், எழுகோளும் பன்னீரோரையும் இருபத்தெழு வெள்ளியும் ஆரியர் வருமுன்பே தமிழர் கண்டிருந்தமையையும், வடமொழி நெடுங்கணக்கும் எண்வேற்றுமையும் தமிழைப் பின்பற்றி யுள்ளமையையும், வானளாவப் போற்றிப் புகழப்பெறும் பாணினீயம் (அஷ்டாத்யாயீ) ஐந்திலக்கணமுங் கூறும் தொல்காப்பியம் போலாது நன்னூல்போன்று எழுத்துஞ் சொல்லுமே கூறுதலையும், மாந்தன் இதுவரை கண்ட மொழியிலக்கணத்தின் கொடு முடியான பொருளிலக்கணம் பெயரளவிலும் வடமொழியில் இல்லாமை யும், சிறுதெய்வங்களையே வேள்வியில் வழிபட்டுவந்த ஆரியர் தமிழ ரொடும், திரவிடரொடும் தொடர்புகொண்ட பின்னரே கடவுட் கொள்கையை மேற்கொண்டதையும், பிறவற்றையும் தீர எண்ணித் தமிழ ஆரிய நாகரிகங் களின் ஏற்றத்தாழ்வு வெள்ளிடைமலைபோல் விளங்குதல் காண்க. ஆகவே, இந்தியச் சமற்கிருதக் கழகத்தார் இனித் தமிழ் நாடொழிந்த பிற பைதிரங் (பிரதேசங்)களிலேயே சமற்கிருதத்தைப் பரப்பும் வழிகளை வகுக்க.

"தமிழ்நாட்டுப் பெற்றோர் கழகக் கூட்டமொன்று தமிழ்நாட்டு உயர்நிலைப் பள்ளிகளிற் சமற்கிருதக் கல்விக்கு ஏந்துகள் (வசதிகள்)

ஏற்படுத்தவும், சமற்கிருத ஆசிரியரின் குறைபாடுகளை நீக்கவும், வழிகள் வகுக்குமாறு இம் மாதம் 23ஆம் பக்கல் கூடுகின்றது" என்னும் அறிவிப்பும், திரு பி.எப்.தேவிசு (P.F.Davis) என்பவரின் சமற்கிருதப் படிப்பு (Sanskrit Studies) - துல்லிபமும் (Precision) - தீர்பும் (Finish), அறிவு வளர்க்குந் திறனும் (Educative value) என்னும் தலைப்புக்கொண்ட கட்டுரையும் வெளிவந்தன. அன்று நடைபெற்ற சமற்கிருதக் கல்வி மாநாட்டொடு இக் கட்டுரையைத் தொடர்புபடுத்தி நோக்கும்போது, அம் மாநாட்டு முடிபு வலியுறுமாறு வேண்டுமென்றே இது முற்பட வரையப்பட்டதாகத் தெரிகின்றது. கட்டுரையாளர் சமற்கிருதச் சொல்வளத்தையும் இலக்கியச் சிறப்பையும் எடுத்துக் கூறியதில் எவ்வகைக் குற்றமுமின்று. ஆயின், அம் மொழி யொன்றே அப் பண்புகளையுடைய தென்றும், அதனால் அதன் வாயிலாகவே அச் சிறப்புகளை நுகர்ந் தின்புற முடியுமென்றும் கூறி யிருப்பது, அவரது தமிழறியாமையைக் காட்டுவதுடன், பிறரையும் அவ் வறியாமைக்குட் புகுத்துவதாயிருக்கின்றது.

**சடமும் (Matter) ஆவியும் (Spirit) இசைவுற வளர்ச்சிபெறல்**

சடத்தையும் ஆவியையும் இசைவுற வளர்த்தலைச் சமற்கிருத இலக்கியத்தில்தான் காணமுடியுமென்பது கட்டுரையாளர் கருத்து.

**"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்",** (குறள். 2)

**"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்**
**என்பு முரியர் பிறர்க்கு",** (குறள். 72)

**"இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல்",** (குறள். 314)

**"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு"** (குறள். 350)

என்ற திருவள்ளுவரே,

**"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்**
**கிவ்வுலக மில்லாகி யாங்கு",** (குறள் 247)

**"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்ல தில்லை பொருள்",** (குறள். 751)

**"அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்",** (குறள். 479)

**"நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்**
**சொற்பொருள் சோர்வு படும்"** (குறள். 1046)

என்றுங் கூறியிருத்தல் காண்க.

## சொற்சுருக்கம்

'சுருங்கச் சொல்லல்' என்பது தமிழ் இலக்கண நூல்கட்கெல்லாம் இன்றியமையாத பத்தழகுகளுள் ஒன்றாம்.

**"எப்பொரு ளாயினும் அல்ல தில்லெனின்**
**அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்"** (518)

**"அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்"** (519)

என்று வணிகர்கூடச் சொல்லிலுஞ் செட்டாயிருக்குமாறு தொல்காப்பியம் நெறியிடுகின்றது.

**"முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே**
**இன்ன என்னுஞ் சொன்முறை யான"** (942)

**"மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே"** (1361)

என்பனவும் சொற்சுருக்கம் பற்றிய அந் நூல் நூற்பாக்களே.

**"பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்**
**மக்கட் பதடி யெனல்"** (குறள். 196)

என்றார் திருவள்ளுவர். சொற்சுருக்கம் பற்றியே அவர்தம் நூற்குக் குறள்வெண்பா யாப்பைத் தெரிந்துகொண்டார். வடநூலார் சூத்திர யாப்பை மேற்கொண்டதும் தமிழ் நூலாரைப் பின்பற்றியே. பாணினியின் அளவிறந்த சொற்சுருக்கம் குன்றக் கூறல் என்னுங் குற்றந் தங்குவதாகும். ஆதலால், சமற்கிருத இலக்கியமே சொற் சுருக்கத்திற் சிறந்ததென்று கட்டுரையாளர் கூறியிருப்பது பொருந்தாது.

## துல்லிபம்

ஒரு சொல் துல்லிபமாய் ஆளப்பெறுவதற்கு நுண்பொருள் வேறுபாடு கொண்ட ஒருபொருட் பல சொற்கள் இன்றியமையாதனவாம். இவ்வகைச் சொல்வளத்தில் தலைசிறந்தது தமிழே. தெற்கே ஈராயிரங் கல் தொலைவு நீண்டு பரந்திருந்த பாண்டி நாட்டொடு அதில் வழங்கிய ஆயிரக்கணக்கான உலகவழக்குச் சிறப்புச் சொற்கள் முழுகிப்போன பின்பும், முதலிரு கழகமும் இயற்றிய ஆயிரக்கணக்கான தூய பல்துறை நூல்களொடு அவற்றில் ஆளப்பெற்ற ஆயிரக்கணக்கான இலக்கிய வழக்குச் சிறப்புச் சொற்கள் இறந்துபட்ட பின்பும், இலை, தாள், தோகை, ஓலை என்னும் நால்வகை இலை வேறுபாடும்; அரும்பு, போது, மலர், வீ, செம்மல் என்னும் ஐவகைப் பூ வேறுபாடும்; பிருக்கு, பிஞ்சு, காய், பழம் (கனி), வற்றல் (நெற்று) என்னும் ஐவகைக் காய்வேறுபாடும்; கச்சல் (வாழை), வடு (மா), மூசு (பலா) என்னும் மூவகைப் பிஞ்சு வேறுபாடும்; இவைபோன்ற பிறவும், இன்றும் தமிழிலன்றி வேறெம் மொழியிற் காணமுடியும்?

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் எனப் பெண்டிர் இளம்பருவத்தை எழுநிலையாகவும்; ஊடல், புலவி, துனி என மனைவியர் சடைவை முந்நிலையாகவும்; வகுத்துக் கூறியது தமிழல்லாது வேறு எம்மொழி?

இன்றும் ஆங்கிலமும் சமற்கிருதமும் அறியாத நாட்டுப்புறத் தமிழ் மக்கள் கொசுவும் உலங்கும் வேறென்றும், பொறியும் (Machine) சூழ்ச்சியமும் (Engine) வேறென்றும் அறிந்திருப்பது, அவர் முன்னோர் மொழியின் சிறப்பை யுணர்த்தும். கொசு பகலில் வழங்குவது; கடியாதது; கண்ணிலும் புண்ணிலும் அழுகற் பழத்திலும் மொய்ப்பது; உலங்கு இரவில் வழங்குவது; கடிப்பது. அதிற் சிறியது நுளம்பு.

யானையைக் குறிக்க ஆம்பல், உம்பல், உவா, எறும்பி, ஓங்கல், கடமா, கம்பமா, கரி, கவளமா, கடிவை, கறையடி, கைம்மலை, கைம்மா, சிந்துரம், தும்பி, தூங்கல், தோல், நால்வாய், பகடு, பிணிமுகம், புகர்முகம், புழைக்கை - பூட்கை, பெருமா, பொங்கடி, மதமா, மருண்மா, மறமலி, மொய், வழுவை, வாரணம், வேழம் முதலிய பல தூய தென்சொற்கள் உள்ளன.

ஆயம், கிளை, எழிலி, கனம், கார், காளம், குயின், கொண்டல், கொண்மூ, செல், புயல், மங்குல், மஞ்சு, மாசு, மால், முகில், மை, வான் - வானம், விண் - விண்டு முதலிய சொற்கள் முகிலைக் குறிக்கப் பயிலப் பெறுகின்றன.

முதலையை இன்று அலிகேற்றார் (Aligator), கிராக்கொடைல் (Crocodile), கேவியல் (Gavial) என்று மேலை யறிஞர் மூவகையாக வகுத்திருப்பது போன்றே, பண்டைத் தமிழரும் தமிழகத்து முதலையை இடங்கர், கராம், முதலை என மூவகையாக வகுத்திருந்தனர்.

உண்ணல், தின்னல், நக்கல், பருகல், சப்பல், விழுங்கல் என்னும் அறுவகை யுண்டிகளையும் பண்டைத் தமிழர் அறிந்து, அவற்றை அவற்றிற்குரிய சொல்லாற் குறித்தனர். ஆரியரொடு பழகி அறிவிழந்த இற்றைத் தமிழனே சோறு தின்னல் என்றும், குளம்பி (காப்பி) சாப்பிடுதல் என்றும், மரபு தவறி வழங்குகின்றான்.

இனி, சமற்கிருதத்திலுள்ள ஒருபொருட் பல சொற்களுள் பாதி தமிழும் திரவிடமும் ஆகுமென்றும்; பொதுச்சொற்களுள் ஐந்திலிரு பகுதி தமிழும், ஒரு பகுதி திரவிடமும், ஒரு பகுதி பிராகிருதமும், ஒரு பகுதியே ஆரியமும் ஆகும் என்றும் அறிக.

**தீர்பு**:

சமற்கிருதம் பட்டை தீர்ந்த மணிபோலத் தீர்புள்ளதென்று கொண்டு, ‘ஸம்ஸ்க்ருத’ என்ற சொல்லே பண்பட்டதென்று பொருள் படுவதாகக் கூறியுள்ளார் கட்டுரையாளர். ஸம்ஸ்க்ருத என்னும் சொற்கு ஒன்றுசேர்க்கப் பட்டது என்பதே அடிப்படைப் பொருளாம். இச் சொல் ஸம்-க்ரு என்று

பிரியும். 'ஸ்' எழுத்துப்பேறு, ஸம்-க்ரு என்னும் கூட்டடிக்கு "to put together, form well, join together, compose, RV" என்றே முதற்கண் பொருள் கூறியுள்ளது மானியர் வில்லியம்சு சமற்கிருத - ஆங்கில அகர முதலி, ஸம் - கூட, க்ரு - செய். கும் என்னும் தென்சொல்லே வடமொழியில் ஸம் எனத் திரிந்துள்ளது.

கும்முதல் கூடுதல், கும் - கும்மல், கும் - கும்பு - கும்பல், கும் - குமி - குமியல், குமி - குவி - குவியல், கும்மல் - L. cumulus, E. cumulute, கும் - L. cum. E. com.con, Gk. Sym. Syn, Skt, ஸம். இதிலிருந்து சமற்கிருதத்தின் திரிபு மிகையைக் கண்டுகொள்க.

தமிழ் தெற்கில் முழுகிப்போன குமரிக்கண்டத்தில் தோன்றி வளர்ச்சியடைந்தது. தமிழ் வடக்கிற் சென்று திரவிடமாகத் திரிந்தது. திரவிடமே வடமேற்காகச் சென்று ஐரோப்பாவின் வடமேற்கு மூலையை முட்டி ஆரியமாக மாறி, பின்பு தென்கிழக்காக வந்து கீழையாரியமாக இந்தியாவிற்குட் புகுந்து வழக்கற்றது. அவ் வழக்கற்ற ஆரியமும் அக் காலத்து வடஇந்திய வழக்குமொழியாகிய பிராகிருதமுங் கலந்ததே வேத ஆரியம். அவ் வேத ஆரியமும் திரவிடமுந் தமிழுங் கலந்ததே சமற் கிருதம். இங்ஙனம் ஆரியமும் பிராகிருதமும் திரவிடமும் தமிழும் கலந்து ஒன்றாக்கப்பட்டதினாலேயே, வடமொழி ஸம்ஸ்க்ருத எனப்பட்டது. க்ரு என்பது கரு என்னும் தென்சொல்லின் திரிபாம். கருத்தல், செய்தல், அவ் வினை இன்று வழக்கற்றது. கருவி, கருமம் என்னும் தென்சொற்களின் முதனிலை கரு என்பதே. சொன்முதல் உயிர்மெய்யின் உயிர்நீக்குதல் வடமொழி யியல்பாம்.

எ-டு: துருவு - த்ரு, பெருகு - ப்ருஹ், திரு - ச்ரீ, மரி - ம்ரு.

இதனால், தமிழே ஆரியத்திற்கு மூலமானதும் திருந்தியதும் பண்பட்டதும் ஆகும் என அறிந்துகொள்க.

**அறிவுறுத்துந் திறன் :**

சமற்கிருத இலக்கியத்துள்ள நற்கூறு களெல்லாம் தமிழென்றும், தீக் கூறுகளெல்லாம் ஆரியம் என்றும் பொதுவாக அறிந்துகொள்க.

எ-டு:

**"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்."** (குறள்.972)

**"ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்."** (குறள்.133)

**"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்**
**கருமமே கட்டளைக் கல்."** (குறள். 505)

என்றார் திருவள்ளுவர். பிறப்பாற் சிறப்பில்லை யென்பதும், விருப்பமும் திறமையும்பற்றித் தொழில் வேறுபாடும், தொழில் வேறுபாடுபற்றிக் குலவேறுபாடும் உண்டாகுமென்பதும், ஒருவன் தொழில் மாறும்போது குலமும் மாறும் என்பதும், குலவுயர்வு தாழ்வு ஒழுக்கமுந் துப்புரவும் உண்மை யின்மையாலேயே யன்றித் தொழில் வேறுபாட்டாலில்லை யென்பதும், மக்கள்தொகை பெருகப் பெருகத் தொழிலும் பெருகுமாயினும் எல்லாத் தொழிலும் கல்வி, காவல், வாணிகம், உழவு என நாற்பாலாய் அடங்குமென்பதும், அதனால் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நாகரிக மருதநில மக்கள் நாற்பெரு வகுப்பாராய் அமைவர் என்பதும், ஏனைக் குறிஞ்சி முல்லை பாலை நெய்தல் மாந்தராகிய குறவரும் ஆயரும் வேட்டுவரும் பரவரும் (நுளையரும்) மருதநில மக்களினும் நாகரிகங் குன்றியவ ரென்பதும், பண்டைத் தமிழ்நூல்களால் அறியக் கிடப்பனவாம்.

ஆயின், சமற்கிருத நூல்களோ, பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் நாற்குலங்களையும் இறைவனே படைத்தானென்றும், அங்ஙனம் படைத்ததாக இறைவனே சொன்னானென்றும் (பகவற்கீதை, 4:13); புருடன் (புருஷ) என்னும் உயிரின மூல வடிவத்தின் முகத்தினின்று பிராமணனும், தோளினின்று சத்திரியனும், தொடையினின்று வைசியனும், பாதத்தினின்று சூத்திரனும் தோன்றினர் என்றும் (இருக்கு வேதம், 10ஆம் மண்டலம், 90ஆம் மந்திரம் புருஷசூக்தம்); பிராமணனுக்கு மற்ற மூவரும் தொண்டு செய்ய வேண்டுமென்றும், துறவும் வீடுபேறும் பிராமணனுக்கே உரியனவென்றும்; முக்குண வேறுபாட்டாலும் பழவினையாலும் நாற் குலமும் அமைவதாற் குலம் பிறவிபற்றியதென்றும்; நாற்குலமும் முறையே ஒன்றினொன்று தாழ்ந்தவை யென்றும்; ஒருவன் எவ்வெத் தொழிலை மேற்கொள்ளினும் அவன் குலம் அவன் இறக்கும்வரை மாறாதென்றும்; நாற்குலத்தாரும் முறையே வேத மோதி வேள்வி வளர்த்தும், போர்செய்து காவல் மேற்கொண்டும், வணிகமும் உழவும் ஆற்றியும், கைத்தொழிலுங் கூலி வேலையுந் தொண்டுஞ் செய்தும், வாழவேண்டு மென்றும்; பிராமணன் சமையத்திற்கேற்ப எத்தொழிலையும் மேற்கொள்ள லாமென்றும்; அவன் நிலத்தேவன் (பூசுரன்) என்றும், வேதமொழியும் சமற்கிருதமும் ஆகிய கீழையாரியம் தேவமொழியென்றும்; உண்டி, உடை, உறையுள், உடைமை, பெயர், பழக்கவழக்கம், சடங்கு, தண்டனை முதலிய எல்லாவகை நிலைமை களும் குலத்திற்கேற்ப வேறுபட்டிருத்தல் வேண்டுமென்றும்; இத்தகைய பிறவுமே கூறுகின்றன.

**"சுழன்றுமேர்ப் பின்ன துலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை",** (குறள்.1031)

**"உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்றா**
**தெழுவாரை யெல்லாம் பொறுத்து",** (குறள்.1032)

**“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்**
**தொழுதுண்டு பின்செல் பவர்”,** (குறள்.1033)

**“பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர்”,** (குறள்.1034)

**“இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர்”,** (குறள். 1035)

**“உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கு நிலை”** (குறள். 1036)

என்றது தமிழ் அறநூல்.

“சிலர் பயிரிடுதலை நல்ல தொழிலென்று நினைக்கிறார்கள். அந்தப் பிழைப்புப் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டது. ஏனெனில், இரும்பை முகத்திலேயுடைய கலப்பையும் மண்வெட்டியும் பூமியையும் பூமியி லுண்டான பலபல ஜெந்துக்களையும் வெட்டுகிறதல்லவா?” என்றது வடமொழி அறநூல்.

- மநுதர்ம சாஸ்திரம் (இராமாநுஜாசாரியார் மொழிபெயர்ப்பு, 10 : 84)

இனி, “வால்மீகியிலிருந்து ஒரு வரி அல்லது காளிதாசனிலிருந்து ஓர் உவமை அல்லது உபநிடதங்களிலிருந்து ஒரு விழுமிய கூற்று, நம் நெஞ்சாங்குலை நரம்புகளைத் தீண்டி, இந்தியாவில் மாந்தன் தோன்றிய காலத்திற்குக் கொண்டுபோய்விடும். முந்தியல் காலத்தனவும் முன்னோரைப் பற்றியனவும் உள்மன யுணர்ச்சியனவுமான ஆயிரம் நினைப்புகளை நம்மில் தூண்டிவிடும்” என்றார் கட்டுரையாளர். அவர் திருக்குறளும் சிலப்பதிகாரமும் திருக்கோவையும் திருமந்திரமுங் கம்பவிராமாயணமும் படித்திருந்தால் அங்ஙனங் கூறியிரார்.

**“இனிய வுளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று”,** (குறள். 100)

**“களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று”,** (குறள். 929)

**“தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையி னிழிந்தக் கடை”,** (குறள். 964)

**“உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது**
**மிக்கற்றால் நீள விடல்”** (குறள். 1302)

என்னும் திருக்குற ளுவமைகளையும்,

**“எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்**
**விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை**
**மண்ணினைக் காக்கின்ற மன்னர் மைந்தர்கள்**
**கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்”** (1 : 9 : 41)

**"தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன**
**தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே**
**வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்**
**ஊழ்கொண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார்."** (1 : 20 : 19)

**"சாகாவ ரத்தலைவ ரிற்றிலக மன்னான்**
**ஏகாவ ரக்கிகுடர் கொண்டுடனெ ழுந்தான்**
**மாகால சைப்பவட மண்ணினுற வாலோ**
**டாகாய முற்றகத லிக்குவமை யானான்."** (5 : 1 : 85)

என்னும் கம்பவிராமாயண வுவமைகளையும் வெல்வன இந் நானிலத்தில் எந்நிலத்து நூலினு முண்டோ?

**"இருட்டறை மூலை யிருந்த குமரி**
**குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்**
**குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி**
**மருட்டி யவனை மணம்புரிந் தாளே."** (1514)

**"மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தின் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்**
**பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்"** (2290)

என்னும் திருமந்திரத்தினுஞ் சிறந்த வுண்மைகளை உபநிடதங்கள் எடுத்துக்கூற முடியுமோ? மேலும், வடமொழி ஆகமங்கள் போன்றே உபநிடதங்களும் தமிழ்நூல்களின் வழியனவே என்று கட்டுரையாளர் அறிவாராக. ஐம்பூதங்களையும் இயற்கைத் தோற்றங்களையும் வானச் சுடர்களையும் சோமச் சாற்றையும் தெய்வமாக வணங்கிவந்த பிள்ளை மதி யாரியர், திடுமென முழுமுதற் கடவுட்கொள்கையும் மெய்ப்பொருள் மூதறிவுங் கொண்டாரெனின், குப்புறக் கவிழாத குழவி குதித்தெழுந்தோடின தென்பதொக்கு மன்றோ!

**"பாட்டுரை நூலே *வாய்மொழி* பிசியே**
**அங்கதம் முதுசொல்லோ டவ்வேழ் நிலத்தும்"** (செய்.78)

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
***மறைமொழி* தானே *மந்திரம்* என்ப"** (செய்.176)

என்று தொல்காப்பியங் கூறுவதால், உபநிடதங்கட்கு மூலமான தமிழ் நூல்களெல்லாம் அழிக்கப்பட்டுவிட்டன என அறிக. மேலும், உப-நி-ஸத் என்று பிரியும் உபநிஷத் என்னும் கூட்டுச்சொல்லின் முதன்மையான உறுப்பாகிய ஸத் என்பது, குந்து என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபே.

குத்து - குந்து - ME. squat, L, sed, OE., OS., Sit., Skt. sad, இனி,

**"அடியில் தன்னள வரசர்க் குணர்த்தி**
**வடிவேல் எறிந்த வான்பகை பொறாது**
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரி கோடுங் கொடுங்கடல் கொள்ள**
**வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு**
**தென்றிசை யாண்ட தென்னவன் வாழி."** (சிலப். 11 : 17-22)

என்னும் சிலப்பதிகார அடிகள் பனிமலை கடலுக்குள்ளிருந்து எழுவதற்கும் முந்திய தொன்முது பண்டைக் காலத்திற்கு நம்மைக் கொண்டுபோய் விடவில்லையா?

இம் மாதம் 10ஆம் பக்கல், முற்காட்டிய விளம்பரப்படி, மயிலைச் சீநிவாச சாத்திரி மண்டபத்தில், 'தமிழ்நாட்டுப் பெற்றோர் கழக'த்தின் கூட்டம் மேனாள் சென்னைத் தலைமைத் தீர்ப்பாளர் பர்.பி.வி.இராசமன்னார் தலைமையில் நடைபெற்றது. கழகத்தின் பெயர் 'தமிழ்நாட்டுப் பெற்றோர் கழகம்' என்றிருப்பினும், உண்மையில் அது தமிழ்நாட்டுப் பிராமணப் பெற்றோர் கழகமே. தமிழறியாத தெலுங்கரான இராசமன்னாரும் தமிழ் வரலாற்றறிவும் மொழிநூலறிவுமில்லாத திரு.ம.பொ.சி.யும் இவர் போன்ற இரண்டொருவரும் கலந்துகொண்டதினால், அது தமிழ்நாட்டுப் பெற்றோரனைவரையும் படிநிகர்க்கும் கழகம் ஆகிவிடாது.

மொழிவாரிப் பைதிர (பிரதேச)ப் பிரிப்பின்பின், தமிழ்நாட்டைப் பழஞ்சென்னைக் கூட்டுநாடு போன்றே கருதிக்கொண்டு, தமிழறிவோ தமிழ்ப்பற்றோ இல்லாத தெலுங்கர் தமிழுக்கு மாறான கூட்டங்களிற் கலந்துகொள்வதோடு, தமிழுக்குந் தமிழர்க்குங் கேடு விளைக்கும் கருத்துகளை வெளியிடுவதும், தீர்மானங்களை நிறைவேற்றுவதும் தகாத செயல்களாம். பர். இராசமன்னார் தெலுங்குநாட்டிலோ தமிழ்நாடு தழுவாத இந்தியாவிலோ சமற்கிருதத்தைக் கட்டாயப் பாடமாக்க முயற்சி செய்யின், அதிற் குற்றமொன்றில்லை. ஆயின், தமிழைத் தெலுங்குபோற் கருதிக் கொண்டு, இக்காலத்திலும் தமிழ்நாட்டு மொழித்துறைச் செய்தியில் அவர் ஈடுபடுவது மிகமிகக் கண்டிக்கப்படத்தக்கதாம். சமற்கிருதம் சேரச்சேரத் தெலுங்கு உயருமென்றும் அது தீரத்தீரத் தமிழ் உயருமென்றும், அவர் வேறுபாடறிதல் வேண்டும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களில் ஆரியம் இன்னும் வேரூன்றியிருப்பதனாலும், சென்னைப் பல்கலைக்கழகத் துணைக் கண்காணகராகப் பர். இலக்குமணசாமி அவர்களை இறுதியாகத் தேர்ந் தெடுத்தற்கு அமைக்கப்பட்ட குழுவுறுப்பினர் மூவரும் தெலுங்கரா யிருந்ததற்கு ஓர் எதிர்ப்பும் இன்மையாலும், பழைய நாள்போன்றே தமிழ்நாட்டு நிலைமை என்றுமிருக்குமென்று கருதுகின்றார் போலும்! கோவைப் புதுப்புனைவாளர் (Inventor) திரு. கோ. துரைச்சாமி (ஜி.டி.நாயுடு) அவர்களும் காலஞ்சென்ற பர். வரதராசலு அவர்களும் போன்றவரே தமிழ்நாட்டு மொழித்துறையிலும் ஆட்சித் துறையிலும் தமிழர் போன்றே

ஈடுபடமுடியும். பால்போல் இயல்பாகவுள்ள தமிழ் வேறு; தயிர்போல் திரிந்துள்ள திரவிடம் வேறு என அறிக.

கழகத் தலைவர் திரு கே.பாலசுப்பிரமணிய ஐயர், சமற்கிருத எதிர்கால நிலையைப்பற்றித் திரு. அண்ணாதுரையைத் தாம் வினவிய போது, “அஞ்சற்க! எல்லா ஏந்துகளும் (வசதிகளும்) உங்கட்குத் தரப்படும்” என்று அவர் விடையிறுத்ததாகக் கூட்டத்திற் கூறியுள்ளார். திரு. அண்ணா துரையார் தமிழுக்கு அதிகாரி யன்மையின், அவர் இன்று உடலோ டிருந்திருப்பினும், அவர் கூற்றுச் செல்லாதென உணர்க.

## தமிழ்நாட்டுத் தி.மு.க. அரசிற்கு அறிவுரை

இற்றை யாளுங்கட்சி தன்னுரிமை (சுதந்தரா)க் கட்சியையும் கூட்டணி யுறுப்பாகக் கொண்டிருப்பதாலும், திரு அண்ணாதுரை போன்ற ஆற்றலாளர் இன்று தி.மு.க.வில் இல்லாமையாலும், தி.மு.க. தமிழ்ப் புலவர் பலருள்ளும் ஒருவர்க்கேனும் ஆரியத்தை யெதிர்த்துத் தமிழைக் காக்கும் மதுகையின்மையானும், மயிலைத் தமிழ்நாட்டுப் பெற்றோர் கழகச் சார்பில், ஓய்வு பெற்றவரும் பெறாதாருமான பெரும்பதவியரும் சாய்கால் மிக்க பெருமக்களும் இற்றை முதலமைச்சர் இளைஞரென் றிகழ்ந்து, சமற்கிருதம் தழுவிய மும்மொழித் திட்டத்தைப் பள்ளிகளிற் புகுத்த முனைவராயின், பெருந்தலைகளென்றும் அடுத்த பொதுத்தேர்தலில் தாக்குமென்றும் வீணாக அஞ்சி அவர்க்கு இணங்கற்க. தி.மு.க. ஆட்சிக்கு என்றும் தலையாய அரண் தமிழே என்பதை மறவற்க. ஏற்கெனவே, தி.மு.க. அரசு தமிழைக் காக்கவும் வளர்க்கவும் வாய்த்த சமையங்களையும் வழிகளையும் பயன்படுத்த வில்லை. இரண்டாம் உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு தமிழுக்குக் கேடாக நடந்ததைத் தடுக்கவில்லை. தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாத சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலித் திருத்தத்தையும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பையும் இன்னும் மேற்கொள்ள வில்லை. இனி, சமற்கிருதத்தையும் வலியுறுத்தி இந்திக்கும் வழிவகுப்பின், தமிழ்த்துணை இல்லாது போம் என எச்சரிக்கின்றோம். சட்டப் பொத்தகத்திற் சென்னை நாடென்றிருந்ததைத் தமிழ்நாடென்று மாற்றியதனால் மட்டும் தமிழ் ஒன்றும் வளர்ச்சி யடைந்துவிடாது. தமிழைப் பற்றிய தெளிவான அறிவோ தமிழ்ப் பற்றோ, தமிழைக் காக்கும் மனத் திண்மையோ இல்லாத தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் புகழ்ந்ததனால் மட்டும் தமிழைக் காவாத குற்றம் நீங்கிவிடாது.

## தமிழ்நாட்டுப் பிராமணர்க்கு எச்சரிக்கை

பிராமணர் பாரதக் காலத்திற்கு முன்பிருந்தே பல்வேறு சமையங் களிற் பல்வேறு கூட்டமாகத் தமிழ்நாடு வந்து குடிபுகுந்திருந்தும் இன்னும் இற்றைப் பிராமணர் நக்கீரரும் பரிதிமாற் கலைஞரும்போல் முழுத்தமிழ

ராகவில்லை. பேச்சுமொழி வேறின்மையின் போக்கற்றுப் போய்த் தமிழைப் பேசுகின்றனரேயன்றி, உண்மையான தாய்மொழிப்பற்று அதனிடம் அவர் வைத்திலர். பண்டைத் தமிழரசர் பேதைமையுங் கொடைமடமும் மதப்பித்தமுங் கொண்டிருந்ததினால், அற்றைப் பிராமணர் தம் வெண் ணிறத்தையும் தம் முன்னோர் மொழியின் முழங்கொலிகளையும் வரை யிறந்து பயன்படுத்தித் தம்மை நிலத்தேவரென்றும் தம் முன்னோர் மொழியைத் தேவமொழி யென்றும் கூறி ஏமாற்றி அவர் நம்புமாறு செய்துவிட்டனர். இக்காலத்தும் தமிழைக் காட்டிக்கொடுக்கும் கொண்டான் மாரும் வையாபுரிகளும் பேராயக்கட்சித் தலைவரும் ஒரு சிலரிருப்பினும், அச் சிறுபான்மையரை நம்பித் தம் முன்னோரின் ஏமாற்றுக் கலையைத் தொடரத் துணிவது வரலாற்றறிவும் மொழியாராய்ச்சியும் பரவெளிச் செலவும் மிக்க இக்காலத்திற்கு எள்ளளவும் ஏற்காதென்றும், அதோடு மிகுந்த ஏதத்தையும் விளைக்குமென்றும் அறிந்து, தமிழரைச் சூத்திர ரென்றும் தமிழரசரை அசுரரென்றும் இழித்தும் பழித்தும் தம் முன்னோர் செய்த வழுவாய்க்கெல்லாம் கழுவாய் தேடி, தமிழரொடு உடன்பிறப்பன்பு பூண்டும் தமிழிடம் தாய்மொழிப் பற்றுவைத்தும், உண்மையும் நன்றியறிவும் உள்ளவராக நடந்துகொள்வாராக.

அவ்வாறன்றி, இனிமேலும் அரைச்செயற்கை இலக்கிய நடை மொழியாகிய சமற்கிருதத்தை உயர்த்தித் தமிழைத் தாழ்த்த விரும்புவா ராயின், வருகின்ற கல்வியாண்டுத் தொடக்கத்தில், பள்ளிகளும், கல்லூரி களும் திறந்தபின், சென்னையில் தக்காரான பெரியார் தலைமையில் சமற்கிருத எதிர்ப்பு மாநாடு நடத்தப்பெறும் என எச்சரிக்கின்றோம். தமிழ்க் கலைச்சொல்லாக்கக் குழுத் தலைவரும் தமிழ்நாட்டு வரலாற்றாசிரியரும் தனித்தமிழ்ப் பற்றுள்ளவராகவே இனியிருத்தல் கூடுமென்றும் தெரிவிக்கின் றோம்.

தமிழ் திரவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமும் ஆகும் என்பதிற் பிராமணர்க்கு ஐயமிருப்பின் 1971ஆம் ஆண்டு இறுதியில், தில்லி, இலண்டன், பெர்லின், பாரிசு, மாசுக்கோ, நியூயார்க்கு ஆகிய மாநகரங்களுள் ஒன்றில் உலகமேடையில் தருக்க வாயிலாகச் சமற்கிருதத்தின் உயர்வை நாட்டற்கு இன்றிருந்தே வட்டங்கூட்டுவாராக. "மெய் வெல்லும்; பொய் தோற்கும்." நீண்டகாலம் நிலைத்துவிட்டமையால் ஒருபொய் மெய்யாகி விடாது. இந்திய மொழிகட்கெல்லாம் மூலம் தமிழே யன்றிச் சமற்கிருத மன்று.

சமற்கிருதத்திற்கும், தமிழுக்கும் இடைப்பட்ட வுறவு தாக்கு வோனுக்கும் தற்காப்போனுக்கும் இடைப்பட்டது என்று நாங்கள் உணர்வதால், இப் போராட்டத்தை உயிர்நாடி வினையாகவும், இறுதி முயற்சியாகவுங் கொண்டு, இறைவனருளால் தப்பாது வெற்றிபெற எல்லா வழிகளையுங் கையாளத் திட்டமிட்டுள்ளோம் என்பதையும், தெரிவிக்க

விரும்புகின்றோம். தமிழும் ஆங்கிலமுங் கொண்ட இருமொழித் திட்டமே தமிழ்நாட்டிற் கேற்றது. தமிழர் வழிபாடும் சடங்கும் குமரிநாட்டிற்போல் தமிழிலேயே இனி நடைபெறுதல் வேண்டும்.

சமற்கிருதம் தேவமொழி யென்னும் பழைய ஏமாற்று இனி ஒரு நொடியுஞ் செல்லாது. அது தேவமொழியாயின் தேவருலகிற்கே சென்று விடல் வேண்டும். இது மக்களுலகமாதலின் இங்கு மக்கள் மொழியாகிய தமிழே தலைமையாக வழங்குதல் வேண்டும்.

**- "தென்மொழி" மேழம் 1969**

# தாய்மொழிப்பற்றே தலையாயப்பற்று

தாய்மொழிப் பற்றில்லாத் தன்னாட்டுப் **பற்றே**
தன்னினங் கொல்லவே தான்கொண்ட **புற்றே**

மொழியொன் றில்லாமலே இனமொன்று **மில்லை**
இனமொன்றில் லாமலே நாடொன்று **மில்லை!**

மதியுணர் வின்றியே மடிவெனுந் தூக்கம்
மயங்கிக் கிடக்கின்றாய் மறுத்தெழு **தமிழா!**

கரந்தும் அண்டைவீட்டுள் கால்வைத்த லின்றிக்
கண்மூடித் தூங்குவாய் கடிதெழு **தமிழா!**

வருமானங் குன்றியே வறியவ னானாய்
வாழ்நாள் வீணாகாமல் வல்லெழு **தமிழா!**

அருசுவை யுண்டியே ஆக்கிடின் உன்கை
அருந்த மறுக்கின்றார் ஆய்ந்தெழு **தமிழா!**

ஒலியொடு வரியும்பின் ஒழியவே அண்மை
உறும்தேவ நாகரி உணர்ந்தெழு **தமிழா!**

பார்முதல் பண்பாடு பயின்றவன் **தமிழன்**
பலரையும் உறவெனப் பகர்ந்தவன் **தமிழன்.**

பிறப்பாலே சிறப்பில்லை **தமிழா** – இதைப்
பெருநாவ லன்சொன்னான் **தமிழா!**

மறத்தாலும் திறத்தாலும் **தமிழா** – மேன்மை
மதியறி வொழுக்கத்தால் **தமிழா!**

தமிழினுக் குலகினில் தகுவதே தலைமை
  தமிழரும் அடையவே தாழ்விலா நிலைமை

இமிழ்தரு மொழியியல் எய்துக நலமே
  எமதுமெய் வரலாறே எழுகவே வலமே.

வேனிலிற் கான்மலை வெம்மைகொள் பாலையின்
  விளைநில மாவதிந் **நாடு**

மின்னும்பல் மணிகளும் மிகுவிலை யாற்பெற
  மேலுலகும் விரும்பும் **நாடு**

கொன்றுதன் மகனையே கொடுமையை நிமிர்த்துச்செங்
  கோன்முறை குலவிய **நாடு**

நீலியின் கணவற்கு நிகழ்த்திய வாய்மொழி
  நிறைவேற்றின வேளாளர் **நாடு**

அறியாது முரசணை அயர்ந்திடும் புலவர்க்கும்
  ஆலவட்டம் விசிறும் **நாடு**

சித்தரின் மருத்துவம் சிறந்தபொன் னாக்கமும்
  சிலம்பொடு திகழ்ந்ததிந் **நாடு**

